ஹரி: ஓம்.

ஓம் பரபிர்ம்மணேநம:

# பஞ்சதசோபநிஷத்

## தமிழ்மொழிபெயர்ப்பு.

---

கைவல்லியோபநிஷத் முதலிய

இப்பதினைந்துபநிஷத்துக்கள்,

கோயமுத்தூர் டிஸ்ரிக்ட் கோர்ட் வக்கீலும்

ஸ்ரீபகவத்கீதார்த்ததீபிகை

வாசுதேவ மனனத்தின்

தமிழ்மொழிபெயர்ப்பு

இவைகளுக்கு கருத்தாவுமான

வில்லவரம்பல்

குப்புசாமி அய்யர் அவர்களால்

ஸமஸ்கிருதத்திலிருந்து

தமிழ்ப்பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு

வித்துவான்களால் பரிசோதிக்கப்பட்டன.

---

சென்னைபுரி:

வ. புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

கலியப்தம் - ௪௯௮௯.

ஸர்வஜித்ஸு.



இதன்விலை ரூ-௧. அணா-௨.

ஹரி: ஓம்.

ஓம் பரப்ரம்மணே நம:

# பஞ்சதசோபநிஷத்

## தமிழ்மொழிபெயர்ப்பு.

கைவல்லியோபநிஷத் முதலிய

இப்பதினைந்துபநிஷத்துக்கள்,

கோயமுத்தூர் டிஸ்ரிக்ட் கோர்ட் வக்கீலும்

ஸ்ரீபகவத்கீதார்த்ததீபிகை

வாசுதேவ மனனத்தின்

தமிழ்மொழிபெயர்ப்பு

இவைகளுக்கு கருத்தாவுமான

வில்லவரம்பல்

குப்புசாமி அய்யர் அவர்களால்

ஸம்ஸ்கிருதத்திலிருந்து

தமிழ்ப்பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு

[வி]த்துவான்களால் பரிசோதிக்கப்பட்டன.

---

சென்னைபுரி:

ஊ. புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

கலியப்தம் - ௪௯௮௯.

ஸர்வஜித் ௵.



இதன் விலை ரூ-௧. அணா - ௨.

ஓம் பரபிர்ம்மணே நம:

ஸ்ரீகுரவே நம:

# முகவுரை.

அஷ்டோத்தரசத (நூற்றியெட்டு) உபநிஷத்துக்களில் பதினைந்துபநிஷத்துக்களை * ப்பொருக்கி ஸமஸ்கிருதத்திலிருந்து தமிழ்பாஷையி லவைகள் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன. இவைகளில் மைத்திராயண்ணியுபநிஷத் ஒன்றுக்குமட்டும் ஸ்ரீமத் இராமதீர்த்த ரென்கிற யதீசுவரர் வியாக்கியானம் செய்திருக்கிறார். அந்த வியாக்கியானத்தை அனுசரித்தே நாமும் அர்த்தத்தை கிரகித்தோம். (ஷை வியாக்கியானத்தை அனுசரித்தே ஷை உபநிஷத்திற்கு இ. பி. கௌவேல். யம். எ. என்பவரும் இங்கிலீஷில் மொழிபெயர்த்திருக்கிறார். அந்த மொழிபெயர்ப்பும் சிலாகிக்கத்தக்கதே) இந்த ஒரு உபநிஷத்தைத்தவிர மற்றவைகளுக்கு பாஷிய வியாக்கியானங்கள் கிடைக்கவில்லை. அவைகளி லொன்றான கைவல்லியோபநிஷத்திற்கு ஸ்ரீமத் பகவத் பாதாசாரியரான சங்கராசாரியசுவாமிகளால் பாஷியமும் நூற்றெட்டுபநிஷத்துக்களுக்கும் பரமஹம்ஸரான ஸ்ரீமத் வித்தியாரண்ணிய சுவாமிகளால் வியாக்கியானமும் செய்யப்பட்டிருக்கிறதாக தெரியவருகிறது. அவைகள் எங்களுக்கு கிடைக்கவில்லை. ஆனால் மொழிபெயர்க்கப்பட்டமற்ற பதினான்கு உபநிஷத்துக்கள் பாஷியம் அல்லது வியாக்கியானமில்லாமலே சுலபமாய் அர்த்தமாகிறபடியால் நாமே மொழிபெயர்க்கலாமென்று வித்வான்களாகிற என் சிநேகிதர்கள் சொல்லி அவ்விதமாய் சகாயித்தபடியால் அப்படிச்செய்யத் துணிந்தேன். இந்த உபநிஷத்துக்களும் இவைபோலொத்த மற்றும் சில உபநிஷத்துக்களும் சுலபமாய் அர்த்தமாகக் கூடியதாயிருக்கிறதினாலேயே அவைகளுக்கு ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளால் பாஷியம் செய்யாமல் விடப்பட்டதாக நினைக்கவேண்டியதா யிருக்கிறது.

௨. உபநிஷத்துக்க ளின்னதென்பதும் அவைகளின் மகிமையும் பிரயோஜனமு மிப்படிப்பட்டதென்பதும் பலருக்குத் தெரிந்திருந்

---

* ௧. கைவல்லியோபநிஷத். (௧௨)
௨. நாராயணோபநிஷத். (௧௮)
௩. அமிருதபிந்தூபநிஷத். (௨௦)
௪. மைத்திராயண்ணியுபநிஷத். (௨௪)
௫. மைத்திரேயோபநிஷத். (௨௯)
௬. சர்வசாரோபநிஷத். (௩௩)
...லம்போபநிஷத். (௩௪)
...மபோதோபநிஷத். (௪௨)
௯. நாரதபரிவிராஜகோபநிஷத். (௪௩)
௧௦. ஸ்கந்தோபநிஷத். (௫௧)
௧௧. பைங்களோபநிஷத். (௫௯)
௧௨. சாரீரகோபநிஷத். (௯௨)
௧௩. வராகோபநிஷத். (௯௮)
௧௪. கலிசந்தாரணோபநிஷத். (௧௦௩)
௧௫. முக்திகோபநிஷத். (௧௦௮)

தாலும் தெரியாத சிலர்பொருட்டு அவைகளின் சுவரூபம் சுருக்கமாய் இவ்விடத்தில் எடுத்துச் சொல்லப்படுகிறது. உபநிஷத்தும் வேதமே. இந்தவேதம் யாரால் எப்போது என்னத்திற்காக உண்டாக்கப்பட்டதென்றாலோ, ஈசுவரன் உலகத்தை சிருஷ்டிக்க இச்சித்து செய்யும் பிரதி சிருஷ்டியிலும் முதலிலுண்டாக்கப்பட்ட புருஷனுக்கு (ஆரியர்கள் இந்த புருஷனை விராட் என்றும் பிர்ம்மாவென்றும் ஹிரண்ணியகருப்ப னென்றும் பின்னும் பலபெயர்களாலழைக்கிறார்கள்) உபதேசம் செய்தார். பிறகு அந்த ஆதிபுருஷன் தனக்குப்பிந்தி சிருஷ்டியானவர்களுக்கு உபதேசம் செய்தார். அவரவர்கள் தங்கள் தங்கள் சிஷியர்களுக்கு உபதேசம் செய்தார்கள். ஆதிபுருஷனும் அவருக்கு அடுத்து பிந்தியுண்ட[illegible]சிலரும் தவிர மற்றவர்கள் வேதம் முழுவதையும் அத்தியயனம்செய்ய சக்தியற்றவர்களாய் சிலசில பாகத்தை சிலர் சிலர் அத்தியயனம் செய்தார்கள். அ[illegible] வேதம் ஈசுவரனால் வெளியிடப்பட்டதென்று சொன்னதினால் வேதம் "அநாதி" என்ற வாக்கியத்திற்கு விரோதமல்லவோ என்றால், அப்படியல்ல. அநாதி என்றதின் தாத்பரிய மென்னவெனில், பிரதி மகாப்பிரளயத்திற்குப் பிறகு சிருஷ்டிகாலந்தோறும் உபதேசிக்கப்படுகிறதேயன்றி இன்னகாலத்தில் முதலில் வெளிப்படுத்தப்பட்டதென்பது தெரியாததனாலே அநாதி என்று சொல்லப்படுகிறது. வேதத்திற்கு கருத்தாவே இல்லையென்று சிலரும் வேதம் வெகுகாலத்திற்கு முந்தியிருந்த மகரிஷிகளால் வெளியிடப்பட்டதென்று சிலரும் சொல்லுகிறார்களே என்றாலோ, கருத்தா இல்லையென்பதின் தாத்பரியமானது சிருஷ்டிக்குள் பட்டவர்களால் வெளியிடப்பட்டதல்லவென்பதே. மகரிஷிகளால் வெளியிடப்பட்டதென்று சொல்லுவது பொருமைகொண்ட சிலவேதத் துவேஷிகள் சொல்லும் வார்த்தையேயன்றி விவேகிகள் அப்படிச்சொல்லுகிறதில்லை. ஈசுவரனே ஒருவனில்லையென்று வாதிக்கிற சார்வாகிகள் வேதத்தைப்பற்றி எதைத்தான் சொல்லத் துணியார்கள். அவர்களை வேதத்தை நம்பும்படி நாம் சொல்லுகிறதில்லை. ஈசுவரன் ஒருவனுண்டு, அவன் சர்வக்ஞன், சர்வசக்தன், எங்கும் பரவியவன், சர்வாந்தரியாமி, இவ்வுலகத்தை சிருஷ்டித்து காத்து அழிப்பவன் அவனொருவனே, அவனுக்கு மேலானவனும் சமானமானவனுமில்லை, என்று எவர்கள் நம்புகிறார்களோ அவர்கள் வேதத்தையும் நம்பவேண்டியவர்கள்தான். மேல்க்கண்ட அநேகமகிமையுள்ள ஈசுவரனை, அற்பஞானம், அற்பசக்தி, நிலையற்ற மனம், துற்பலம் பிறப்பிறப்பு மூப்பு முதலிய துன்பங்கள், இவைகளுக்குள்ளாயிருக்கிற மனிதன் அறியவும் அவருடைய மகிமையை விவரித்துச் சொல்லவும் எழுதவும் அப்படி சொன்னதை அல் தினதை அவனைப்போலொத்த மற்ற மனிதர்கள் நம்பி அ

தும் முற்றிலும் ஒவ்வாதவிஷயம். ஒரு சாதாரண அரசன் தன் தேசத்திற் குள்பட்ட பிராணிகளை ஆளும்விஷயத்தில் தன் ஆக்ஞையை ஜனங்கள் அறிந்துகொள்ளும்பொருட்டு சட்டங்கள் செய்யவேண்டியது அத்தியாவசியமா யிருக்கிறது. அப்படியிருக்க சகல உலகத்திற்கு அரசனும் அவ னிப்படிப்பட்டவனென்று ஜனங்கள் சாதாரணமாய்த் தெரிந்துகொள்ள கூடாதவனுமான ஈசுவரன், தன்னால் ஆளப்படும் ஜனங்கள் தன் ஆக்ஞையை அறிந்து நடந்துகொள்ள ஒருசட்டம் செய்திருப்பானென்பது நிச்சந்தேகமான விஷயம். ஆகையால் வேதத்திற்கு சர்வகருத்தர்வான ஈசுவரனைத்தவிர வேறெ கருத்தா இல்லை. சுருதி ஸ்மிருதி முதலியன ஈசுவரனுடைய மூச்சுக் காற்றென்று உபநிஷத்களிலும் * சொல்லப்பட்டிருக்கிறது.

௩. வேதங்கள் ஈசுவரனாலேயே வெளியிடப்பட்டிருக்குமானால் அவராலேயே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற சகல தேசத்திலும் சகல மனிதர்களுக்குள்ளும் ஒரேமாதரியாயிராமல் ஆரியர்களுடைய வேதத்திற்கும் கிரிஸ்தவர்களுடைய் வேதத்திற்கும் மகம்மதியர்களுடைய வேதத்திற்கும் இன்னும் பலமதஸ்தர்களுடைய வேதத்திற்கும் ஒன்றுக்கொன்று ஒற்றுமையில்லாம லிருக்கவேண்டிய தென்னவென்று லோ, முன் சொல்லியிருக்கிறவிதமாய் ஆதி புருஷனிடத்திலிருந்து உபதேசம் பெற்றவர்கள் தாங்கள் எந்தபாகத்தை தம்தம் சிஷியர்களுக்குச் சொன்னார்களோ அந்தந்த சிஷியர்கள் தங்கள் சிஷியர்களுக்கு எதைதை சொன்னார்களோ அப்படியே பரம்பரையாய் அந்தந்த சிஷியர்கள் அந்தந்த வேதபாகத்தை தாம் தாம் வசித்த தேசத்தில் அத்தேசத்திய ஜனங்களுடைய குணம், சக்தி, அறிவு முதலியவைகளுக்குத் தக்கதாக எவ்வளவுபாகம் யாரால் எவ்விதமாய் அனுஷ்டிக்க கற்பிக்கப்பட்டதோ அதுதான் முக்கியமான வேதமென்று நம்பி அனுஷ்டித்தார்கள். ஆரியர்கள்தவிர மற்ற தேசத்தார்களுக்கு நாளாவட்டத்தில் சிம்ஸ்கிருத பாஷாஞானம்குன்றி அப்பாஷையிலிருந்து திரிபடைந்த பல் பாஷைகளைக்கற்று காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கபடி தாங்கள் நம்பியிருந்த வேதபாகங்களை அந்தந்த பாஷைக

* “ஸயதார்த்ரைதாக்நேரப்யாஹிதாத் ப்ருதக் தூமா விநிச்சரந்த்யேவம்வா அரேஸ்ய மஹதோ பூதஸ்ய நிச்வஸிதமேதத் ருக்வேதோ யஜுர்வேத ஸாமவேதோ தர்வாங்கிரஸ இதிஹாஸ: புராணம்வித்யா உபநிஷத: ச்லோகா: ஸூத்ராண்யநு வ்யாக்யாநாநி வ்யாக்யாநாந்யஸ்யைவைதாநி ஸர்வாணி நிச்வஸிதாநி = அக்கினியிலிருந்து புகை எழும்புவதுபோல், ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வண வேதம், இதிஹாஸம், புராணம், வித்தை, உபநிஷத்துக்கள், சுலோகங்கள், சூத்திரங்கள், அநுவியாக்கியானங்கள் வியாக்கியானங்கள், ஆகிய இவைகள் பிரம்மத்தினுடைய சுவாஸங்களே. பிரகதாரண்ணிய கோபநிஷத் - ௪ - ௪ - ௧0.

ளில் எழுதிவைத்தும் அவைகளை காலாகாலங்களில் யுக்தி அனுபவங்களுக்கிணங்க தித்துப்பாடு செய்துகொண்டும் அனுஷ்டானம் செய்துவந்தார்கள். ஆரியர்களோ ஸம்ஸ்கிருத பாஷையைக் கைநழுவ விடாமலும் வேதத்தை அத்தியயனம் செய்வதை விடாமலும் வேதங்களில் சொல்லியவிதமாய் ஆத்மஞானத்தை அடைய முயற்சிசெய்தும் வேதத்தில் ஏதேனும் யுக்திக்கும் அனுபவத்திற்கும் ஒற்றுமையில்லையென்று காணப்பட்டாலுங் கூட அது “ஈசுவர வாக்கியமானதால் அதில் தோஷம்சொல்ல அற்பஞானமுள்ள மனிதர்கள் தகுந்தவர்களல்ல. நமக்கு பூர்ணஞான மில்லாததினால் வேதத்தினிடத்தில் ஏதோ தோஷம் காணப்படுகிறது அப்படி காணப்பட்டாலும் அது நம்ம புத்திக்குறைவினா லுண்டான தோஷமேயன்றி சர்வக்ஞனான ஈசுவரனால் சொல்லப்பட்ட வாக்கியத்தில் தோஷ மிருக்கமாட்டாது” என்று நம்பி அனுஷ்டித்து வந்தார்கள்.

௪. ஈசுவரனிடத்திலும் வேதத்தினிடத்திலும் உள்ள மகிமைகளை அறிந்தவர்களில் முதல்மையானவர்கள் ஆரியர்களே. அவர்களில் அநேகர்கள் நல்ல யோகிகளாயும் ஞானிகளாயும் வேதத்தை பூர்ணமா யறிந்தவர்களாயு மிருந்தார்கள். அப்படி இருந்தும் காலக்கிரமத்தில் வேதாத்தியயனம் குறைவுபட்டுப்போய் வேதமானது கோர்வையன்றி சிதரிப்போனபடியால் அதைச் சீர்ப்படுத்த விஷ்ணு அம்சத்தினால் அவதாரம்செய்த வேதவியாச மகாமுனியானவர் வேதத்தில் எவ்வளவுபாகம் ஆரியர்க் குள்ளிருந்ததோ அவ்வளவை ருக் எஜுஸ் சாமம் அதர்வண மென்பதாக பிறித்து தன் சிஷியர்களுக்குச் சொன்னார். அந்த சிஷியர்கள் அந்த ஒவ்வொருபாகத்தையும் அநேகபாகமாய்ப் பிரித்தார்கள். அப்படிப் பிரித்தவைகளுக்கு வேதசாகைகளென்றுபெயர். ருக்வேதத்தில் ௨௧ - சாகைகள், எஜுர்வேதத்தில் ௧௦௯ - சாகைகள், சாமவேதத்தில் ௧௦௦௦ - சாகைகள், அதர்வணவேதத்தில் ௫௦ - சாகைகள், இப்படி ௧௧௮௦ - சாகைகளுண்டு. ஒவ்வொருசாகையின் முந்தியபாகம் யக்ஞயாகாதி நித்திய நைமித்திக கருமங்களையும் அவைகளை அனுஷ்டிக்கவேண்டிய விதங்களையும் செய்யத்தக்க அதிகாரியையும் செய்விக்கிறவர்களின் யோக்கியதையையும் ஆராதிக்கவேண்டிய தேவதைகளையும் அந்த தேவதைகளைப்பற்றிய மந்திரங்களையும் அந்தந்த கருமங்களின் பலன்களையும் பின்னும் அக்கரும சம்பந்தமான பல விஷயங்களையும் சொல்லுகிறது. அதினால் இது கருமகாண்டமென்று சொல்லப் படுகின்றது. பிந்திய பாகமானது ஈசுவரனை உபாசிக்கும் மார்க்கமாகிய சாங்கியயோகம் நிஷ்காம கருமயோகம் தபசு சகுண நிர்க்குணப் பிர்ம்மோபாசனாவிதி ஆத்ம லக்ஷணம் கருமசந்நியாசம் பக்தி வைராக்கியம் முதலியவைகளையும் அவைகளுக்கு அங்கங்களான பல விஷயங்களையும் சொல்லுகின்றது. இவை

ஞானகாண்டமென கூறப்படுகின்றது. இப்படிப் பிரிக்கப்பட்ட விவ
ரங்களை முக்திகோபநிஷத்திலும் விஷ்ணுபுராணம் முதலிய புராண
ங்களிலும் காணலாம். மனப்பாடம் செய்யப்பட்டுவந்த கருமகாண்ட
ஞானகாண்டங்களாகிய வேதங்கள் கலியுகத்தில் மறைந்துபோகு மெ
ன்பதை அறிந்த சில மகரிஷிகள் எழுதிவைத்தார்கள். அவைகளில்
அநேகம் இக்காலத்தில் காணப்படவில்லை. மூலைக்கொன்றாய்ச் சிதரிப்
போயின. ஆனால் இப்போது முக்கியமான நூற்றி எட்டு உபநிஷத்
கள்மாத்திரம் கண்டுபிடித்து அச்சிடப்பட்டிருக்கின்றன. அவைகளை
ஆராய்ந்து அவைகளில் சொல்லிய பல மார்க்கங்களில் எந்த மார்க்க
மானது தன்னுடைய சக்திக்கும் பலத்திற்கும் குணமுதலானதற்கும்
தகுந்ததென நம்பப்படுகிறதோ அதையே சரியாய் அனுஷ்டிப்பானு
கில் அவனவன் முயற்சிக்குத் தக்கதாக இந்த ஜன்மத்திலேயேயாவது
இன்னும் சில ஜன்மங்களுக்குப் பிறகாவது ஞானமடைந்து மோக்ஷ
மடைவானென்பதில சந்தேகமில்லை.

௫. வேதமானது ஈசுவரனுடைய வாக்கியமாகவே யிருந்தால்
மனிதர்கள் அந்த ஈசுவரனை அறிந்து கடைத்தேருவதற்கு ஓரோமார்
க்கத்தை வெளியிடாமல் ஒன்றுக்கொன்று வித்தியாசமாய் பலமார்க்
கங்களை சொல்லுவானே என்றாலோ, சர்வகாருண்ணியமுள்ள பகவா
னால் சொல்லப்பட்டதான அந்த வேதமானது அப்படிதா னிருக்க
வேண்டியது. ஏனென்றால், உலகத்திலுள்ள சகலப் பிராணிகளு
டைய புத்தி சக்தி குணம் தேகபலம் மனவுறுதி முதலியவைகள்
ஓரேவிதமா யிருக்குமாகில் அவர்கள் அறிந்து அனுஷ்டிக்கவேண்டிய
தாக வேதமும் ஓரோமார்க்கத்தைச் சொல்லியிருக்கும். நற்கெதியடை
ய சாதன மிதுதானென்று வேதம் வற்புறுத்துமானால் அதை அனுஷ்
டிக்க எல்லாரும் சக்தர்களாகமாட்டார்கள். எப்படியென்றால், யோக
த்தினாலேயே ஈசுவரனையறிந்து சகலப் பிராணிகளும் கடைத்தேர
வேண்டுமென்று விதி இருக்குமானால், ஸநகாதி யோகிகள்போலொ
த்த சிலர்மட்டும் அந்தப் பிரயோஜனத்தை யடையவும் மற்ற சகலரும
யாதொருவிதமான பிரயோஜனத்தையும் அடையாமல் போகவும் கா
ரணமாகும். தபசினாலேயே நற்கெதி அடையவேண்டுமென்று ஓரே
விதியாய் ஏற்பட்டிருக்குமாகில் விசுவாமித்திரர் முதலிய மகரிஷி
கள்போலொத்த தபசிகள்தவிர மற்றவர்கள் யாதொரு பிரயோசன
த்தையும் அடையமாட்டார்கள். ஆகையால கருணைக்கடலான பக
வானானவர் அவனவனுடைய புத்தியுக்தி, சக்தி, குணம் காலம் தே
சம் முதலியவைகளுக்குத் தக்கதாய் எவனெவனுக்கு எதெதில் பக்தி
விசுவாசம் நம்பிக்கை பற்றுதலுண்டாகிறதோ அந்தந்தவகையை பின்
பற்றி அதில் பக்தி விசுவாசமுண்டாய் அதின்பேரில் ஆராய்ச்சிசெ
ய்து இப்படி வெகு ஜன்மங்களில் பகவானிடத்தில் நம்பிக்கைவைத்து

அவருடைய ஆக்ஞைக் குள்ப்பட்டு நடந்துவந்தால் கடைசியில் ஞான மடைந்து மோக்ஷமடைய வழிகற்பிக்கப்பிட் டிருக்கிறது.

சா. உலகத்தில் ஏற்பட்டிருக்கிற அநேக மதங்களில் எது புத்தி யுக்திக்கு ஒத்ததாயும் சுலபமாய் அனுஷ்டிக்கக் கூடியதாயு மிருக்கிற தோ அதை ஏன் அனுஷ்டிக்கக் கூடாதென்றாலோ, ஒருவன் உல கத்லுள்ள ஒவ்வொரு மதத்திற்கும் ஆதாரமானவேதம் முதலிய கிரந் தங்களைப் பரிசோதித்துப் பார்த்து நிர்தோஷமானதாகஒருமதத்தைக் கண்டுபிடிப்பானானல் அவன் அந்தமதத்தை அனுஷ்டிக்கலாம். ஒரு வன் இப்படிப் பரிசோதிக்கபுகுந்தால் சமுத்திரஜலத்தை உழக்கினல் அளக்க புகுந்தவனுக்கொப்பாவான். மதமென்பதி லெல்லாம் புத்திக் கெட்டாதவும் யுக்திக் கொவ்வாதவும் விஷயங்களிருக்கு மென்பதில் சந்தேகமே இல்லை. ஏனென்றால் மதமென்பது மனிதனுடைய அபி ப்பிராயத்தின்பேரில் ஏற்படுத்தப்பட்டதுதான். அற்ப ஞானமுள்ள மனிதன் சர்வக்ஞனன பரமாத்துமாவைக்குறித்து சொல்வதில் ஏதே னும் குறைவு காணப்படுமென்பதில் சந்தேகமில்லை. அப்படிப்பட்ட குறைவு ஒவ்வொருமதத்திலும்தா னிருக்கிறது. ஆகையினலே ஒவ் வொருவனும் தன் முன்னேரெல்லாம் அனுஷ்டித்துவந்த மதமெது வோ அதையே பின்பற்றினல் நற்கெதி அடையலாமேயன்றி வேறே எந்தமதத்தில் புகலாமென்று அலைகிறவன் சகலகுண லக்ஷண் சம்பன் னளாயிருக்கிற அக்கினிசாக்ஷியாய் கல்யாணம்செய்த பெண்ஜாதியை வயிறெரியவிட்டு வியபசாரம் செய்கிறனுக் கொப்பாவான். மேலும் அப்படிப்பட்டவன் ஒருநிலையற்ற சுவபாவ முள்ளவனுகையால் அந்த இரண்டு மதத்தார்களாலும் நிந்திக்கப்பட்டவனுகவு மாகிறான்.

எ. ஆரியர்களைப்போல மதவிஷயத்தில் பாடுபட்டவர்கள் எந்த தேசத்திலுமில்லை என்பது உலகப்பிரசித்தம். மற்றதேசத்தாரைவிட ஆரியர்கள் யோகசாஸ்திரத்தில் தேர்ந்தவர்கள். யோகாப்பியாச மார் க்கமே மற்றவர்களுக்குத் தெரிந்திருந்ததில்லை. அப்படி யோகத்தில் நிபுணர்களான மேன்மைபொருந்திய மகரிஷிகள் ஆரியர்களுக்குள் வெ குபெய ரிருந்தார்கள். அவர்கள் நம்முடைய க்ஷேமத்தின்பொருட் டே அநேக கிரந்தங்களை வெளிப்படுத்தி யிருக்கிறார்கள். அப்படிப் பட்ட மகாத்துமாக்களுடைய மார்க்கத்தையே நாமும் பின்பற்றி நற் கெதி அடைவோமென்ற உறுதியுடன் முயன்றால் அதற்குப்பயன் சர் வக்ஞனன ஈசுவரன் அளிப்பானென்பதில் அற்பங்கூட சந்தேக மில்லை.

அ. இந்த உபநிஷத்களை மொழிபெயர்க்கும் விஷயத்திலும் அச்சிட்ட புருப்களைப்பார்த்து திருத்தும் விஷயத்திலும் விவேகிக ளும் வேதாந்தவிசாரணை செய்துகொண்டிருக்கிறவர்களும் லோகோப

காரமாய் பாடுபடுகிறவர்களும் என்னுடைய சிநேகிதர்களுமான ஆச்சரிய தர்ப்பணமென்னு கிரந்தத்திற்கு கருத்தாவாகிய பென்ஷன் சிரஸ்தேதார் பிர்ம்மஸ்ரீ பொன்முடி வெங்கட்டரமணய்யர் அவர்களும் பென்ஷன் டிப்ட்டி கலேகட்டரான வெங்கடேசய்யர் அவர்களுமே பூர்ணமான மனதுடனும் விடாமுயற்சியுடனும் ஊக்கத்துடனும் எடுத்துக்கொண்ட பிரயாசையினுல் இந்த மொழிபெயர்ப்பு முடிவாய் அச்சிடப்பட்டது.

நான் அவர்கள் கைதுரும்புபோல அவர்கள் சொன்னதை எழுதினேனேயன்றி நான் சுவயமாய் மொழிபெயர்க்கத்தக்க சாமர்த்தியமுள்ளவனல்ல வென்பதை ஸ்ரீபகவத் கீதார்த்ததீபிகையின் முகவுரையிலேயே சொல்லியிருக்கிறேன். இப்படிப்பட்ட பரோபகார சிந்தையுள்ள மகான்களுக்கு அந்த பரமாத்துமாவானவர் நித்தியசுகத்தை அளிக்கவேண்டுமென்று நான் பிரார்த்திக்கிறேன்.

இந்த உபநிஷத்துக்களில் சுலபமாய் தாத்பரிய மறியக்கூடாத சில விஷயங்களுமுண்டு. அப்படிப்பட்டவைகளுக்கு புத்திக்கு தோன்றியவரையில் அர்த்த மெழுதப்பட்டிருக்கிறது. அவைகளின் விசேஷார்த்தம் தெரிந்திருக்கிற பெரியோர்கள் இதில் எழுதிருக்கும் அர்த்தம் பிசகாயிருந்தால் அதைப்பற்றி ஆயாசப்படாமல் மன்னிப்பார்களென்று பிரார்த்திக்கிறேன்.

ஸர்வசித்ஞு
வையாசிமீ } வீ. கு.

ஹரிः ஓம்.

பரப்பிர்ம்மணே நமः

யஜுர்வேதத்தில்

# கைவல்லியோபநிஷத்.

---

(ஸஹநாவவது சாந்திः)

ஸ்ரீகுரவே நமः.

ஹரிः ஓம்; அத = பிறகு (சாதனசதுஷ்டய சம்பத்தியை யடைந்தபிறகு) ஆசுவலாயனர் என்பவர், பகவானாகிய பிரும்மாவிடம் சென்று ஓ! பகவானே! சிரேஷ்டமானதாயும் எப்போதும் சத்துக்களாலே உபாசிக்கத்தக்கதாயும் இரஹசியமானதாயும் எதினாலே ஞானியானவன் சீக்கிரமாக சகலபாபத்தையும் போக்கடித்துக்கொண்டு சிரேஷ்டத்திற்கும் சிரேஷ்டமான புருஷனை யடைவனோ அப்படிப்பட்டதாயிருக்கிற பிர்ம்மவித்தையை உபதேசிக்கவேண்டுமென்று கேட்டார். அவர்பொருட்டு பிரும்மா சொல்லுகிறார். சிரத்தை பக்தித்தியானம் யோகம் இவைகளால் அறி. கருமத்தினாலேயாவது புத்திரன் முதலான சந்ததிகளினாலேயாவது பொருளினாலேயாவது மோக்ஷ மடைகிறதில்லை. சந்நியாச மொன்றினாலேயே அமிருதத்துவத்தை (மோக்ஷத்தை) அடைந்தார்கள். சுவர்க்கத்திற்கு மேலானதாயும் ஹிருதய குகையி லிருப்பதாயும் எது விளங்கிறதோ அதை (அந்தப் பிர்ம்மத்தை) வேதாந்த விக்ஞானத்தினால் செவ்வையாய் நிச்சயிக்கப்பட்டிருக்கிற அர்த்தத்தை யுடையவர்களாயும், * சந்நியாச யோகத்தினாலே பரிசுத்தமான அந்தக்கரணத்தை யுடையவர்களாயு மிருக்கிற யதிகள் பிரவேசிக்கிறார்கள் (அமிருதத்துவத்தை அடைகிறார்கள்). அந்தயதிகளெல்லோரும் சரமஜன்ம (கடைசிஜன்ம) த்தின்முடிவில் பிரும்மலோகங்களில் பரமாத்துமாவை யடைந்து (பிரும்மாவினுடைய சத்தியலோகத்திலாவது விஷ்ணுவினுடைய வைகுண்டலோகத்திலாவது ருத்திரனுடைய கைலாசத்திலாவது சிரேஷ்டமான ஆத்மோபாசனையையடைந்து) செவ்வையாய் விடுபடுகிறார்கள் (மோக்ஷமடைகிறார்கள்). ஜனங்களில்லாதவிடத்தில் சுகமான ஆசனத்திலிருந்துகொண்டு பரிசுத்தமான மனதையுடையவனாய், கழுத்து சிரசு தேகம் இவைகளைச்

---

* சந்நியாசம், யோகம், இவைகளினாலே அல்லது சகலத்திலும் விரக்தியடைந்து யோகம் செய்வதினாலே.

சமமாய்(ஒழுங்காய்)வைத்துக்கொண்டு, வருணாசிரமதருமங்களை விட்டவனாய், சகல இந்திரியங்களையும் அடக்கி பக்தியோடு தன்குருவை வணங்கி, ஹிருதய புண்டரீகத்தை இரஜோகுணமற்றதாயும் சுத்தமானதாயும் பாவித்து, அதின் மத்தியில் பரிசுத்தராயும் துக்கமற்றவராயும், சிந்திக்கக்கூடாதவராயும், காணக்கூடாதவராயும், முடிவற்ற ரூபங்களை யுடையவராயும், மங்கள சுவரூபராயும், மிகவும் சாந்தராயும், மோக்ஷசுவரூபராயும், மாயைக்கு உற்பத்தி காரணராயும், ஆதிமத்தியாந்த மில்லாதவராயும், ஒருவராயும், எங்கும் பரவினவராயும், ஞானானந்த சுவரூபியாயும், ரூபமற்றவராயும், ஆச்சரியகரராயும், பிரபுவாயும், முக்கண்ணுடையவராயும், நீலகண்டராயும், சாந்தமுடையவராயும், உமை (பார்வதி) யுடன் கூடியிருக்கிறவராயு மிருக்கிற பரமேசுவரரைத் தியானம்செய்து, முனியானவன், சகலத்திற்கும் சாக்ஷியாயும், அக்ஞானத்திற்குப் புறம்பானதாயும், பூதங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாயு மிருக்கிற பரமாத்துமாவை யடைகிறான். அவரே பிரம்மா. அவரே சிவன். அவரே இந்திரன். அவரே நாசமில்லாதவர். அவரே உத்தமர். அவரே தானாய் விளங்குகிறவர். அவரேவிஷ்ணு. அவரே பிராணன். அவரே காலன். அவரே அக்கினி. அவரே சந்திரன். உண்டாயிருக்கிறதும் இனி யுண்டாகப்போகிறதுமாகிய எல்லாம் அவரே. சாசுவதமாயுள்ளவரும் அவரே. அவரை அறிந்து மிருத்துவை தாண்டுகிறான். முக்திக்கு வேறுவழியில்லை. சர்வபூதங்களிலும் தன்னையும் தன்னிடத்தில் சகலபூதங்களையும் செவ்வையாய் பார்க்கிறவன் பரப்பிர்ம்மத்தை யடைகிறான். மற்ற ஏதுவினாலல்ல. தன் தேகத்தை அரணி (யாகத்தில் எதிலிருந்து கடைந்து அக்கினி எடுக்கப்படுகிறதோ அந்த அடிமரக்கட்டை) யாகவும் பிரணவ (ஓங்கார) த்தை மத்தாகவும் செய்துகொண்டு கடைதலாகியத்தியான அப்பியாசத்தினால் பண்டிதனானவன் (வித்வானானவன்) அக்ஞானத்தை எரித்துவிடுகிறான். அவனே (அந்தப் பரமாத்துமாவே) மாயையினாலே மோகிக்கப்பட்ட அந்தக்கரணத்தை யுடையவனாய் சரீரத்தையடைந்து சகலத்தையும் செய்கிறான். அவனே ஜாக்கிரதவஸ்தையில் ஸ்திரீ அந்நபானாதிவிசித்திர போகங்களினால் திருப்தியடைகிறான். சுவப்னத்தில் ஜீவனானவன் தன்னுடைய மாயையினால் கற்பிக்கப்பட்ட சகலமான லோகத்திலேயும் சுகதுக்கங்களை அனுபவிக்கிறவனாகிறான். சுஷுப்தி காலத்தில் சகலமும் லயமடைந்திருக்கையில் அக்ஞானத்தினால் சூழப்பட்டவனாய் சுக சுவரூபத்தை யடைகிறான். மறுபடி ஜன்மாந்திர கருமத்தின் சம்பந்தத்தினால் அந்த ஜீவனே (தூக்கத்தில் அல்லது அக்ஞானத்திலிருந்து) விழித்துக்கொண்டு மறுபடியும் சுஷுப்தியை யடைகிறான். (ஸ்தூல சூக்ஷ்ம காரணங்களாகிற) மூன்று தேகத்திலும் கிரீடித்து (விளையாடி) க்கொண்டிருக்கிற ஜீவனெவனோ அவ

ணிடத்திலிருந்து விசித்திரமான சகலமு முண்டாகிறது. சகலத்திற்கும் ஆதாரமாயும், ஆநந்தமாயும், அகண்ட ஞானமாயுமிருக்கிற அவனிடத்தில் மூன்றுதேகங்களும் லயத்தை யடைகின்றன. இவனிடத்திலிருந்து பிராணன், மனது, சகலமான இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம் சகலத்தையும் தாங்குகிற பூமி இவைக ளுண்டாகின்றன. சர்வசுவரூபியாயும் இந்தப் பிரபஞ்சத்திற்கு முக்கிய இருப்பிடமாயும் சூக்ஷ்மத்திலும் அதி சூக்ஷ்மமாயும், நித்தியமாயுமிருக்கிற பரப்பிர்ம்மமெதுவோ அது நீ. நீயே அது. ஜாக்கிரசுவப்ந சுஷுப்தி முதலியவைகளில் எந்தப் பிரபஞ்சம் விளங்கிக்கொண்டிருக்கிறதோ அது பிர்ம்மமே. அது "நானே" என்றறிந்தால் சகல பெந்தத்திலிருந்தும் விடுபடுகிறான். (இப்படி பெந்தத்திலிருந்து விடுபடுவதுதான் மோக்ஷமென்று சொல்லப்படுகிறது). மூன்று ஸ்தானங்களிலேயும் (ஸ்தூல சூக்ஷ்ம காரண் தேகங்களிலேயும்) புஜிக்கத்தக்கது புஜிக்கிறவன் போகமென்பதே தேதுண்டோ அதைக்காட்டிலும் அந்நியனாயும் சாக்ஷியாயும் சின்மாத்திரமாயு மிருக்கிற சதாசிவன் நான்தான். என்னிடத்திலிருந்தே சகலமு முண்டாகிறது. என்னிடத்திலேயே சகலமு மிருக்கிறது. என்னிடத்திலேயே சகலமும் லயமடைகிறது. அந்த அத்துவயமான பிர்ம்மம் நானே. அணுவைக்காட்டிலும் அணுவாயிருக்கிறேன். அப்படியே (மகத்தைக்காட்டிலும்) மகானாயு மிருக்கிறேன். விசித்திரமான இந்தப் பிரபஞ்சமும் நானே. பழமையானவன் நான்தான். புருஷனும் நான்தான். ஈசனும் நானே. நான் ஜோதி சுவரூபியாயும் மங்கள சுவரூபியாயு மிருக்கிறேன். நான் கைகா லில்லாதவன் (அப்படி யிருந்தாலும்) சிந்திக்கக்கூடாத சக்தியை யுடையவன். கண்ணில்லாமல் பார்க்கிறேன். காதில்லாமல் கேட்கிறேன். நான் சகலத்தையு மறிவேன். ஓரேவிதமான ரூபமுள்ளவன். என்னை (பூர்ணமாக) அறிகிறவனில்லை. நான் எப்போதும் சித்சுவரூபி. எல்லா வேதங்களினாலேயும் அறியத்தகுந்தவன் நானே. வேதாந்த சம்பரதாயத்தைச்செய்த குருவும் நானே. வேதாந்தார்த்தங்களை அறிந்தவனும் நானே. எனக்குப் புண்ணிய பாபமுமில்லை. நாசமுமில்லை. ஜன்ம தேகேந்திரிய புத்திகளுமில்லை. எனக்கு பூமி ஜல அக்கினி யில்லை. வாயுவுமில்லை. ஆகாசமுமில்லை. ஹிருதயகுகையி லிருக்கிறவும் உருவற்றவும் இரண்டாவதற்றவும் சகலத்திற்கும் சாக்ஷியானவும் சத் அசத்த[illegible]வுமான பரமாத்தும ரூபத்தை அறிந்து பரமாத்தும ரூபத்தை யடைகிறான்.

எவன் சதருத்திரீயத்தை (யஜுர்வேதத்தில் சேர்ந்த இந்த உபநிஷத்தை) அத்தியயனம் செய்கிறானோ, அவன் அக்கினியைப்போல் பரிசுத்தனாகிறான். அவன் வாயுவைப்போல் பரிசுத்தனாகிறான். சுவர்ணத்தைத் திருடின தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். மத்திய

பானம்செய்த தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். பிரும்மஹத்தி தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். செய்யக்கூடாததைச் செய்த, செய்யவேண்டியதை செய்யாமல்விட்ட தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். ஆகையால் பிர்ம்மத்தை ஆசிரயித்தவனாகிறான். வருணாசிர தருமங்களைக் கடந்தவன் எப்போதுமாவது அல்லது ஒருதடவையாவது (இந்த உபநிஷத்தை) ஜபம் செய்வதினாலே ச[ம்]சாரமாகிய சமுத்திரத்தை நசிக்கச்செய்கிறதாகிய ஞானத்தை யடை[கி]றான். ஆகையால் இவனை (இந்தஆத்மாவை) அறிந்து கைவல்லியபதத்தை யடைகிறான். கைவல்லியபதத்தை யடைகிறான்.

கைவல்லியோபநிஷத் முற்றிற்று.

ஓம் தத் ஸத்.

---

ஹரி: ஓம்.

ஸ்ரீ வாஸுதேவாய நம:.

யஜுர்வேதத்தில்

# நாராயணோபநிஷத்.

(ஸஹநாவவது சாந்தி:)

ஓம். பிரஜைகளை சிருஷ்டிப்போமென்று பரமபுருஷனாகிய நாராயண னிச்சித்தார். நாராயணனிடத்திலிருந்து பிராணன், மனது, சகலமான இந்திரியங்கள், ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், எல்லாவற்றையும் தாங்குகிற பூமி இவைகளுண்டாகின்றன. நாராயணனிடத்திலிருந்து பிரும்மாவுண்டாகிறார். நாராயணனிடத்திலிருந்து ருத்திர ருண்டாகிறார். நாராயணனிடத்திலிருந்து இந்திரனுண்டாகிறார். நாராயணனிடத்திலிருந்து * பிரஜாபதி யுண்டாகிறார். நாராயணனிடத்திலிருந்து பன்னிரண்டு சூரியர்களும், ருத்திரர்களும், வஸுக்களும், சகலச் சந்தஸ் (வேதங்கள்) களும் நாராயணனிடத்திலிருந்தே யுண்டாகின்றன. நாராயணனிடத்திலிருந்தே (உண்டானவைகள்) விருத்தியடைகின்றன. நாராயணனிடத்தில் லயமடைகின்றன. இதை (இப்படிப்பட்ட தென்பதை) ருக்வேத உபநிஷத் சொல்லுகிறது.

நாராயணன் நித்தியன், பிரும்மா நாராயணன், சிவனும் நாராயணன், இந்திரனும் நாராயணன், காலமும் நாராயணன், திக்குகளும் நாராயணன், உபதிக்குகளும் நாராயணன், மேலும் நாராயணன், கீழும் நாராயணன், உள்ளும் வெளியும் நாராயணன், உண்டாயிருக்கிறவும் உண்டாகப் போகிறவுமான இந்தப் பிரபஞ்சம் முழுதும் நாராயணனே. களங்கமற்றவனும், தோஷமற்றவனும், விகற்பமற்றவனும், பெயரற்றவனும், சுத்தனும், தேவனுமிருக்கிறவன் நாராயணன் ஒருவன்தான். இரண்டாவதனொருவனுமில்லை. இப்படி எவன் அறிகிறானோ அவன் விஷ்ணுவேயாகிறான். அவன் விஷ்ணுவேயாகிறான். இதை (இப்படிப்பட்டதென்பதை) யஜுர்வேதோபநிஷத் சொல்லுகிறது.

முதலில் ஓம் என்று உச்சரிக்கவேண்டும். பிறகு நம: என்று உச்சரிக்கவேண்டும். அதற்குமேல் நாராயணாய என்று உச்சரிக்கவேண்டும். ஓம் என்பது ஒரு அக்ஷரம். நம: என்பது இரண்டக்ஷரங்கள்.

* நவப்பிரஜாபதிகளென்று கொள்ளத்தக்கது.

நாராயணாய என்பது ஐந்தக்ஷரங்கள். இதுதான் நாராயணாஷ்டா க்ஷரமாகிய வாக்கியம். இந்த நாராயணாஷ்டா க்ஷரத்தை எவன் அத்தி யயனம் செய்து அதை எப்போதும் ஜபித்துக்கொண் டிருக்கிறானோ அவன் பூர்ணாயுசை யடைகிறான். பிரஜைகளுக்கு எஜமான னாகிறான். இராஜசுகத்தை யனுபவிக்கிறான். பசுக்களுக்கெஜமானனாகிறான். பிற கு மோக்ஷமடைகிறான் மோக்ஷமடைகிறான், என்று சாமவேதோப நிஷத் சொல்லுகிறது.

பூர்ணாநந்தனாயும் பிர்ம்மபுருஷனாயும் அகார உகார மகாரங்க ளொன்றான ஓங்காரமாகிய பிரணவ சுவரூபனாயு மிருக்கிறவனை உச்ச ரித்து யோகியானவன் ஜனனசமுசாரத்திலிருந்து விடுபடுகிறான். ஓம் நமோநாராயணாயவென்கிற மந்திரத்தை யுபாசிக்கிறவன் (உச்சரிக்கிற வன்) வைகுண்டலோகத்தையடைகிறான். அது இந்த ஹிருதயகமலம். ஞானசுவரூபம். மின்னல்போல் காந்தியுடையது. * தேவகிபுத்திரன் பிரம்மண்ணியன். † மதுசூதனன் பிரம்மண்ணியன். எல்லாபூதங்களி லிருக்கிறவனாயும் ஒரே ஒருவனாயும் காரணபுருஷனாயும் (தனக்கு) கா ரணமற்றவனாயு மிருக்கிற நாராயணனைப் பரபிர்ம்மமென்று அதர்வண உபநிஷத் சொல்லுகிறது.

இதை (இந்த உபநிஷத்தை)க் காலமே அத்தியயனம் செய்தவன் இராத்திரிசெய்த பாபத்தை நசிக்கச்செய்கிறான். சாயங்காலம் அத் தியயனம் செய்தவன் பகலில்செய்த பாபத்தை நசிக்கச்செய்கிறான். இதைக் காலைமாலையில் அத்தியயனம் செய்கிறவன் பாபியா யிருந்தா லும் பாபமற்றவனாகிறான். மத்தியானகாலத்தில் சூரியனுக்கெதிராக அத்தியயனம் செய்கிறவன் பஞ்ச மகாபாபம் உபபாபம் இவைகளி லிருந்து விடுபடுகிறான். சகலவேத பாராயணங்களின் புண்ணியத் தை யடைகிறான். இப்படித் தெரிகிறவன் நாராயண சாயுஜ்ஜியத்தை யடைகிறான். ஸ்ரீமந் நாராயண சாயுஜ்ஜியத்தை யடைகிறான், என்று உபநிஷத்.

ஓம் தத்ஸத்.

நாராயணோபநிஷத் முற்றிற்று.

---

*. †. பிரம்மண்ணிய னென்றால்—விஷ்ணுவின்பெயர். தபஸ்வேதம் ஸத்தியம் ஞானம் இவைகளுக்கு ஹிதனாயிருக்கிறவ னெவனோ அந்தப் பிர்ம்மமே பிரம்மண்ணி யன் என்று மற்றொரு அர்த்தம்.

ஹரி: ஓம்.

பரப்பிர்ம்மணேநம:

யஜுர்வேதத்தில்

# அமிருதபிந்தூபநிஷத்.

(ஸஹநாவவது சாந்தி:.)

ஓம். மனதானது சுத்தம் அசுத்தம் என இரண்டுவிதமாய் சொல்லப்பட் டிருக்கிறது. காம சங்கற்பம் (விருப்பமுடையமனது) உடையது அசுத்தம். காமமற்றிருக்கிறது சுத்தம். மனிதர்களுக்குப் பெந்த மோக்ஷத்திற்குக் காரணம் மனதுதான். விஷயங்களில் பற்றுதலுள்ள மன்தானது பெந்தத்தின் பொருட்டாகிறது. விஷயமற்ற மனதானது மோக்ஷத்தின் பொருட்டாகிறது. எந்தக் காரணத்தினுல் விஷயப் பற்றுதலற்ற மனதுக்கு மோக்ஷம் சொல்லப்பட் டிருக்கிறதோ அந்தக் காரணத்தினாலே, முமுக்ஷுவினுலே எப்போதும் மனதானது விஷயமற்றதாகச் செய்யப்படவேண்டியது. விஷயப்பற்றை தள்ளினதும் ஹிருதயத்தில் தடுக்கப்பட்டதுமான மனதானது எப்போது ஆத்ம சுவரூபத்தை யடைந்த தாகிறதோ அப்போது அது உத்தமமான ஸ்தானம். ஹிருதயத்தி லிருக்கிற ஸங்கற்பமானது எப்போது க்ஷயமாகிறதோ அதுவரையில் (மனது) தடுக்கப்பட வேண்டியது. இதுதான் ஞானம். இதுதான் தியானம். மற்ற நியாயங்கள் (சொல்) விஸ்தாரம்தான். அது (அந்தப்பிர்ம்மமானது) சிந்திக்கத் தக்கதேயன்று. சிந்திக்கத் தகாததுமன்று. சிந்திக்கத் தக்கதல்ல. (ஆனுலும்) சிந்திக்கத்தக்கதே. அப்போது (இப்படிப்பட்ட ஞானமுடையவனை போது) பக்ஷபாத மில்லாததாகிய பிர்ம்மமாகிருன். யோகத்தை ஸ்வர (நாத) த்தோடு சேர்க்கவேண்டும். பிர்ம்மத்தை ஸ்வரம் (நாதம்) அற்றதாக பாவிக்கவேண்டும். ஸ்வரமற்றதாக பாவனை பண்ணுகிறதினுலே இருக்கிறதற்கு (அந்த பிர்ம்மத்திற்கு) இல்லாமையில்லை. இப்படிப்பட்ட அந்தப் பிர்ம்மம் நிஷ்களமாயும் நிர்விகற்பமாயும் நிரஞ்சனம் (சாந்தமானது அல்லது மனோவியாபாரமற்றது) ஆயுமிருக்கிறது. அந்தப் பிர்ம்மமே, "நான்" என்று அறிந்தால் பிர்ம்மமே யாகிருன். நிச்சயம்.

எந்தப் பிர்ம்மமானது நிர்விகற்பமோ, அநந்தமோ, காரணமும் உவமையுமற்றதோ, ஊகிக்கத் தகாததோ, அநாதியோ, அதை ஞானியானவன் அறிந்து (பெந்தத்திலிருந்து) விடுபடுகிருன். நாசமு

ஓம் பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீகுரவே நம:

ஸாமவேதத்தில்

# மைத்திராயண்ணியுபநிஷத்.

(ஆப்பியாயந்துசாந்தி.)

## க-வது. பிரபாடகம்.

ஓம், முன் * சொல்லியிருக்கிற சயநம் முதலான சகலகருமமும் பிர்ம்ம † யக்ஞம்தான். ஆகையினுலே (யக்ஞம்செய்கிற) யஜமானனுன வன் அக்கினி காரியங்களை (அக்கினியில் செய்யவேண்டியதாகிய யக்ஞம் முதலிய கருமங்களை) நிறைவேற்றி ஆத்மா ‡ வைத் தியானஞ் செய்ய வேண்டியது. (ஆத்மத்தியானத்தினுல்) அந்த யக்ஞமானது எல்லா விஷயத்திலும் பூர்த்தியாகிறதல்லவா. அப்படித் தியானிக்கப்படத் தக்கவன் யார்? § பிராணனென்று பெயருடையவனுரோ அவன்தான். அவனுடைய உபாக்கியானம் சொல்லப்படுகிறது. (க)

பிரகத்திரதன் என்னும் பெயரையுடைய அரசன் இச்சரீரமானது அசாசுவதமானதென் றெண்ணி வைராக்கியம் (வெறுப்பு) அடைந்து தன்னுடைய புத்திரனை இராஜியத்தில்வைத்துவிட்டு காட்டுக்குச் சென்றுன்; கைகளைத் தூக்கிக்கொண்டும் சூரியனைப் பார்த்துக்கொண்டும் சிரேஷ்டமான தபஸை செய்துக்கொண்டிருந்தான். ஆயிரம்

---

* மைத்திராயண்ணியசாகை என்கிற இந்த உபநிஷத்தில் முதல்பாகமானது கருமகாண்டம். அதில் அக்கினிசயநம் என்கிற அக்கினி சம்பந்தமான யக்ஞம் சொல்லப்பட்டிருக்கிறது, அதில் விதிக்கப்பட்டிருக்கிற எல்லா யக்ஞகருமங்களையும பலாபேக்ஷையன்றி நிறைவேற்றி ஈசுவரார்ப்பணம் செய்யவேண்டியது. பகவத்கீதை அத்-ரு, சு-கo-பார்க்க.

† மேற்கண்டபடி செய்கிற கருமம் பரமாத்துமாவினுடைய பூஜையாகிறதாகையால் பிர்ம்மயக்ஞமென்று சொல்லப்பட்டது.

‡ பிரத்தியகாத்துமாவான ஜீவனைப் பரமாத்துமாவாகவே த்தியானம் செய்ய வேண்டியது.

§ சுவாசம் விடுவதினுலே யிருக்கிறுனென்று அறியப்படுகிறவனெவனே அவன்தான் தேகாதி தத்துவக்கூட்டங்களுக்கு சாக்ஷியாயிருக்கிற ஆத்மா. ய: ப்ராணேந ப்ராணிதி ஸ த ஆத்மா ஸர்வாந்தர:. பிரகதாரண்ணியகோபநிஷத் அத்தியாயம்-ரு, பிராம்மணம் - ச. கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத் யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத், தைத்திரீயோபநிஷத் ஆநந்தவல்லி எ-வது அனுவாகம் இவைகளைப்பார்க்க.

நாள்களின் * முடிவில் புகையில்லாத அக்கினிபோலவும் தேஜஸினால் தகிக்கிறவர்போலவு மிருக்கிற ஆத்மவித்தான† பகவான் சாகாயன்னிய முனியானவர் சமீபத்திற்குவந்தார். இராஜாவைப்பார்த்து எழுந்திரு எழுந்திரு வரத்தைக்கேள் என்று சொன்னார். இராஜாவானவர் அவருக்கு நமஸ்காரம் செய்து ஓ! பகவானே! நான் ஆத்மவித்தல்ல. நீர் (ஆத்ம) தத்துவத்தையறிந்தவரென்று கேட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட நீர் நமக்குச் சொல்லுமென்றார். நீர்கேட்கிற சங்கதியானது முன்னமே நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இப்போது அதை அடைவது ‡ கஷ்டம். ஓ! இக்ஷுவாகுவம்சத்திலுதித்தவனே! வேறுவரங்களைக் கேளென்று சாகாயன்னியர் சொன்னார். இராஜாவானவர் சாகாயன்னியருடைய பாதத்தில் (தன்) சிரஸைவைத்து வணங்கி இதைச் (அடியில்வரப்போகிறதை) சொன்னார். (உ)

ஓ! பகவானே! எலும்பு தோல் நரம்பு கொழுப்பு சதை சுக்கிலம் சோணிதம் சிலேஷ்மம் கண்ணீர் மலமூத்திரம் வாதபித்த கப (இவைகளுடைய) கூட்டமா யிருக்கிறவும் துர்கந்தமுள்ளவும் ஸாரமற்றதாயிருக்கிறவும் இந்தச்சரீரத்தில் காமானுபோகத்தினாலென்ன பிரயோஜனம்? காமக்குரோதலோபமோக பயதுக்க ஈருஷை இஷ்டமானவஸ்து நஷ்டம் அநிஷ்டப்பிராப்தி பசி தாகம் ஜராமரணம் வியாதி தேகபீடை முதலியவைகளினால் அடிபட்டிருக்கிற இந்தச் சரீரத்தில் காமானுபோகங்களினாலென்ன (பிரயோஜனம்)? (ங)

ஈ, கொசுமுதலியவைகளும் திருணம் விருக்ஷங்களும் எப்படி உற்பத்தியாய் நசிக்கின்றனவோ அப்படிப்போல் (தத்துவ) கூட்டரூபமாயிருக்கிற இந்தச் சரீரமானது நசித்துப்போகிறதென்று நிச்சயிக்கிறோம். இதுகளைவிட சிரேஷ்டமானவர்களாயும் சக்கிரவர்த்திகளாயுமிருந்த மற்றவர்களாகிய சுத்துயும்னன், பூரித்துயும்னன், இந்திரத்துயும்னன், குவலயாசுவன், யௌவனாசுவன், வத்திரியாசுவன், அசுவபதி, சசபிந்து ஹரிச்சந்திரன், அம்பரீஷன், நநக்தன் ¶ ஸரியாதி, யயாதி, அநரண்ணியன், உக்ஷஸேனன், முதலானவர்களும் பின்னும் இராஜாக்களாயிருந்த மருத்தன் பரதன் ‖ முதலானவர்களும் பந்து

* ஆயிரம் நாள்களென்ற வாக்யத்திற்கு ஸ்ரீ இராமதீர்த்தரென்கிற வியாக்கியான கருத்தா, ஆயிரம் வருஷமென்று வியாக்கியானம் செய்திருக்கிறார்.

† ஆத்மவித்தென்றால், ஆத்மசுவருபத்தை நன்றாயறிந்தவர் என்பது தாத்பரியம்.

‡ முன்னே இருஷிகளால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. சொல்லுகிறதும் கேட்கிறதும் அசாத்தியம்.

¶ நநக்தன் - என்றபெயருக்குப் பதிலாய் நகுஷன் என்று சிலபாடமுண்டு.

‖ மருந்தவென்று சிலபாடமுண்டு. ஆனால் மருத்தனென்று சதபதப் பிராம்மணத்திலும் மகாபாரதம் சாந்திபருவத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

வர்க்கங்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் மகா ஐசுவரியத்தைத்தள்ளி விட்டு இந்த உலகத்திலிருந்து பரலோகத்திற்குச் சென்றார்கள். பின்னுமிவர்களைவிட சிரேஷ்டர்களா யிருந்த அந்நியர்களான கந்தர்வர்கள் அசுரர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் பூதங்கள் கணங்கள் (அல்லது பூத கணங்கள்) பிசாசுகள் ஸர்ப்பங்கள் கிரகங்கள் * முதலானவர்களும் நசித்துப்போனதைப் பார்க்கிறோம். பின்னுமிவர்களைவிட அந்நிய மான மகாசமுத்திரம் வற்றிபோகிறது. மலைகள் விழுந்துபோகின்றன. துருவன் ஸ்தானத்தைவிட்டு நழுவிப்போகிறான். வாயுவாகிய கயிறு † களறுந்துபோகின்றன. பூமிமுழுகிப்போகிறது. (பிரும்மாதி) தேவதைகள் ஸ்தானம்விட்டோடிப்போகிறார்கள். இந்தலோகங்கள் எவர் களாலே பூர்ணமாயநுபவிக்கப்படுகிறதோ அவர்கள் அடிக்கடி இந்த லோகத்திற்குத் திரும்பிவருதலைப்பார்க்கிறோம். இப்படிப்பட்டதாயி ருக்கிற காமபோகங்களினால் என்னப்பிரயோஜனம்?. பாழும்கிணற்றி லிருக்கிற தவளையைப்போல் நானிந்த சமுசாரத்திலிருக்கிறேன். நீர் கரையேற்றுவிக்கிறதற்கு அருகராயிருக்கிறீர். ஓ! பகவானே! எனக்கு நீர்தான் கெதி நீர்தான் கெதி என்றார். (ச)

முதலாவது பிரபாடகம் முற்றிற்று.

---

## உ-வது. பிரபாடகம்.

பின்பு பகவானான சாகாயன்னியரானவர் பிரீதியடைந்து இராஜாவைப்பார்த்துச் சொல்லுகிறார். ஓ! மகாராஜாவே! ஓ! இக்ஷ்வாகு வம்சத்துவஜனான பிரகத்திரதனே! நீ உன் கோரிக்கையைச் சீக்கிர ‡ மாயடைந்தாய். நீ ஆத்மஞானி. மருத்தெ § ன்கிற பெயரினால் பிர சித்தியடைந்திருக்கிறாய். (நீ தேடுகிற) உன்னுடைய ஆத்மா இவன் தான் சந்தேகமில்லை (என்றார்). ஓ! பகவானே! அந்த ஆத்மா எவன்? எப்படிப்பட்டவன்? (தேகேந்திரிய மனோபுத்தி பிராணன் இவைகளுக்குள்ளே ஒருவனா, அல்லது இவைகளுக்கு விலக்ஷணனா?) என்று கேட்டார். அதற்கு அவர் (சாகாயன்னியர்) சொல்லுகிறார். (க)

---

* குழந்தைகளைப் பிடிக்கிறதெதுவோ அது கிரகமென்று சொல்லப்படுகிறது.

† சிம் சுமாரசக்கரத்தில் நக்ஷத்திரங்கள் முதலியவைகளைச் சேர்த்து பந்தித்திருப்பது வாயுவாகையால் அப்படிப்பட்ட வாயுவாகிற கயிறுகளறுந்துபோகின்றன.

‡ ஒருவருஷம் குரு சுசுரூஷை செய்து அடையவேண்டியதை நீ இப்போதே யடைந்தாய் என்பது கருத்து.

§ மருத்தென்றால், வாயுவுக்குப் பெயர். வாயு பிரஷதசுவன் என்கிற பெயரால் கூப்பிடப்படுகிறான். ஏனென்றால், பெரிதாகிய குதிரைகள் எவனுடைய இரதத்திற்குக் கட்டப்படுகிறதோ அவன் பிரஷதசுவன். வாயுவின் ரதத்திற்கு பெரியகுதிரைகள் கட்டப்படுகிறபடியால் அவன் பிரஷதசுவன் என்று சொல்லப்பட்டான். பிரகத்ரதன் என்கிறபெயர் பிரஷதசுவன் என்கிற பெயருக்குச் சமமாகையால் இந்தப் பிரகத்ரதன் வாயுவென்று கூப்பிடப்பட்டான்.

(முந்தி ஜாக்கிரதவஸ்தையில் ஸ்தூலதேகத்தினிடத்தில் நான், என்னுடையதென்கிற (அகங்காரம் மமகாரம் முதலிய) கூட்டத்தை அனுபவிக்கிறவனே உன்னுடைய ஆத்மாவென்று சொல்லப்பட்டது. அதினால் ஆத்மாவானவன் ஸ்தூல சரீரத்திற்கு அந்நியனென்று சொல்லப்பட்டதாகவாயிற்று. இப்போது பிராணன் அந்தக்கரணம் முதலிய கூட்டம் ஆத்மாவோவென்கிற சந்தேகத்தை நிவர்த்திசெய்வதினாலே அவைகளுக்கு அந்நியமாயிருக்கிற ஆத்மா உபதேசிக்கப்படுகிறது). பின்பு (ஜாக்கிரதவஸ்தைக்கு பிறகு) பிராணவாயுவினுடைய சஞ்சாரத்திற்கு தடையன்றி மேலேபோய் (சுவப்னவஸ்தையின் பொருட்டு சூக்ஷ்மதேகத்தில் பிரவேசித்து) நானாவித அந்தக்கரண விகாரங்களை யனுபவிக்கிறவன்போல் காணப்பட்டாலும் (வாஸ்தவத்தில்) அனுபவிக்காதவனாய் மோகத்தை ஏவிக்கொண்டிருக்கிறவனெவனோ அவன்தான் ஆத்மாவென்று மைத்திரேயர்சொன்னார் (என்று சாகாயன்னியர் இராஜாவுக்குச் சொல்லுகிறார்). பின்பு (சுவப்னவஸ்தைக்குப்பிறகு) இந்தச் சரீரத்தை விட்டுக் கிளம்பி (சூக்ஷ்மசரீரத்தை விட்டுக் கிளம்பி காரணசரீரத்தில் பிரவேசித்து) பரம்ஜோதியையடைந்து தன் சுவ சுவ ரூபத்தோடிருக்கிறவனெவனோ அவன் தானாத்மா (ஸ்தூலசூக்ஷ்மதேகத்தைச் சேர்ந்த சகலகரணவாசனைகளன்றி உத்தமமான ஜோதியாகியப்பிரகாசத்தில் லயித்து உவமையற்ற தன் சுவ சுவ ரூபத்தோடிருக்கிறவும் ஸம்பிரஸாதமென்கிறவும் சுஷுப்தி யவஸ்தையிலுள்ளவன்தான் ஆத்மா) இதுதான் அமிருதம். இதுதான் பயமற்றது. இதுதான் பிர்ம்மம். (உ)

பின்னும், ஓ இராஜாவே! இந்தப் பிர்ம்மவித்தையும் சர்வோபநிஷத் (ஸாரமாகிய) வித்தையும் பகவானான மைத்திரீயினால் நமக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை நான் உமக்குச் சொல்லுகிறேன். சகல பாபங்களையும் நாசஞ்செய்தவர்களாயும் தீக்ஷணமான தேஜஸையுடையவர்களாயும் ஊர்த்துவரேதஸ் (தன்னுடைய ரேதஸ் அல்லது பிந்துவை வெளிவிடாமல் மேல்நோக்கச்செய்தவர். ஏன்றால், ஸ்திரீபோக இச்சையை முற்றிலும் விட்டவர்) களாயு மிருக்கிற *வாலகில்லியர்கள் என்று சுருதியில் சொல்லப்படுகிறவர்கள் கிரது என்கிற பிரஜாபதியைக் கேட்டார்கள். ஓ பகவானே! இச்சரீரம் வண்டியைப்போல் ஜடமானது. இந்திரியங்களுக்குக் காணப்படாதவனாகிய எவனாலே இதானது (சரீரமானது) சேதனத்தைப்போல பிரதிஷ்டாபிதமா யிருக்கிறதோ (நிலை நிறுத்தப்பட்டு அல்லது கட்டப்பட்டிருக்

* இந்த வாலகில்லியர்கள் என்பவர்கள் கிரதுவுக்கு ஸந்நதி என்கிற பெண்சாதியினிடத்தில் பிறந்த அறுபதுனாயிரம் பெயர்கள். அங்குலப்பிரமாண முள்ளவர்கள். பரிசுத்தமானவர்கள். ஞானிகள். சூரியனைப்போல தேஜசுள்ளவர்கள். விஷ்ணுபுராணம் முதல்அம்சம் பத்தாவதத்தியாயம் சுலோகம்-கக-பார்க்க.

கிறதோ) அப்படிப்பட்டது எவனுடைய மகிமை? இதை (இந்தச்சரீரத்தை) பிரசோதயிதா (பிரேரேபிக்கிறவன் அல்லது ஏவுகிறவன்) யார்? ஓ பகவானே! (இந்தவிஷயத்தில்) நீர் அறிந்ததை எங்களுக்குச் சொல்லுமென்று கேட்டார்கள். அதற்கு அவர் (அந்தப் பிரஜாபதி) சொல்லுகிறார். (௩)

இந்திரியநிக்கிரகம்* செய்த யோகிகள் (சப்தாதி) விஷயங்களில் சம்பந்தப் படாதிருக்கிறதுபோல எவன் எல்லாவற்றிற்கும் மேலாக (பிரபஞ்சாதீதனாக) இருக்கிறதாய் சுருதி சொல்லுகிறதோ அவன் சுத்தன் (ஆசை முதலியவை யில்லாதவன்). பரிசுத்தம் செய்கிறவன். சூன்னியன் (தன்னைத்தவிர பிரபஞ்சமுதலியவை யில்லாதவன்). சாந்தன். பிராணாதி வியாபாரமில்லாதவன். மனதில்லாதவன். நாசமில்லாதவன். குறைதலற்றவன். ஸ்திரமாயிருக்கிறவன் (மாறுதலற்றவன்). என்றைக்குமுள்ளவன். பிறப்பற்றவன். சுவதந்திரன். தன் மகிமையிலேயே யிருக்கிறவன். இப்படிப்பட்டவனாலே இந்தச் சரீரமானது சேதனம்போல பிரதிஷ்டாபிதமா யிருக்கிறது. அவன் (தான்) இதைப் (தேகாதிப்பிரபஞ்சத்தை) பிரேரேபிக்கிறவன்.

அவர்கள் (வாலகில்லியர்கள்) ஓ பகவானே! இப்படிப்பட்ட அநிஷ்டனாலே (தான் தன்னுடையதென்கிற விருப்பமற்றவனாகிய ஆத்மாவினாலே) இந்தச் சரீரமானது சேதனம்போல் எப்படி பிரதிஷ்டாபிதமாயிருக்கிறது? இதற்கு இவன் எப்படி பிரேரேபிக்கிறவனாகிறான்? அவர்களுக்கு அவர் (பிரஜாபதி) சொன்னார். (ச)

அந்த (ஆத்மாவான) இவன் சூக்ஷ்மமானவன், (கருமேந்திரியங்களால்) கிரகிக்கப்படாதவன், (ஞானேந்திரியங்களுக்கு) புலப்படாதவன், புருஷனென்கிற பெயரையுடையவன், தூங்கிறவன் தன்புத்திபூர்வமாய் விழித்துக்கொள்ளாததுபோல சங்கற்பமில்லாமலே இத்தேகத்தில் ஒரு அம்சத்தினாலிருக்கிறான். இப்படி யிருக்கிறதில் இவனுடைய (ஆத்மாவினுடைய) சித் சுவபாவமாயிருக்கிற அம்சமானது பிரதிபுருஷன் (அந்தக்கரணத்தில் பிரதிபலித்தவன்), க்ஷேத்திரக்ஞன்; சங்கற்பம் நிச்சயம் அபிமானம் இவைகளை அடையாளமாக வுடையவன், பிரஜாபதி, விசுவன், என்கிற பெயர்களை யுடையவனாயிருக்கிறான். இச் சேதனனாலே (அம்சமாகிய இப்புருஷனாலே) இந்தச் சரீரமானது சேதனத்தைப்போல் பிரதிஷ்டாபிதமா யிருக்கிறது. இதைப் பிரேரேபிக்கிறவனும் அவன்தானென்றார். அவர்கள் (வாலகில்லியர்

* மூலத்திலிந்தவிடத்தில் ஊர்த்துவரேதஸ்கள் என்றபதம் பிரயோகிக்கப் பட்டிருக்கிறது. அதை வாலகில்லியர்கள் விஷயமாய் விளிச்சொல்லாகவைத்தால் இந்திரியத்தை ஜயித்தவர்களே என்று வாலகில்லியர்களைப்பார்த்து சொன்னதாகவும் அப்படியல்லாவிட்டால் இந்திரியங்களை ஜயித்த யோகிகள் என்று பொதுவாய்ச் சொன்னதாகவும் அர்த்தம் செய்யலாமென்று வியாக்கியாதா சொல்லியிருக்கிறார்.

கள்) ஓ பகவானே! இப்படி அநிஷ்டனாலே இப்படிப்பட்ட சரீரமானது சேதனம்போல் பிரதிஷ்டாபிதமானால் இதற்கு பிரேரேபகன் இவனெப்படியாகலாமென்று கேட்டார்கள். அதற்கு அவர் (பிரஜாபதி) சொல்லுகிறார். (௫)

(தன்னுடைய மாயையைத்தானே சுவீகரித்து சராசரப் பிரபஞ்சங்களை சிருஷ்டித்து அவைகளில் தான் அநுப்பிரவேசித்தானென்று சகல உபநிஷத்துக்களிலும் சொல்லப்பட் டிருக்கிறதாகையால் நீங்கள் கேட்டபடிக்கு ஆச்சரிய மல்லவென்பதை மனதில் கொண்டவராய்ப் பிரஜாபதி சம்பந்தமான சரீரசிருஷ்டியைச் சொல்லுகிறார்). சிருஷ்டிக்கு முந்தி பிரஜாபதி ஒருவராகவிருந்தார் (இவர் யாரென்றால், மாயையை சுவீகரித்த ஸத் சித் ஆநந்த சுவரூபியானவரிடத்திலிருந் துண்டானவர். இவருக்கு ஹிரண்ணிய கருப்பனென்றும் பெயர்). ஒருவராயிருந்ததி லவருக்குச் சந்தோஷமில்லை. ஆத்மாவைத்தியானித்து வெகுப்பிரஜைகளை சிருஷ்டித்தார். (சங்கற்பமாத்திரத்தினாலே தேவமனுஷிய மிருகம் முதலான பலரூபமாய்த் தானேயானார்).. அந்தப் பிரஜைகள் கல்லைப்போலவும் புத்தியில்லாமலும் பிராணனில்லாமலும் கட்டைகளைப்போலவு மிருக்கக்கண்டார். அதிலும் சந்தோஷமில்லை. இவைகளுக்குச் சேதனத்தை (அறிவை) யுண்டாக்கிறதற்காக "நான் அவைகளுக்குள் பிரவேசிக்கிறேன்" என்று ஆலோசித்தார். தன்னை வாயுவைப்போல செய்துகொண்டு அவைகளில் பிரவேசித்தார் (அதெப்படி யென்றால், இரும்பு குண்டில் அக்கினி பிரவேசித்து அதை முழுதும் அக்கினிசுவரூபமாய்ப் பிரகாசிப்பிக்கிறதுபோல). தான் ஒருவராகவிருந்து தேகாதிகளை அசைப்பிக்க சக்தியில்லை யாகையால் தன்னை ஐந்தாகச் செய்துகொண்டு பிராணன், அபானன், சமானன், உதானன் வியானன் என்கிற ஐந்துபெயர்களால் சொல்லப்படுகிறார். மேலே போகிற (நாபிமுதல் சிரசுவரை சஞ்சரிக்கிறதும் மூக்கு வாய் இவைகளினால் தெரிந்துகொள்ளக் கூடியதுமான) வாயுதான் பிராணன். கீழே போகிற (நாபிக்குக்கீழ் பாயுவரையில் சஞ்சரிக்கிற) வாயுதான் அபானன். இவ்விரண்டுக்கு முதவியாயிருக்கிறவன் வியானன். (இந்தவாயு தேகம்முழுதும் வியாபித்துக்கொண்டிருக்கிறவன், அப்படி வியாபிக்கிறதினால் பிராணாபானன்களுக்கு உதவிசெய்கிறான்). ஆகாரத்தினுடைய ஸ்தூலபாகத்தை * (மலத்தை) அபானத்திலும் ஆகாரத்தினுடைய சூக்ஷ்மபாகத்தைத் (ஸத்தான ரஸபாகத்தை) தேகத்தி னொவ்வொரு அவயவங்களிலும் செவ்வையாய்ச் சேர்ப்பிக்கிறவன் சமானன். சமானனுக்கும் வியானனுக்கும் மத்தியிலிருக்கிறவன் உதானன். இவன் புசித்

* சாந்தோக்கியோபநிஷத், ௬-வது அத்தியாயத்தில் புஜிக்கப்பட்ட அந்நமானது மூன்றுவிதமாக வாகிறது. அதில் ஸாரமற்றபாகம் மலம். மத்தியபாகம் மாம்சமாகிறது. சூக்ஷ்மபாகம் மனதாகிறதென்று சொல்லியிருக்கிறது.

15

ததையும் குடித்ததையும் உள்ளுக்குக்கொண்டுபோகிறதும் வெளியில் கொண்டுவருகிறதுமாயிருக்கிறவன். பின்னும் உபாம்சு (பிராணவாயு) அந்தர்யாமத்தை (அபானவாயுவை) ஆசிரயித்திருக்கிறது. அந்தர்யாமம் உபாம்சுவை யாசிரயித்திருக்கிறது. இவைகளுக்கு மத்தியில் உஷ்ணத்தை யுண்டாக்கினர். (என்றால், தானே அக்கினி சுவரூபமாயானு ரென்பது கருத்து) உஷ்ணமென்பது எதுவோ அதுதான் புருஷன் (அக்கினிரூபமான ஜீவனுயிருந்து தேகத்தைத் தரிக்கிறவன்). அவன் தான் வைசுவாநராக்கினி. (இந்த விஷயத்தை குறித்து) வேறிடத்திலும் * சொல்லப்பட்டிருக்கிறது. "வைசுவாநராக்கினியானவன் சரீர "மத்தியிலிருக்கிறான். எது புஜிக்கப்படுகிறதோ அந்த ஆகாரத்தை "யிவன்தான் பக்குவம் செய்கிறான் (ஜீர்ணம் செய்கிறான்). ஒருவன் "தன் காதுகளை மூடிக்கொண்டால் எந்தச்சத்தம் கேட்கப்படுகிறதோ "அந்தச்சத்தமிவனுடையதுதான். மரணகாலம் சமீபித்திருக்கையில் "அச்சத்தத்தை யவன்கேட்கிறதில்லை" தன்னை ஐந்தாகபங்கிட்டு ஹிருதய குகையில் † வாசம்பண்ணுகிறான். மனசுவரூபமானவனுயும் பிராணமே சரீரமாயுடையவனுயும் பிரகாசமே ரூபமாயுடையவனுயும் சத்திய சங்கற்பனுயும், ஆகாசத்தைப்போலொட்டாதவனுயு மிருக்கிறான். அவன் (அந்தப்பிரஜாபதி, ஹிரண்ணியகருப்பன், வைசுவாநரன் இந்தப்பெயர்களில் எதையாவது இவ்விடத்தில் சொல்லலாம்) பிரயோஜனத்தை யடையாதவனுய் (இவ்வளவெல்லாஞ் செய்தும் திருப்தியற்றவனுய்) "விஷயங்களை யனுபவிக்கிறேன்" (சப்தாதிவிஷயங்களில் வியாபிக்கிறேன்) என்று எண்ணினன். பின்பு இந்த இந்திரியங்களைப் பிளந்துகொண்டு வெளியில் கிளம்பி ஐந்து கடிவாளங்களினாலே (குதிரையைநடத்துவதுபோல) விஷயங்களை நடத்துகிறான் (அனுபவிக்கிறான்). இவனுக்கிந்த ஞானேந்திரியங்கள் கடிவாளங்கள், கருமேந்திரியங்கள் குதிரைகள், சரீரம் ரதம் (தேர்), மனது சாரதி. பிரகிருதி கொறடா. இந்த (மாயையாகிய)க் கொறடாவினால் நடத்தப்பட்ட இந்தச் சரீரமானது கொயவனால் சுத்தப்படும் திருகைபோல் சுத்துகிறது. இவ்விதமா யிந்தச் சரீரமானது சேதனத்தைப்போல் பிரதிஷ்டாபிதமா யிருக்கிறது. பிரேரேபிக்கிறவனும் அவன்தான்.(சு)

ஞானிகள் விரும்புகிற ஆத்மா இவன்தான். இவன் கருமத்தினுடைய சுகதுக்கபலன்களில் சம்பந்தமற்றவன். சகல சரீரங்களிலும் சஞ்சரிக்கிறவன். அப்படியிருந்தாலும் ஒன்றிலும் பற்றற்றவன். ஏனென்றால், ரூபமற்றவனானதாலும் சூக்ஷ்மனானதாலும் (ஞானேந்திரியங்களால்) அறியத்தகாதவனானதாலும் (கருமேந்திரியங்களால்) கிரகிக்கத்

* பிரகதாரண்ணியகோபநிஷத், ரு - க - சாந்தோக்கியோபநிஷத், ங - கங - பார்க்க.

† ஞானம் முதலானவைகளை மறைக்கிறதானதால் புத்தியை ஹிருதயகுகை என்று சொல்லியிருக்கிறது.

தகாதவனானதாலும் மமகார மற்றவனானதாலும் தான், வாஸ்தவத்தில் அவஸ்தை (ஜாக்கிரத் சுவப்ந சுஷுப்தியவஸ்தை அல்லது இன்னவிடத்தி லிருக்கிறானென்று குறிப்பிட்டு சொல்லக்கூடிய ஸ்திதி) யையுடையவனல்ல, கருத்தா வல்லாவிட்டாலும் அக்ஞான சம்பந்தத்தினால் கருத்தாவைப்போல் காணப்படுகிறவன், சுத்தன், ஸ்திரமாயுள்ளவன், சலனமற்றவன், (ஒன்றிலும்) பற்றற்றவன், (காமக்குரோதாதிகளினால்) கலங்காதவன், விருப்பமற்றவன், சாக்ஷியைப்போ லிருக்கிறவன், தனக்குள்ளேயே யிருக்கிறவன் (தன் மகிமையிலேயே யிருக்கிறவனன்றி வேறொன்றை ஆதாரமா யுடையவனல்ல), குண சுவரூபமான துணியினால் தன்னை மறைத்துக்கொண்டு கருமபலனை யனுபவிக்கிறவன்போ லிருக்கிறான், கருமபலனை யனுபவிக்கிறவன்போலிருக்கிறான். (எ)

இரண்டாவது பிரபாடகம் முற்றிற்று.

---

## ௩-வது. பிரபாடகம்.

அவர்கள் (வாலகில்லியர்கள்) கேட்கிறார்கள். ஓ பகவானே! நீர் சொன்னபடி இந்த ஆத்மாவினுடைய மகிமை யிப்படியிருந்தால் சுகதுக்க ரூபங்களான கருமபலன்களை யனுபவிக்கிறவனும் சிரேஷ்ட நிகிருஷ்டப் பிறவியையடைகிறவனும் மேலும் (சுவர்க்காதி லோகங்களுக்கும்), கீழும் (நரகலோகத்திற்கும்), போகிறவனும் இருமையினாலவமதிக்கப் படுகிறவனுமாய்ப் பிரமித்துக்கொண்டிருக்கிற மற்றொரு ஆத்மா (ஜீவன்) யார்?. (க)

(அதற்கு பிரஜாபதி சொல்லுகிறார்) பூதாத்துமாவென்று மற்றொருவ னிருக்கிறான். அவன் சுகதுக்க ரூபமான கரும பலன்களினாலே அவமதிக்கப்பட்டவனாயும் சிரேஷ்ட நிகிருஷ்டப் பிறவியை யடைகிறவனாயும் மேலும் கீழும் போக்குவரத் துள்ளவனாயும் இருமைகளினாலவமதிக்கப்பட்டவனாயும் பிரமித்துக்கொண்டு மிருக்கிறான். இதின் விவரம் சொல்லுகிறேன் கேளுங்கள். பஞ்ச தன்மாத்திரைகள் (சூக்ஷ்மபூதங்கள்) பூதசப்தத்தினால் சொல்லப்படுகின்றன. பஞ்சமகா பூதங்களும் (ஸ்தூலபூதங்கள்) பூதசப்தத்தினால் சொல்லப்படுகின்றன. இவைகளுடைய கூட்டங்கள் சரீரம் (பஞ்சீகிருத பூதங்கள் ஸ்தூல சரீரம். அபஞ்சீகிருத பூதங்களாகிற தன்மாத்திரைகள் பிராணன்கள் இந்திரியங்கள் அந்தக்கரணம் இவைகளுடைய கூட்டம் லிங்கசரீரம் அல்லது சூக்ஷ்மசரீரம்). சரீரத்தை ஆளுகிற தெதுவோ அது பூதாத்துமாவென்று சொல்லப்பட்டது. அதினுடைய அமிருத சுபாவமானது தாமரையிலையின்பேரிலிருக்கிற ஜலத் திவலையைப்போல (ஒட்டாமல்) இருக்கிறது. பிரகிருதியினுடைய குணங்களினாலே பாதிக்க (அடக்கிவிட) ப்படுகிறது. இப்படி பாதிக்கப்படுகிறதினாலே மூடத்துவத்தை யடைகிறது. மூடத்துவத்தை யடைகிறதினாலே தனக்குள்

ளேயிருக்கிறவனும் பிரேரேபிக்கிறவனாயு மிருக்கிற * பகவானாகிய பிரபுவை அறிகிறதில்லை. குணங்களுடைய கூட்டங்களினாலே சுமக்கப்பட்டவனும் (பூர்வ கருமவாசனையினால்) கலங்கிப்போனவனும் ஸ்திரமில்லாதவனும் சஞ்சலமுள்ளவனும் யதார்த்த ஞானமில்லாதவனும் ஆசைநிறைந்தவனும் ஹீநனும் (சுகபோகம் க்ஷணங்கூட இல்லாதவன்) அபிமானத்தை யடைகிறான். "நான்" "அவன்" "இதென்னுடையது" என்று நினைத்துக்கொண்டு, பக்ஷியானது வலையினால் கட்டுப்படுகிறதுபோல தன்னைத் தன்னாலேயே கட்டுப்படுத்திக் கொள்ளுகிறான். (எப்படி யென்றால், பட்டுப்பூச்சியானது தன்னாலுண்டாக்கப்பட்ட பட்டுநூலினால் தன்னைக் கட்டிக்கொண்டு பிறகு வெளிப்பட சக்தியற்றிருக்கிறதுபோல்) தன்னுடைய சுவகரும பலன்களிலகப்பட்டுக்கொண்டு சிரேஷ்ட நிகிருஷ்டப் பிறவியை யடைந்தும் பலவித இருமைகளையடைந்தும் மேலுங்கீழும் போய்க்கொண்டும் பிரமித்துக் கொண்டு மிருக்கிறான். இவன் யாரென்று (வாலகில்லியர்கள்) கேட்டதற்கு அவர் சொல்லுகிறார். (இக்கேழ்வின் தாத்பரிய மென்னவென்றால், பூதாத்துமாவுக்கும் சிதாத்துமாவுக்கும் பேதமில்லாவிட்டால் பூதாத்துமா சமுசாரியாயும் சிதாத்துமா அசம்ஸாரியாயு மிருக்கிற தெப்படி என்பதே). (௨)

மற்றொருவிடத்திலும் (இந்த அர்த்தம் வேறு உபநிஷத்திலும்) சொல்லப்பட்டிருக்கிறது. "எவன் (இந்தச்சரீரத்தில்) கருத்தாவோ அவன்தான் பூதாத்துமா. (தன் சந்நிதி மாத்திரத்தினாலே ஏவிக் கொண்டு தேகேந்திரிய அந்தக்கரண முதலிய) கரணங்களினாலே செய்விக்கிறவன் அந்தராத்துமா (உள்ளே யிருக்கிற சிதாத்மாவாகிய புருஷன்). அக்கினியினால் வியாபிக்கப்பட்ட (அக்கினியினால் பழுக்கக் காய்ந்த) இரும்புக்குண்டு கருமானாலடிக்கப்பட்டு (பலவிடங்களில் பொ[illegible]ரூபமாய்ச் சிதறி) பலரூபத்தையடைவதுபோல இந்தப் பூதாத்துமாவானவன் உள்ளேயிருக்கிற புருஷனால் வியாபிக்கப்பட்டு குணங்களினாலடிபட்டு பலரூபங்களை யடைகிறான். (அவையாவன) நான்கு ஜாதி,† பதினான்குவிதம், ‡ எண்பத்தினான்கு § விதமாகப்பரிணமித்த

* கௌஷீதிகீ பிராம்மணோபநிஷத் ௩-அ-பார்க்க.

† நான்குஜாதி, என்றால், ஜராயுஜ, அண்டஜ, சுவேதஜ, உத்பிஜ, அதாவது, முறையே கருப்பையிலிருந்துண்டாகிற மனிதன் பசு முதலியன. முட்டையிலிருந்துண்டாகிற கோழிமுதலியன. வேர்வையிலிருந்துண்டாகிற பேன் மூட்டைப்பூச்சி முதலியன. பூமியில் முளைக்கிற மரம் செடிமுதலியன.

‡ பதினான்குவிதம் என்றால், பதினான்குலோகங்கள். பூலோக, புவர்லோகம் முதலான மேல்லோகங்களேழு. அதல விதலம் முதலான கீழ்லோகங்களேழு.

§ எண்பத்திநான்கு வகையென்றால், எண்பத்தினான்கு லக்ஷமும் அதற்கதிகமுமான ஜாதிபேதமென்பது தாத்பரியம். இவ்விடத்தில் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது.

து,* பலரூபமாகிறதாகச் சொன்னதிதுதான். இப்படிக் குணிக்கப்பட்ட† வைகள் குயவனால் சுத்தப்பட்ட சக்கரம்போல புருஷனாலேவப்பட்டுச் சுத்திக்கொண்டிருக்கின்றன. (பூதாத்துமாக்களுடன் சேர்ந்திருந்தாலும் அவைகளுடைய அவஸ்தை சிதாத்துமாவுக்கில்லை யென்பதைத் திருஷ்டாந்தத்தினால் சொல்லுகிறார்) இரும்புகுண்டையடித்தால் (அதில் பற்றியிருக்கிற) அக்கினிக்கு யாதொரு துன்பமுமில்லாததுபோல சிதாத்துமாவுக்கு யாதொரு அவஸ்தையுமில்லை. பூதாத்துமாவோ பூதங்களுடைய சேர்க்கையினா லடிபடுகிறான். (௩)

(தேகாபிமானத்தினால் சமுசாரியாகிறபடியால் தேகாபிமானத்தை விடும்பொருட்டு தேகத்தின் அசங்கியங்கள் இனி சொல்லப்படுகின்றன). வேறொருவிடத்திலும் (வேறுசுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. "இந்தச்சரீரமானது மைதுனத்தினால் (ஸ்திரீபுருஷ
"சம்பந்தத்தினால்) உண்டானது. நரகத்தில் (நரகத்திற்குச் சமான
"மானதாயின் உதரத்தில்) விருத்தியடைந்தது. மூத்திர துவாரத்தினால்
"வெளிப்பட்டது. எலும்புகளினால் இணைக்கப்பட்டது. மாம்சத்தி
"னால் பூசப்பட்டது. தோலினால் மூடப்பட்டது. மலமூத்திர பித்த
"கப ஊண் கொழுப்பு வபை இவைகளினாலும் பின்னும் வியாதிகளி
"னாலும், பொருளினால் நிறைந்த பொக்கிஷம்போல நிறைந்திருக்
"கிறது." (௪)

(முன் ஸ்தூலசரீரத்தைச் சொல்லி சூக்ஷ்மசரீரத்தில் வைராக்கியமுண்டாகும் பொருட்டு சூக்ஷ்மசரீர சுவபாவம் இப்போது சொல்லப்படுகிறது). வேறோரிடத்திலும் (வேறுசுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது.

"கலக்கம், பயம், வெறுப்பு, நித்திரை, சோம்பல், அஜாக்கிரதை,
"ஜரா (ஜரா=கிழத்தனம் ஸ்தூலதேகத்தைச் சேர்ந்ததானாலும் ஜரா
"யுண்டானதாக எண்ணுகிறது சூக்ஷ்மதேகத்தைச் சேர்ந்ததா[illegible]
"லிதில் சேர்த்துசொல்லப்பட்டதாக கொள்ளவேண்டும்), விசனம்,
"பசி, தாகம், கிருபணத்துவம், கோபம், நாஸ்திக்கியம், அக்ஞானம்,
"மாச்சரியம், கருணையின்மை, மூடத்தனம், வெட்கமின்மை, உறுதி
"யின்மை, முறட்டுத்தனம், விஷமபுத்தி அல்லது பேடித்தனம், இவை
"கள்தான் தாமஸகுணத்தின் காரியங்கள். மன ஆசை, (புத்திரதா
"ராதிகளில்) அபிமானம், பக்ஷம், பேராசை, பரஹிம்சை, சிற்றின்ப
"விருப்பம், துவேஷம், கபடம், அசூயை, வீண்செய்கை, சபலசித்
"தம், விசாரப்படுதல், ஜயமடைய இச்சை, பொருளீட்டல், சிநேகி

* பரிணமித்ததென்றால், விகாரத்தையடைந்தது. தங்கம் பல ஆபரணங்களாகப் பரிணமித்ததுபோல.

† குணிக்கப்பட்டதென்றால், பெருக்கப்பட்டது. அடிக்கடி திரும்பி திரும்பிவருகிறபடியால் குணமாகச் சொல்லப்பட்டது.

"தர்களைச் சேர்க்குதல், கிரகஸ்தாசிரமத்தில் விருப்பம், தனக்கிஷ்ட
"மில்லாதவிஷயங்களில் வெறுப்பு, இஷ்டமுள்ள விஷயங்களில் மிக
"வும் பிரீதி, கோட்சொல்லல், கீர்த்திக்காக அந்தானம் செய்தல்,
"இவைகளெல்லாம் இராஜஸகாரியங்கள். இவைகளினாலே (சூக்ஷ்ம)
"சரீரமானது நிரப்பப்பட்டும் வியாபிக்கப்பட்டு மிருக்கிறது. ஆகை
"யாலிந்த பூதாத்துமாவானவன் பலரூபங்களை யடைகிறான். பல
"ரூபங்களை யடைகிறான்." (௫)

மூன்றாவது பிரபாடகம் முற்றிற்று.

---

## ௪-வது. பிரபாடகம்.

(முந்திய அத்தியாயத்தில் ஒருவனாகிய சிதாத்துமா பூதாத்துமா வாகிய உபாதியை பகுத்தறியாததினாலே சமுசாரிபோல் காணப்படு கிறானென்றும் பூதாத்துமாவுக்குள்ள அவஸ்தைக்கு இவனுமுள்பட் டுப் பலவாகக் காணப்படுகிறா னென்றும் ஆனால் வாஸ்தவத்திலிந்த தோஷங்கள் அவனுக்கில்லையென்றும். அவன் சுவபாவத்தில் நிர்குணன் நித்தியன் சுத்தனென்றும் சொல்லப்பட்டது. இதைக்கேட்ட வால கில்லியர்கள் சிதாத்துமாவை மறைத்துக்கொண்டிருக்கிற ஜீவாத்தும சுவரூபத்தை நசிக்கச்செய்து சுத்தாத்தும சுவரூபத்தை யடையும் பொருட்டு உபாயத்தைக் கேட்கிறார்கள்). ஊர்த்துவரேதஸ்களாகிய வாலகில்லியர்கள் மிகவும் ஆச்சரியமடைந்தவர்களாய் (பிரஜாபதியி னுடைய) கிட்டநெருங்கி ஓ! பகவானே! உமக்கு நமஸ்காரம். எங் களுக்குபதேசம் செய்யும். எங்களுக்கு நீர்தான் கெதி வேறே கெதியில்லை. இந்தப் பூதாத்துமாவானவன் இந்த ஸ்திதியைவிட்டு (சித்) ஆத்மாவிடத்திலேயே சாயுஜ்ஜியத்தை எந்த (உபாயமாகிய) விதியினாலடையக்கூடுமோ அதைச்சொல்லுமென்று கேட்டார்கள். அதற்கவர் சொல்லுகிறார். (௧)

வேறிடத்தில் (இதுவிஷயமாய் வேறு சுருதிகளில்) சொல்லப் பட்டிருக்கிறதாவது, பெரிய நதியிலுண்டாகிற அலைகள்போல் (பூதா த்துமாவினுடைய பூர்வ புண்ணியபாப) கருமங்கள் நிவர்த்திசெய்ய த்தகாதவை, மரணமோ சமுத்திரம்பொங்கி கரை தாண்டுவதை (தடுக்க அசாத்தியம்) ப்போல் தடுக்கக்கூடாதது. ஸதஸத் (பாப புண்ணிய) பலன்களாகிற கயறுகளினால், முடவனைப்போல் கட்டப் பட்டதாயும் காவல்கூடத்திற் சிறைபட்டவனைப்போல சுவதந்திர மற்றதாயும் யமன்முன் நிற்கிறவனைப்போல அதிபய மடைந்ததாயும் மத்தியபானஞ்செய்து மயங்கியிருக்கிறவனைப்போல போகமாகிற மத் தியத்தினால் மயங்கியிருக்கிறதாயும் (பாபகிரகங்களாகிற பிசாசினால்) பிடிக்கப்பட்டவனைப்போல அலைகிறதாயும் பெரிய சர்ப்பத்தினால் கடி பட்டவனைப்போல் விஷயமாகிற பாம்பினால் வியாபிக்கப்பட்டதாயும்

மகா இருளைப்போல் ஆசையாகிற இருளினல் மறைக்கப்பட்ட குருடாயும் இந்திரஜாலம்போல் மாயா சுவரூப்மாயும் சுவப்நம்போல் பொய்த்தோற்றமாயும் கதளீகருப்பம்போல் சாரமற்றதாயும் (வாழைக் குருத்துப்போல் உறுதியற்றதாயும்) வேஷக்காரனைப்போல பல பல வேஷமெடுக்கிறதாயும் சுவற்றிலெழுதிய சித்திரம்போல் பொய்யான மனோக்கியமாயு மிருக்கிறது (எதுவோ அதுதான் பூதாத்தும சுவரூபம்). சப்தஸ்பரிசாதி விஷயங்கள் மரணதருமமுடைய (பூதாத்துமாவுக்கு) வனுக்குப் பிரயோஜன மற்றவைகளானாலும் பிரயோஜமுள்ளவைகளைப்போல காணப்படுகின்றன. இவைகளி லபிமானமுள்ளவனுயிருக்கிற பூதாத்துமாவானவன் பரமபதத்தை ஸ்மரிக்கிறதில்லை. (௨)

பூதாத்து மத்துவம் (ஜீவபாவம்) விட்டுப்போகிறதற்கு இது (அடியில் சொல்லப்போகிறது) தான் உபாயம். வேதமூலமாய் * ஆத்மதத்துவவித்தையை அறிகிறதும் சுவதருமானுஷ்டானம் † செய்கிறதும் தன் வருணுசிரமத்திலேயே யிருக்கிறதும் தான் விதி. மற்றவைகளெல்லாம் பில்லுகளைப்போல (அற்பமாகிய துரும்பு விசேஷகாரியங்களுக் குபயோகமற்றதுபோல என்பது கருத்து). இதினாலே (ஆத்மவித்தை சுவதருமானுஷ்டானம் வருணுசிரமத்திலிருத்தல் இவைகளினாலே) பிர்ம்மத்தை யடைகிறான். இந்த மார்க்கத்தைவிட்டு மற்ற மார்க்கங்களிலே நடந்தால் கீழே போகிறான் (நரகாதி தாழ்ந்த ஸ்தானத்தை யடைகிறான். அதாவது, சமுசாரம் அவனுக்கு நிவர்த்தியாகிறதில்லை). வேதத்தில் எது சொல்லப்பட்டிருக்கிறதோ அதுதான் சுவதருமம். சுவதருமத்தை மீறுகிறதினாலே ஆசிரமி யாகமாட்டான். ஆசிரமத்திலில்லாமல் தபஸியாயிருக்கிறானென்பது அயுக்தம். (வருணுசிரம தருமத்தை விடவும்கூடாது தபசும் செய்யவேண்டியதென்பது கருத்து. தபசில்லாதவனுக்கு ஆத்மஞானமு முண்டாகிறதில்லை கருமத்தின் பிரயோஜனமு முண்டாகிறதில்லை ஏனென்றால், தபசினாலே சித்தசுத்தியாகிறது. சித்த சுத்தியினாலே மனதுண்டாகிறது அதாவது விவேக ஞானமுண்டாகிறது. மனதினாலே மறுபடி பிறப்பற்ற ஆத்மாவை யடைகிறான், என்றால் ஜீவபாவம்போய் பிர்ம்மமாகிறான்). (௩)

---

* வேதத்தில் முந்தியபாகம் கருமகாண்டம். பிந்தியபாகம் ஞானகாண்டம். கருமகாண்டத்தில் சொல்லியிருக்கிற கருமங்களைப் பலனை யிச்சிக்காமல் செய்து ஈசுவரார்ப்பணம் செய்தவந்தால் அதினால் சித்தசுத்தியும் சித்தசுத்திமூலமாய் ஞானமு முண்டாகிறது. ஆகையா லது ஞானத்திற்கு சாதனமாகிறது. ஞானகாண்டம் மோக்ஷ சாதனம்.

† சுவதருமானுஷ்டானமானது வேதத்தில் விதித்த தருமத்தை அதில்சொல்லிய விதிப்படி அனுஷ்டானம் செய்வதுதான். ஆனால் கருமபலனை யிச்சிக்கக்கூடாது. பலனைக் கொடுக்கக்கூடியதாகிய காமியகருமங்களைச் செய்யக்கூடாது.

பிர்ம்மஞானத்தையறிந்த ஒருவன் பிர்ம்மமிருக்கிறதென்று சொன்னான். தபோநுஷ்டானத்தினால் சகல பாபத்தையும் போக்கடித்துக்கொண்டவன் பிர்ம்மபிராப்திக்குத் தபஸ்தான் மார்கமென்று சொன்னான். ஓங்காரத்தை எப்போது மிடைவிடாமல் தியானம் செய்துகொண்டிருக்கப்பட்டவன் அது பிர்ம்மத்தினுடைய மகிமையென்று சொன்னான். ஆகையால் ஞானம் தபஸ் (ஓங்கார) தியானம் இவைகளால் (கிரமமா யிந்த மூன்றுகளால்) பிர்ம்ம மடையப்படுகிறது. அவன் (இப்படித் தியானிக்கிற வித்வான்) பிர்ம்மத்திற்கு அப்புறம் போகிறான் (என்றால் ஹிரண்ணியகருப்பனை அல்லது சப்த * பிர்ம்மத்தை அதிக்கிரமித்து பரபிர்ம்மமாகிறான்). தேவதைகளுக்கு மேலான தேவாதி பத்தியத்தை யடைகிறான். எந்த வித்துவானானவன் இந்த மூன்றுகளினாலே பிர்ம்மத்தை உபாசிக்கிறானோ அவன் அக்ஷயமாயும் (நாசமற்றதாயும்) அபரிமிதமாயும் (அளவிடக்கூடாததாயும்) அநாமயமாயும் (வியாதி முதலியவை யில்லாததாயும்) இருக்கிற சுகத்தை யனுபவிக்கிறான். எந்த (அவித்தியா சம்பந்தமாகிய தேகேந்திரியாதி) வஸ்துக்களினாலே அவமதிக்கப்பட்டும் (எந்த வஸ்துக்களுக்கு) தேராளியாய்ச் செய்யப்பட்டு மிருந்தானோ அந்த வஸ்துக்களால் விடுபட்டு தன் ஆத்மாவிலேயே சாயுஜ்ஜியத்தை யடைகிறான் (பிர்ம்மமாகிய தன் சுவசுவரூபத்தை யடைகிறான்). (௪)

வாலகில்லியர்கள் ஓ! பகவானே! நீர்தான் (கேட்பவர்களுக்கு அனுபவம் வருகிறவரையில்) சொல்லுகிறவர். நீர்தான்சொல்லுகிறவர். தாங்கள் சொன்னதெல்லாம் மனதில் கிரகித்துக்கொண்டோம். இன்னொருகேள்விக்கு முத்தரம் சொல்லவேண்டு மென்றார்கள். (அதாவது) அக்கினி, வாயு, சூரியன், பிராணனாகிய காலம், அந்நம், பிரும்மா, ருத்திரன், விஷ்ணு இவர்களில் ஒருவனை சிலர்தியானம் செய்கிறார்கள். சிலர்மற்றொருவனைத் தியானம்செய்கிறார்கள். இவர்களுக்குள் (அக்கினி முதலிய தேவதைகளுக்குள்) சிரேஷ்டமானவன் யார்? உமக்கு எவன் சிரேஷ்டனோ அவன்தான் எங்களுக்கும் சிரேஷ்டன் (என்பதே). அதற்கு அவர் (பிரஜாபதி) சொல்லுகிறார். (௫)

சிரேஷ்டமாயும் நாசமற்றதாயும் சரீரமற்றதாயு மிருக்கிற பிர்ம்மத்திற்கு இவர்கள் (மேற்சொன்ன அக்கினிமுதல் விஷ்ணுவரை) முக்கியமான ரூபங்கள். உலகத்தில் எந்தெந்த மனிதனுக்கு எதெதில் (அக்கினிமுதலிய எந்தெந்த தேவதையில்) பிரியமோ அதில் சந்தோஷமடைகிறான். இவையெல்லாம் (இந்த தெய்வங்களெல்லாம்) பிர்ம்மம்தான். இவைகள் பிர்ம்மத்தினுடையசிரேஷ்டமான சரீரங்கள். இவைகளைப் பிர்ம்மமென்றே தியானம் செய்யவேண்டியது. ஆராதிக்கவும்

* சப்தப்பிர்ம்மத்தின் அர்த்தம் இதின் ௬-வது பிரபாடகம் ௨௨-வதில் காண்க.

வேண்டியது (புஷ்பாதிகளினல் பிரதிமாதிகளில் பூஜிக்கவேண்டிய து). மறைக்கவேண்டியது (என்றால், தேவதைகள் என்கிற பாவனை யைமறைத்து அதாவது பிர்ம்மத்தைக்காட்டிலும் அந்நியமானதென் கிற பாவனையைதள்ளி பிர்ம்மமாகவே எண்ணவேண்டியதென்பது தா த்பரியம்). இப்படி உபாசனைசெய்வதினல் அந்தந்த தேவதைகளில் ஐக்கமாய் மென்மேல் லோகங்களில் சஞ்சரிக்கிறான். பிறகு பிரப ஞ்சம் முழுதும் நசிக்கும்போது ஆத்மாவி லொன்றாய்ப்போகின்றான். (மேல் லோகங்களென்றால் மேலேழு லோகங்களில் சிரேஷ்டமான ஜனேலோக தபோலோக சத்தியலோகங்கள். இந்த அக்கினிமுதலான தேவதைகளைப் பிர்ம்மமென்கிற பாவனையன்றி தேவதைகளாகவே யு பாசித்தால் அந்தந்த் தேவதாசுவரூபமாய் அவர்களுக்குள்ள லோகங் களிலுள்ள சுகங்களை யனுபவித்துக் குறித்தகாலம் முடிந்தவுடன் மறு படி பூமியில் ஜனிக்கிறான். அந்த தேவதைகளை பிர்ம்மசுவரூபமாக உபாசித்தால் அவரவர்களுபாசனை பலத்திற்குத்தக்கதாக அந்த உபா சிய தேவதையாகி அதிலிருந்து கிரமக்கிரமமாய் மென்மேல் லோகத் தையடைந்து கடைசியில் பிரபஞ்சத்திற் காதியானவனும் சகலதேவ சுவரூபியாயும் சர்வசிரேஷ்டமான சத்தியலோகத்தில் வாசம்செய்கிற வனுயு மிருக்கிற ஹிரண்ணியகருப்பருடைய லோகத்தையடைந்து மகாப்பிரளயகாலத்தில் ஹிரண்ணியகருப்பருடனேகூட பிர்ம்மத்தி யிக்கியமாகிறான் * இதுதான் கிரமமுத்திமார்க்கம் (வராகோபநிஷத் தில் சொல்லியிருக்கிற வாமதேவமார்க்கமென்பதும் இதுதான்). இப் படிக்கன்றி தான் உபாசிக்கிற தேவதை எதுவோ அதற்குள்ள மாயோ பாதியையும் தனக்குள்ள அவித்தியோபாதியையும் தள்ளி தானே பிர் ம்மமென்று உபாசிப்பானுகில் பிராரப்தமாகிய இத்தேகமிருக்கையி லேயே முக்தனுகிறான். பிராரப்ததேகம் நசித்தால் விதேகமுக்தியாகி ற கைவல்லியத்தை யடைகிறான். அதாவது பிர்ம்மமாகிறான்). (இது தான் வராகோபநிஷத்தில் சொல்லியிருக்கிற சுகமார்க்கம்). (சு)

நான்காவது பிரபாடகம் முற்றிற்று.

---

## ரு-வது. பிரபாடகம்.

குத்ஸாயனன் செய்தஸ்துதி ஆரம்பிக்கப்படுகிறது. (இதுவரை யில் சாதனத்தோடுகூடிய பிர்ம்மவித்தையை உபதேசித்து சகல உபா சனைக்கும் அங்கமாகிய நமஸ்கார மந்திரங்களைச் சொல்லுகிறார். இது குத்ஸாயனன் செய்த ஸ்தோத்திரமாகையால் கௌத்ஸாய நீயென்ற பெயரால் சொல்லப்படுகிறது). நீயே பிரும்மா (ஹிரண்ணியகருப் பன்), நீயேவிஷ்ணு, நீயேருத்திரன், நீயேபிரஜாபதி (விராட்), நீயே அக்கினி, நீயேவருணன், நீயேவாயு, நீயே இந்திரன், நீயே சந்திரன்,

* பிரகதாரண்ணிய கோபநிஷத் அத்-உ-கரு, பார்க்க.

நீயே * அந்நம், நீயேயமன், நீயேபூமி, நீயேபிரபஞ்சம், நீயே நாச மற்றவன். (நான்குவித) புருஷார்த்தவிஷயத்திலும் தன் தன் சுபா வத்திற் கடுத்த விஷயத்திலும் இந்த லோகமானது உன்னையே ஆதா ரமா யுடைத்தா யிருக்கிறது. ஓ! சகலத்திற்கு மீசனுயிருக்கிறவனே உன்பொருட்டு நமஸ்காரம். பிரபஞ்சசுவரூபியா யிருக்கிறாய். பிர பஞ்சசிருஷ்டி காரியத்தைச் செய்தவனுயு மிருக்கிறாய். இந்தப் பிர பஞ்சத்தை புஜிக்கிறவனுயிருக்கிறாய். இந்தப் பிரபஞ்சத்திற்கு உயிரா யிருக்கிறாய். சகல கிரீடை (வெளிவிஷயங்களிலுள்ள பிரீதி) இரதி (வெளிவிஷயங்களை விரும்பாமல் உள்ளுக்குள்ளே பிரீதி) இவைகளு க்கு யஜமானனுயிருக்கிறாய். சாந்தாத்துமாவா யிருக்கிறாய். உன்பொ ருட்டு நமஸ்காரம். மகாரஹஸியனு யிருக்கிற உன்பொருட்டு நமஸ் காரம். சிந்திக்கத்தகாதவனுயும் அளவிடக் கூடாதவனுயும் ஆதியந்த மற்றவனுயுமிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். (க)

(பிர்ம்ம விஷ்ணு ருத்திராதிகளுள்பட) இந்தப் பிரபஞ்சமானது சிருஷ்டிக்கு முந்தி ஒரே இருள்மாத்திரமாக விருந்தது. (தமோகுண த்தைப் பிரதானமாயுடைய மாயாமாத்திரமாக நாமரூபங்களற்றதாக விருந்தது). பிர்ம்மத்தினிடத்திலிருந்தது. பரமாத்துமாவினுலேவப் பட்டதாய் விஷமத்துவத்தை † அடைகிறது. இது ரஜோரூபம். இந்த ரஜஸ் ஏவப்பட்டு விஷமத்துவத்தை யடைகிறது. இது சத்துவரூபம். இந்த சத்துவம் ஏவப்பட்டு இரஸம் பெருகிற்று. (சச்சிதாத்ம ஆகா ரமே இவ்விதமாக பெருகிற்று) இதுதான் ஆத்மாவினுடைய ஓரம்சம். (கடாகாசம்போல்) இந்த அம்சமானது சேதனமாத்திரமாக விருக் கிறது. ஒவ்வொரு பிராணியிடத்திலும். (அநேக ஜலபாத்திரத்தில் சூரியன்போல) பிரதிபிம்பமாயிருக்கிறது. அதுதான் க்ஷேத்திரக்ஞன் (பாதம்முதல் சிரசுவரை தேகத்தை தானே என்று அறிகிறவனுகிய ஜீவன்). சங்கற்பம் நிச்சயம் அபிமானம் இவைகளை யடையாளங்க ளாக வுடையவன். பிரஜாபதி (சமஷ்டிவிராட்சரீராபிமானி) விசுவன் (வியஷ்டி சரீராபிமானி) இவர்களும் முன்சொன்ன மற்றவர்களும் (சத்துவகுணத்தில் பிரதி பலித்தச் சிதாத்துமாவுக்கு) சரீரங்கள் (அதாவது ஒவ்வொரு சரீரத்திலும் விளங்குகிறவர் சிதாத்துமாவே என்று அறியத்தக்கது). (ஓ வாலகில்லியர்களாகிய) பிர்ம்மசாரிகளே! இந்த ஆத்மாவினுடைய தாமஸாம்சம் ருத்திரன். ஓ பிர்ம்மசாரிகளே! இவனுடைய ராஜஸாம்சம் பிர்ம்மா. ஓ பிர்ம்மசாரிகளே! இவனுடைய சாத்துவிகாம்சம் விஷ்ணு. இந்த (ஆத்மா) ஒருவனே மூன்றுகவும்

---

* சகல பிரபஞ்சத்திற்கும் ஆஹாரம் பிர்ம்மமே யாகையால் அந்நமெனப் பட்டது. தைத்திரி யோபநிஷத், உ-உ-பார்க்க

† ஜலத்தில்போட்டவிதை விருத்தியடைவதுபோல் விகாரப்பட்டது.

* எட்டாகவும் † பதினொன்றாகவும் ‡ பனிரெண்டாகவும் § அநேகமாகவும் ¶ இருக்கிறான். எல்லாவிடத்திலும் பிரகாசித்தவனாயிருக்கிறான். இப்படிப் பிரகாசித்திருக்கிறதினாலே பூதமென்கிற பெயரையுடைய ஆத்மாவாகிறான். சகல பூதங்களிலும் பிரவேசித்தவனாயும் சகல பூதங்களையும் ஏவுகிறவனாயும் வியாபித்திருக்கிறான். இந்தப்படிக்கு உள்ளும் வெளியும் ‖ விளங்குகிறான். உள்ளும் வெளியும் விளங்குகிறான்.

ஐந்தாவது பிரபாடகம் முற்றிற்று.

---

## சு-வது பிரபாடகம்.

(இதுவரையில் சிதாத்மா ஒருவனே பிரத்தியகாத்தும (ஜீவாத்தும) சுவரூபமாக வறியத்தக்கவனென்றும் அவனே பிர்ம்மா முதலான பலரூபங்களாக விருக்கிறானென்றும் தியானிக்கத்தக்கதென்பதும், முமுக்ஷுக்களுக்கு வேண்டிய சகல பிரயோஜனங்களும், சிதாத்தும ஸாயுஜ்ஜியப் பிராப்த்தியே முக்தி யென்பதும் சொல்லப்பட்டது. இனிமந்தமத்தியம அதிகாரி விஷயமான அநேகவித உபாசனையின் பொருட்டும் அதற்குவேண்டிய சாதகங்களின் பொருட்டும் சிதாத்துமாவினுடைய மகிமை சொல்லப்படுகிறது).

இந்த ஆத்மாவானவன் இரண்டுவிதமான ரூபத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறான். அதாவது பிராணன் சூரியன். இவர்கள் இதற்கு (இந்த ஆத்மாவுக்கு) உள்ளும் வெளியுமான விரண்டுமார்க்கமா யிருக்கிறார்கள். இவர்கள் இராப்பகல் சுத்துகிறார்கள். இந்தசூரியன் வெளியிலிருக்கிற ஆத்மா. பிராணன் உள்ளேயிருக்கிற ஆத்மா. வெளியாத்துமாவினுடைய நடையினாலே (சஞ்சாரத்தினாலே) உள்ளாத்துமாவினுடைய சஞ்சாரம் ஊகிக்கப்படுகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது. வித்துவானாயும் பாபத்தைப் போக்கடித்துக்கொண்டவனாயும் இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டவனாயும் சுத்தமான சித்தமுடையவனாயும் பிர்ம்மநிஷ்டனாயும் (வெளி விஷயங்களிலிருந்து) கண்களைத் திருப்பிக்கொண்டவனாயும் (அந்தர் நோக்கமுள்ளவனாயும்) இருக்கிறவன் அந்தராத்துமாவினுடைய கெதியினால் வெளியாத்துமாவின் கெதியானது அனுமானிக்கப்படுகிறதென்று சொல்லுகிறான் (எப்படிஎன்

---

* மூன்று என்றால், பிர்ம்ம விஷ்ணு ருத்திரர்கள்.

† எட்டு என்றால், பஞ்சப்பிராணன்-க. சூரியன்-க. நக்ஷத்திரங்களுள்பட சந்திரன் - க. பூதங்கள் - ரு. ஆக எட்டு.

‡ மனதுள்பட இந்திரியங்கள் - கக.

§ மேற்படி பதினொன்றுடன் புத்தியைச் சேர்த்தால் - கஉ.

¶ இந்திரிய விருத்திகள் பலவகையாகையால் அநேகமென்று சொல்லப்பட்டது.

‖ உள்ளே சாக்ஷியாயும் அறிகிறவனாயும் கருத்தா போக்தா முதலானவனாயும் வெளியே ஈசுவரனாயும் காலமாயும் தேவதைமுதலிய ரூபனாயும் விளங்கிறான்.

ருல் ஒருபகல் ஒரு இரவுசேர்ந்த ஒருநாளில் சூரியன் மகாமேருவை
பிரதக்ஷிணம் செய்துக்கொண்டு பிரும்மாண்டத்தைச் சுத்திவருகிருன்.
அந்த ஒருநாளில் பிராணவாயு - உக000 - அல்லது சரியாய்ச் சொல்
வதானல் உககூ00 - சுவாசமாக தேகத்திற்குள் சுத்திவருகிருன். சூரி
யனுடைய காலஅளவைக்கொண்டு இவ்வளவு சுவாசமாச்சுதென்றும்
சுவாசத்தினுடைய அளவைக்கொண்டு சூரியனுடைய (நாழிகை விநா
டிமுதலிய) அளவை கணக்கிடலாமென்றும் தாத்பரியம். இதின்பே
ரில் தான் மனிதனுக்கு நூறுவயது கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்த
வயதிற்கு அதிகமாயிருக்கக் காண்கிறோமேயென்றல், சுவாசத்தை
யதிகமாய்விடாம லடக்குவதினல் வயது அதிகமாகலாம்). சூரியனிலி
ருக்கிற ஹிரண்மயமான (தங்கவடிவுள்ள) புருஷன் அந்த சூரியமண்ட
லத்திலிருந்து இந்தலோகத்தைப் பார்க்கிருன். அவனே (ஜந்துக்க
ளுடைய) ஹிருதயகமலத்திற்குள்ளே யிருந்துகொண்டு அந்நத்தைப்
புஜிக்கிருன். (அதாவது அந்நத்தை அல்லது விஷயங்களை புஜிக்கிரு
னென்பது தாத்பரியம்). (க)

ஹிருதயகமலத்திற்குள் வாசம் செய்துக்கொண்டு எவன் அந்நத்
தைப் புஜிக்கிருனே அந்த அக்கினியே ஆகாசத்தில் சூரியதேஜஸாக
விருந்துகொண்டு காலனென்கிற பெயரையடைந்து கண்ணுக்குக்
காணப்படாமல் சகலப்பிராணிகளையும் அந்நமாக பக்ஷிக்கிருன் (சம்
ஹாரம் செய்கிருன்).

கமலமென்பது எது? அது எதினல் செய்யப்பட்டது? (என்று
கேட்ட வாலகில்லியர்களுடைய கேள்விகளுக் குத்தரஞ் சொல்லப்
படுகிறது). ஆகாசமெதுவோ அதுதான் கமலம். * இதற்கு நான்கு
திக்குகளும் நான்கு உபதிக்குகளும் இதழ்கள். பிராணன் ஆதித்தன்
இவ்விருவரும் ஒருவருக் கொருவர் சமீபத்தில் சஞ்சரிக்கிருர்கள்.
இவர்களை ஓமென்கிற அக்ஷரத்தினலேயும் (ஐ-ஹூ-ஸுவஸ்-ஸூவ: என்
கிற) வியாகிருதிகளினலேயும் சாவித்திரியினலேயும் (சூரியசம்பந்த
மானருக்காகிய காயத்திரியினலேயும்) உபாசிக்கவேண்டியது. (உ)

பிர்ம்மத்திற்கு மூர்த்தம் அமூர்த்தம் என விரண்டுரூபங்களுண்
டு. எதுமூர்த்தமோ (உருவமோ) அது அசத்தியமானது. அமூர்த்த
மெதுவோ அது சத்தியமானது. இதுதான் பிர்ம்மம். அதேதேஜஸ்.
எதுதேஜஸோ அது சூரியன். இந்த சூரியன்தான் ஓம்-என்கிற ஆத்
மாவானன். அவன் (அந்தசூரியன் பிரணவமாகிய) தன்னை மூன்றுவித
மாய்ச் செய்தான். ஓம் என்றது மூன்றுமாத்திரைகள். (அவையாவன
அ. உ. ம். இவைகள்தான். இந்த மூன்றுமாத்திரைகள்தான் அவயவங்

* தேவசம்பந்தமான ஆகாசத்திற்கும் ஹிருதய ஆகாசத்திற்கும் பேதமில்லை
யாகையா லிரண்டுக்கும் கமலமென்று பெயர்.

கள்). "இவைகளினுலே இந்த (பிரபஞ்சம்) சகலமும் குருக்கும் நெடுக்குமாய் (குருக்கும் நெடுக்குமாய் நெய்யப்பட்டிருக்கிற துணிபோல) கோர்க்கப்பட்டிருக்கிறது. இது நானென்று (சூரியன்) சொன்னுன்." இந்த ஆதித்தனே ஓங்காரமென்று தியானம் செய்யுங்கள். (உங்களுடைய) ஆத்மாவை (சூரியனிடத்தில்) சேருங்கள் (ஆத்மாவை சூரியனிடத்திலும் சூரியனை ஆத்மாவிடத்திலும் சேர்த்து ஏகமாக பாவியுங்கள்). (ரு)

வேறிடத்திலும் (இவ்விஷயத்தைக்குறித்து சாந்தோக்கியோபநிஷத்-க-ரு-லும்) சொல்லப்பட்டிருக்கிறது. "உத்கீதம் (சாமவேதத்தி "லுள்ள ஒருகானம். இது ருக்வேதத்திலுள்ள பிரணவத்திற்குச் சம "மாயிருக்கிறது) எதுவோ அது (ஓங்காரமாகிற) பிரணவம். பிரணவ "மெதுவோ, அது உத்கீதம். சூரியன்தான் உத்கீதம். அவன்தான் பிர "ணவம்" என்று சுருதிசொல்லிற்று. "எது பிரணவமென்று சொல் "லப்படுகிறதோ அது உத்கீதம். அதுதான் கருமங்களைத் துடங்கிற "தற்கு முதன்மை. அது ஜோதிசுவரூபம். தூக்கமற்றது. ஜரையற் "றது. மரணமற்றது. மூன்று * பதங்களை யுடையது. மூன்று † அக்ஷ "ரங்களை யுடையது. ஐந்துவிதமாய் ‡ அறியத்தக்கது. (ஹிருதய) "குகையில் வைக்கப்பட்டிருக்கிறது" என்று சுருதிசொல்லிற்று.

(சமுசாரமாகிய பிரபஞ்சத்தை அடுத்த நிமிஷத்தில் இருக்கத்தக்கதல்ல வென்கிற அர்த்தத்தைக் கொடுக்கிற அசுவத்தவிருக்ஷ (அரசமர) மாக § வருணிக்கப்படுகிறது). அசுவத்தமாகிய பிரபஞ்ச விருக்ஷத்திற்கு பிர்ம்மமானது ¶ அதின்மூன்று பாதங்களுடன் மேல்நோக்கிய வேராக விருக்கிறது. ஆகாசம் வாயு அக்கினி அப்பு பிருதுவி முதலியவைகள் அதற்குக் கிளைகளாக விருக்கின்றன. இது பிர்ம்மம். இந்தப் பிர்ம்மத்தினுடைய தேஜஸானது சூரியன். ஓம் என்கிற அக்ஷரத்திற்கும் தேஜஸ் இந்தசூரியன்தான். ஆகையினுலே ஓம் என்கிற மந்திரத்தினுல் எப்போதும் இதை (பிராணுதித்தனை) உபாசிக்கவேண்

* பிராணன் விஷயத்தில் ஜாக்கிரத்சுவப்ந சுஷுப்தி அவஸ்தைகள்மூன்று, சூரியன் விஷயத்தில் ஹூ: ஹுவ: ஸுவ: - என்கிற வியாகிருதிகள் மூன்று.

† அ. உ. ம.—அ-உ-ம் என்ற அக்ஷரங்களே மூன்று. இவைகள் சேர்ந்து ஓங்காரமாகிறது.

‡ பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என ஐந்துவாயுக்களாக ஹிருதய; குகையிலிருந்துகொண்டு தேகத்தில் சஞ்சரிக்கின்றனவென்று அறியத்தக்கது.

§ இந்த அசுவத்த விருக்ஷவருணனையை பகவத் கீதார்த்ததீபிகை ருஉஅ-ருஉகூ-ருகூ0-பக்கங்களில் காண்க. கடோபநிஷத்-சு-க. பார்க்க.

¶ திருபாத் விபூதிஎன்கிற விஷயம், ருக்வேதம் ரு-க0-க0-ரு. சுக்கில யஜுர்வேதம் ரு-ருக-ரு-சாந்தோக்கியோபநிஷத் ரு-கஉ-இவைகளில் பார்க்க.

டியது. இந்த மகத்துவத்தைச் சொல்லப்பட்ட சுலோகமொன்றிருக்கிறது. (கடோபநிஷத்-உ-கசு-பார்க்க) "இந்த அக்ஷரம்தான் புண்ணியத்தைக் கொடுக்கத்தக்கது. இதேதான் சிரேஷ்டமானது (மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கது). இதை (ஓங்காரத்தை) எவனறிகிருனே அவனிச்சிக்கிற தவனுடையதாகவே யிருக்கிறது". (ச)

மற்றொரு விடத்திலும் (வேறுசுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. (அதாவது) "ஓங்காரமானது இதற்கு (பிராண ஆதித்திய ஆத்"மாவுக்கு) சப்தசரீரம் (உதாத்தஅநுதாத்த சுவரிதமாகிற சப்தம்தா"ன்சரீரம்). அவனுக்கு ஆண்பால் பெண்பால் அஃறிணைப்பால் இவை"கள் லிங்கசரீரம். அவனுக்கு அக்கினி, வாயு, ஆதித்தன் பிரகாச சுவ"ரூபமான சரீரம். அவனுக்குப் பிரும்மா ருத்திரன் விஷ்ணு இவர்கள் "ஆதிபத்தியத்தையுடைய (அதிகாரத்தைவகித்த) சரீரம். கார்ஹபத்"தியாக்கினி தெக்ஷணாக்கினி ஆகவநியாக்கினி இவைகளை வாயாகவுடைய "சரீரம். ருக்யஜுஸ்ஸாமம் இவைகள் (இந்த வேதங்கள்) விக்ஞான "சரீரம். பூலோக புவர்லோக சுவர்லோகங்கள் லோகசரீரம். இறந்த "நிகழ்வரும் காலங்கள் காலரூபமான சரீரம். பிராணன் அக்கினி சூரி"யன் இவைகள் தேஜஸ் (உஷ்ண) சரீரம். அன்னம் ஜலம் சந்திரன் "இவைகள் திருப்திரூபமான சரீரம். புத்தி மனது அகங்காரம் இவை"கள் சேதனசரீரம். பிராணன் அபானன் வியானன் இவைகள் பிரா"ணரூபமான சரீரம். * ஆகையால் ஓங்காரத்தினாலே இந்தரூபங்கள் "ஸ்தோத்திரம் செய்யப்பட்டதாகவும் ஆராதிக்கப்பட்டதாகவும் சம"ர்ப்பிக்கப்பட்டதாகவும் ஆகிறது. ஓ! சத்தியகாமா! ஓங்காராக்ஷர"மானது. பரபிர்ம்ம (நிர்குண) மாயும் அபரபிர்ம்ம (சகுண) மாயுமிரு"க்கிறது" என்று (பிரசிநோபநிஷத்தில் பிப்பலாதர் சத்தியகாமனுக்கு) சொன்னார். (ரு)

(பஞ்சபூத பரிணாமாத்துமகமான) இது (இந்தப் பிரபஞ்சமானது) குறிப்பிட்டுசொல்ல கூடியதல்லாததாக (முன்னமே) இருந்தது. அப்போது (பிரபஞ்ச சத்தாம்த்திரமாய் அல்லது திருலோகசரீரியாயிருந்த) பிரஜாபதியானவர் பூர்வஞானத்தைத் தூண்டுவதாகிய தபஸை (ஆலோசனையை) செய்து (ஹூம்ஹுவஸ்ஸுவஃ) பூர்புவஸுவகவென்று உச்சரித்தார். இவைகள் பிரஜாபதியினுடைய ஸ்தூலசரீரம். இது முன்சொன்ன லோகசரீரம். (ஸுவஃ) ஸுவக என்பதுதலை (ஹுவஃ) புவகஎன்பது நாபி (ஹூம்) பூஃஎன்பது பாதங்கள். சூரியன்கண். ஆத்மாவினுடைய மகத்தாயிருக்கிற வியாபாரமானது கண்ணுடைய வசமாயிருக்கிறது. ஏனென்றால், அவன் கண்ணினாலே சகல விஷயத்

* இவ்விதமாய் மும்மூன்று ரூபங்களாய் சொல்லிவந்த வைகளி லொவ்வொன்றும் அ - உ - ம் - சுவரூபமா யிருக்கிறதாகையால் இவைகளை பரபிர்ம்மமாகவும் அபரபிர்ம்ம (ஸகுணபிர்ம்ம) மாகவும் தியானிக்கத்தக்கது.

தையும் பார்க்கிறான். கண்தான் சத்தியம். ஏனென்றால், புருஷன் கண்ணுக்குள்ளிருந்து சகலவஸ்துக்களையு மறிகிறான். ஆகையால், மனிதன் சூரியனை ஸூர்யஸ்ஸர்வம் என்று உபாசனை செய்யவேண்டியது. இப்படி யுபாசித்தால் பிரபஞ்ச சுவரூபியாயிருக்கிற பிரஜாபதியானவர், பிரபஞ்சத்திற்குக் கண்ணான சூரியனைப்போல, உபாசிக்கப்பட்டவராகிறார். இதுவிஷயத்தில் (சுருதி) சொல்லுகிறதாவது "சூரியனு "டைய ரூபமானது பிரஜாபதியினுடைய லோகத்தைத் தரிக்கிறரூப "மாயிருக்கிறது. இதில் (இந்தசூரியனில்) இந்த லோகமெல்லாம்* "அடங்கியிருக்கிறது. இந்த லோகத்தில் அது (சூரியன்) † அடங்கி "யிருக்கிறது. ஆகையால் அதை (அந்தசூரியனை) உபாசிக்கவேண்டியது" (௩)

தத்ஸவிதுர்வரேண்யம் (தத்ஸவிதுர்வரேண்ணியம்) இந்த (காயத்ரீ) பதங்களில் சூரியன்தான் சவிதா. தன் ஆத்மசுவரூபம் வெளியாக வேண்டுமென்கிற (விருப்பமுள்ள) வனால் இதினாலே (இந்தகாயத்ரீ மந்திரத்தினாலே) பிரார்த்திக்கப்படத்தக்கவன் என்று பிர்ம்மவாதிகள் சொல்லுகிறார்கள். பர்கோ தேவஸ்ய தீமஹி (பர்கோதேவஸ்ய தீமஹீ) சவிதாதான் தேவன். ஆகையினாலே அவனுடைய பர்க்கசுவரூபமான ஆத்மாவைத் தியானிக்கிறோமென்று பிர்ம்மவாதிகள்சொல்லுகிறார்கள். தியோ யோ நஃ ப்ரசோதயாத். (தியோயொநப்பிர சோதயாத்)—எங்களுடைய புத்திகளை அவன் செவ்வையாய் (உத்தமமான விஷயத்தில்) பிரேரேபிக்கட்டுமென்று பிர்ம்மவாதிகள் சொல்லுகிறார்கள். பின்னும் சூரியனிடத்திலிருக்கிற அல்லது கண்ணின் கருவிழியிலிருக்கிறவனெவனோ அவன் பர்கா (பர்கா), அல்லது, பாபிஃ = கிரணங்களினாலே மதிஃ = விஷயங்களில் பிரவிருத்தி யுள்ளவனெவனோ அவன் பர்கன். அல்லது ப்ருஜ்யதீ=வறுக்கிறது. அதாவது-ஜகத்தை சம்காரம் செய்வதினாலே பர்க்கன். அல்லது ருத்திரன். அல்லது ப= (ப) உலகங்களை விளங்கச்செய்கிறவன். ர = (ர) எல்லாப்பிராணிகளையும் ரஞ்சிப்பிக்கிறவன். க=எல்லாப்பிராணிகளும் (சுஷுப்திப்பிரளயங்களில்) இவனிடத்திலடைகிறது. (விழித்தல்=சிருஷ்டிகாலத்தில்) இவனிடத்திலிருந்து வெளிப்படுகிறது. ஆகையால், பர்க்கனென்று சொல்லப்படுகிறான். அடிக்கடி சூயமான னைபடியினாலே (பிராத

---

* சூரியனில் லோகமடங்கி யிருக்கிறதென்றால், சூரியனுடைய பிரகாசமானது சகல லோகங்களிலும் பாவி பிரகாசிக்கிற தென்பது தாத்பரியம்.

† லோகத்தில் சூரியனடங்கி யிருக்கிறதென்றால், சாமான்னிய ஜனங்கள் கண்முதலிய சகலமும் சூரியனால் பிரகாசிக்கிறதென்று அறிகிறதில்லை யாகையால் அவர்களின்பொருட்டு சூரியன் லோகத்தி லடங்கியிருப்பதாக சொல்லப்பட்டது. அல்லது பிராணரூபமாய் சூரியன் லோகத்தில் வியாபித்திருப்பதால் லோகத்தில் சூரியனடங்கி யிருக்கிறதென்று சொல்லப்பட்டதாகவாவது கொள்ளலாம்.

ராதிஸவனங்களாகிய யக்ஞங்களுக்குக் கருத்தாவானபடியினாலே) சூரியனென்று பெயர் வந்தது. ஸவனானபடியினாலே (பிராணிகளுக்கு அந்நத்தை யுண்டுபண்ணுகிறதினாலேயும் பிராணிகளை யுண்டுபண்ணுகிறதினாலேயும்) ஸவிதாவென்று பெயர்வந்தது. ஆதானனானபடியினாலே (பிராணிகளுடைய ஆயிசு, பூமியினுடைய ரஸம் இவைகளை கிரகிக்கிறபடியினாலே) ஆதித்தனென்று பெயர் வந்தது. பவனம் செய்கிறபடியினாலே (பரிசுத்தம் செய்கிறபடியினாலே) பாவனன் (வாயு) என்று பெயர் வந்தது. ஆப்பியாயனத்=திருப்திசெய்விக்கிறபடியினாலே ஆப=ஜலம் என்கிறபெயர் வந்தது. இப்படி (ஆசாரியர்) சொன்னார். அமிருதனென்று பெயரையுடைய (பிராணரூபமான) ஆத்மாவானவன் சரீரத்தை நடத்துகிறவனையும் நினைக்கிறவனையும் அறிகிறவனையும் நடக்கிறவனையும் மலஜலம் விடுகிறவனையும் ஆநந்தப்படுகிறவனையும் செய்கிறவனையும் பேசுகிறவனையும் உருசிபார்க்கிறவனையும் முகருகிறவனையும் பார்க்கிறவனையும் கேட்கிறவனையும் உணருகிறவனையும் ஆகிறான், இவன் சரீரத்தில் பிரவேசித்து வியாபித்துக்கொண்டிருக்கிறான், என்று சொன்னார். அறிவானது துவைதமா யிருக்கையில் (பேதபுத்தியுடையபோது) ஆத்மாவானவன் கேட்கிறான், பார்க்கிறான், முகருகிறான், ருசிபார்க்கிறான், உணருகிறான், சகலத்தையும் அறிகிறான்என்று சொல்லப்படுகிறது (இவை ஜாக்கிரத் சுவப்ன அவஸ்தைகள்). அந்த அறிவானது அத்துவைதமாயிருக்கையில் ஆத்மாவுக்குக் காரியகரண கருமமில்லை (என்றால், சுஷுப்தி முதலானவைகளில் ஆத்மாவுக்கு விஷயேந்திரியங்களாவது இந்திரிய வியாபாரமாவது இல்லையென்பது கருத்து). அதற்கு (அந்தப் பிர்ம்மத்திற்கு) குறிப்பான பெயரில்லை. உவமையில்லை. அது காணக்கூடியதல்ல. (ஆனால்) அதென்ன? வாக்கினால் சொல்லக்கூடியதல்ல. (இந்திரியங்களுடன் சம்பந்தப்படுகிறபோதுதான் அவனுக்குச் செய்கை. சுத்தனாகவிருக்கையில் அவனிடத்தில் யாதொரு செய்கையு மில்லை. சுத்தன் நிர்குணன் நாமரூபம் செய்கைமுதலியன அக்ஞானத்தினால் அவனிடத்தில் ஆரோபிக்கப்படுகிறது). (எ)

இந்த ஆத்மாதான் ஈசுவரன், சம்பு, பவன் (ஹவன்), ருத்திரன் (இந்நான்கும் தமோகுணம்), பிரஜாபதி, சிருஷ்டிகருத்தா, ஹிரண்ணியகருப்பன், சத்தியன், பிராணன், ஹம்ஸன் (இவ்வாறும் இராஜோகுணம்). சாஸ்தா, விஷ்ணு, நாராயணன் (இம்மூன்றும் சத்துவகுணம்) அர்க்கன், ஸவிதா, தாதா, விதாதா, சக்கரவர்த்தியாயிருக்கிற இராஜன், இந்திரன், சந்திரன், (உலகத்திற்கு) உஷ்ணத்தை யுண்டுபண்ணுகிற சூரியன். இவன் (இந்த ஆத்மா) பெரிய நெருப்பினால் சின்ன தீபமானது மறைக்கப்பட்டிருப்பதுபோல அநேக துவாரங்களுள்ள ஜோதிமயமான அண்டத்தினால் மறைக்கப்பட்டிருக்கிறான். (ஆத்

மா பல வல்ல. ஆனல் சத்துவாதிகுணங்களுடைய சம்பந்தத்தினல் பிர்ம்ம விஷ்ணுமுதலிய பல ரூபங்களாகச் சொல்லப்பட்டது. அநேக கிரணங்களுள்ள சூரியப்பிரகாசத்தினல் அந்தச்சூரியனிடத்தில் சூக்ஷ்மமாயிருக்கிற ஆத்மா அக்ஞானிகளுக்குக் காணப்படுகிறதில்லை). அந்த ஆத்மாவை யறியவேண்டியது. தேடவேண்டியது. சகலப்பிராணிகளுக்கும் பயமில்லா திருக்கும்படியாய் (சகல பற்றுதல்களையும் விட்ட சந்நியாசியாய்) காட்டுக்குப்போய் இந்திரியங்களுடைய விஷயங்களைத்தள்ளி தன்னுடைய சரீரத்திலேயே ஆத்மாவை யறியவேண்டியது. * விசுவரூபன் (வெளுப்பு, கறுப்பு, நீலம், சிவப்பு முதலான சகலரூபமும் இவன்தான்). கிரசிக்கிறவன் (பூமியின் சாரத்தை அல்லது பிராணிகளுடைய ஆயுசை கிரசிக்கிறவன்). ஜாதவேதஸன் (எல்லாப்பிராணிகளையும் அறிகிறவன் அல்லது சகலமானப் பிராணிகளுடைய பிரவிருத்திக்கு ஸாக்ஷியாயிருக்கிறவன்). பராயணன் (சகல தேவதைகளுக்கும் ஆசிரயன்). ஓரே ஜோதியானவன் (ஜோதி சுவரூபனும் அத்துவிதியனு மிருக்கிறவன்). சகலத்தையும் தபிப்பிக்கிறான். அபரிமிதமான கிரணங்களையுடையவன். அநேகவிதமா யிருக்கிறான். பிராணிகளுக் குயிராயிருக்கிறான். அந்த (பரமாத்துமாவாகிற) சூரியன் உதையமாகிறான். † (அ)

ஆகையால் இந்த (சூரியன் பிராணன்) இரண்டாத்துமாக்களையும் (தன் னுத்மாவாகவே) அறிந்தவன் தனக்குள்ளேயே, பேதமில்லாமல் தியானம்செய்கிறான். தனக்குள்ளேயே பூஜிக்கிறான். உபாசனையில் நிலைபெற்றிருக்கிற மனதினுடைய இந்தத் தியானமானது வித்துவான்களால் ஸ்துதிக்கப்பட்டிருக்கிறது. மனதிலுள்ள துர்வாசனையை "உச்சிஷ்டோபஹதம்" என்கிற மந்திரத்தினல் பரிசுத்தம் செய்யவேண்டியது. அந்த மந்திரமாவது-உண்ட மிசசாந்நம்; உண்ட மிச்சம்கலந்த அந்நம்; பாபியினல் கொடுக்கப்பட்ட அந்நம்; சாதீட்டுக்காரனல் கொடுக்கப்பட்ட அல்லது சாதிட்டுக்காரனல் தொடப்பட்ட அந்நம்; இப்படிப்பட்ட என்னுடைய அந்நத்தை (இப்போது நான் புஜிக்கப்போகிற அந்ந மிப்படிப்பட்டதா யிருந்தாலும்) வசு (என்கிற தேவதை) வினுடைய பரிசுத்த சக்தியும் அக்கினியும் சூரியனுடைய கிரணங்களும் பரிசுத்தமாக்குவது மல்லாமல் என்னுடைய பாபங்களையும் போக்கடிக்கட்டும். முதலில் ஜலத்தினல் மறைக்கவேண்டியது (பிராணுதித்தர்களாகிய ஆத்மாவை ஆபோசனமாகிற வஸ்திரத்தினலே மறைத்ததாக எண்ணவேண்டியது ‡) பிராணுயஸ்வாகா அபானுயஸ்வாகா வியா

* இந்த அடையாளம்முதல் † இந்த அடையாளம்வரையிலுள்ள வாக்கியங்களை பிரசிநோபநிஷத்தில் காண்க.

‡ பிராணன் தனக்கு வஸ்திர மெதுவென்று கேட்டது, ஜலம்தானென்று சொன்னர். ஆகையால், புஜிக்கத்தொடங்குகையிலும், புஜித்தபிறகும் ஆசமனம் செய்யவேண்டும். சாந்தோக்கியோபநிஷத் ரு-உ.

னுயஸ்வாகா சமானுயஸ்வாகா உதானுயஸ்வாகா இந்த ஐந்துகளினுலே ஹோமம் செய்யவேண்டியது. பின்பு மிச்ச (அந்ந)த்தை மௌனமாக விருந்து புஜிக்கவேண்டியது. பிறகு மறுபடியும் ஜலத்தினுல் மறைக்க வேண்டியது. (உத்திரா போசனம் வாங்கவேண்டியது). வாயைக்கழு விக்கொண்டு ஆத்மாவை இரண்டுமந்திரங்களினுலே ஆத்மோபாசக னை அவன் தியானம் செய்யவேண்டியது. (அந்த மந்திரங்களாவன) “பிராணோக்நி விஸ்வாவி—பரமாத்துமாவே பஞ்சவாயுவாகிய பிராண “னுயும் ஜாடராக்கினி (வயிற்றிலிருந்து புஜித்தவஸ்துக்களைப் பக்குவம் “செய்கிறவன்) யாயுமிருக்கிறுன். எல்லாவற்றையும் சாப்பிடுகிற அல் “லது இரக்ஷிக்கிற அவன் (ஆத்மா) திருப்தியடைந்து எல்லோரையும் திருப்தி செய்யட்டும்.” (இதுவரையில் முதல்மந்திரத்தி னர்த்தம்). “சகலமும் நீரே. வைசுவாநரன் (சகலத்திலுமிருக்கிற அக்கினி “அல் “லது சகலப்பிராணிகளுக்கும் நியந்தாவாயிருக்கிற ஈசுவரன்) நீரே. “உண்டாயிருக்கிற சகலப்பிரபஞ்சமும் உம்மால் தரிக்கப்படுகிறது, “சகல ஆகுதிகளும் உம்மிடத்தில் பிரவேசிக்கட்டும், எல்லோருக்கு “ம் ஜீவனத்தைக் கொடுக்கப்பட்ட உம்மிடத்தில் எல்லோரும் ஜீவி த்துக்கொண் டிருக்கிறுர்கள்.” (இதுவரை இரண்டாவது மந்திரத் தினர்த்தம்). இந்தவிதிப்படி எவன் புஜிக்கிறுனே அவன் மற்றொன் றுக்கு அந்நமாகிறதில்லை. (இவன் யமனுக் கிரையாகிறதில்லை). (கூ)

மற்றொன்றும் அறியத்தக்கதாயுண்டு. (அதாவது) இந்த ஆத்ம யக்ஞத்திற்கு ஒரு மாறுதல்தான். (அதாவது) அந்நமெது? அந்நத் தைப் புஜிக்கிறவன் யார்? என்பவைதான். அதின் விவரம் சொல்லப் படுகிறது. புருஷன் சேதனன். அவன் மாயைக்குள்ளிருக்கிறுன். அ வன் போக்தா (புஜிக்கிறவன்). அவன் பிரகிருதி காரியமான அந்நத் தைப் புஜிக்கிறுன் (பிரகிருதியையும் அதின் விகாரமாகிய அந்நத்தை யும் அனுபவிக்கிறுனென்பது கருத்து). இந்தப் பூதாத்துமாவும் இவ னுக்கு (ஆத்மாவுக்கு) அந்நமாகிறுன். அந்த அந்நத்தை யுண்டாக்கி னது பிரகிருதியாகையால் அந்நம் மூன்று * குணமுடையதாயிருக்கி றது. இதை யனுபவிக்கிறவன்தான் உள்ளேயிருக்கிற புருஷன். அத ற்கு பிரத்தியக்ஷப் பிரமாணமிருக்கிறது. பசு முதலானப் பிராணிகள் வித்திலிருந்துண்டாகின்றன. அதுவும் புஜிக்கத்தக்கதாகிறது. ஆகை யினுலே காரணமாயிருக்கிற பிரகிருதியும் புஜிக்கத்தக்கதுதான். ஆகை யினுலே புருஷன் அனுபவிக்கிறவன்; பிரகிருதி அனுபவிக்கப்படுகி றது. அந்தப் பிரகிருதிக்குள்ளிருந்துகொண்டே புருஷன் அனுபவிக் கிறுன். பிரகிருதியினுல் செய்யப்பட்ட அந்த அந்நமானது முக்குணங் களுடைய விகாரமாகையால் மகத்தத்துவத்தை ஆதியாகவும் விசேஷ

* பிரதானம், அதின் காரியம் அல்லது விகாரமாகிய அந்நம், போக்தா, அதா வது புஜிக்கிறவன் அல்லது அனுபவிக்கிறவன் ஆக-ங.

ங்களை (பஞ்சபூதங்களை)முடிவாகவு முடையது ஒரு சேதனமுண்டெ ன்பதற்கு இதுவே யடையாளமாயிருக்கிறது. இதினுல் பதினன்கு * மார்க்கங்களுடைய சுவபாவம் (பிரகிருதி) சொல்லப்பட்டது. இந்த லோகமானது சந்தோஷம், விசனம், மோகம், என்கிற பெயரையு டைய அந்நமாயிருக்கிறது. உற்பத்தியில்லாம லிருக்கிறவரையில் கார ணத்தினுடைய ருசி † யனுபவிக்கப்படுகிறதில்லை. பூதாத்துமாவான வன் பால்லியம், யளவனம், ஜரை ஆகிற மூன்று அவஸ்தைகளிலும் அந்நமாகிருன். பூதாத்துமாவினுடைய மாறுதலினுல் அந்நத்துவத்தை யடைகிருன். இப்படிப் பிரதானமானது வெளிப்படுகையில் அது அறியப்படுகிறது. நிச்சயம், சங்கற்பம், அபிமானம் இந்த மூன்றுமு ளாகிற புத்தி முதலியன (புத்தி மனது அகங்காரம்) ருசியை கிரகிக் கிற விஷயத்தில் (காரணப் பிரகிருதியை யறிகிறவிஷயத்தில்) கரு விகளா யிருக்கின்றன. அப்படியே ஐந்து ஞானேந்திரியங்களுடைய (சப்தாதி) விஷயங்களைக் கிரகிக்கிற விஷயத்தில் ஞானேந்திரியங்கள் கருவிகளாகின்றன. இப்படியே கருமேந்திரியங்களும் பிராணன்க ளும் (கருமேந்திரியங்களுடைய வசனம் முதலானவைகளாகிய விஷ யங்களைக் கிரகிக்கிற விஷயத்தில் கருமேந்திரியங்களும் பிராணன்க ளுடைய உச்சுவாஸம் நிச்சுவாசம் முதலிய செய்கைகளை கிரகிக்கிற விஷயத்தில் பிராணன்களும் கருவிகளா யிருக்கின்றன). இப்படி வெ ளிப்படையா யிருக்கிறதும் அந்நம்தான். வெளிப்படையா யில்லாம லிருக்கிறதும் அந்நம்தான் (க்ரியங்களும் காரணமான அவ்வியக்த மும் அந்நம்தான்). விகாரமற்றவனுகிய ஆத்மா இதைப் புஜிக்கிருன். இப்படிப் புஜிக்கிருனதால் அவனுடைய சேதனத்துவம் பிரசித்த மாயிருக்கிறது. தேவதைகளுக்கு மத்தியில் அக்கினியானவன் அந்நத் தைப் புஜிக்கிறவனுகிருன். சோமம் அந்நமாகிறது. (யக்கியத்தில் உப யோகமாகிற சோமமென்கிற ஒருவிதகொடி, அல்லது சோமயாகம், அல்லது பயிர் முதலியவைகளைத் தன்கிரணங்களால் விருத்தி செய் கிறதினுல் சந்திரன்). இப்படி அறிகிறவன் அந்நத்தை அக்கினி சுவ ரூபமாயிருந்து புஜிக்கிறவனுகிருன் (என்றுல், அக்கினியைப்போல் அந் நத்தினுலுண்டாகிற தோஷத்தை யடைகிறதில்லையென்பது கருத்து) பூதாத்து மாவானவன் சோமனுக சொல்லப்படுகிருன். சிதாத்துமா வியாபிக்கிறபோது (ஜீவன் சிதாத்தும சுவரூபத்தை யடைகிறபோது) பிரகிருதியையே வாயா யுடையவனுய் அக்கினி என்று சொல்லப்படு கிருன். (அக்கினி சுவரூபமாயிருந்து ஹவிஸ்முதலிவைகளைப் புஜிக்கிற துபோல சிதாத்துமாவாகவிருந்து சகலப் பிரகிருதியையும் அநுப

* இந்திரியங்கள் பத்து. அந்தக்கரணம் நான்கு ஆக பதினான்கு.

† காரியத்தினுல் காரணமாகிற பிரகிருதி அநுமானிக்கத்தக்க தென்பது கரு த்து.

விக்கிருனென்பது கருத்து) இந்த (சிதாத்மாவான) புருஷனானவன் அவ்வியக்த (பிரகிருதியாகிற்) வாய்னல் திருகுணத்தைப் புஜிக்கிருன் (திருகுணுத்மகமான பிரபஞ்சத்தை யனுபவிக்கிருன்). இப்படி எவனறிகிருனே அவன்தான் சந்நியாசி, யோகி, ஆத்மயக்ஞும் செய்தவன் (ஆத்மாவைப் பரிசுத்தம் செய்கிறதாகிய யக்ஞுத்தைச் செய்தவனுகிருன்). எப்படி என்றுல், ஒருவன் ஒருவீட்டில் தனித்திருக்கையில் அதில்ப்பிரவேசித்த காமிகளான ஸ்திரீகளை இந்திரிய நிக்கிரகம் செய்த அந்தப்புருஷன் எப்படித் தொடமாட்டானே அப்படிப்போல இந்திரியங்களுடைய விஷயங்கள் தற்செயலாய் நேரிட்டபோதிலும் அதுகளைத் தொடாமலிருக்கிறவன் சந்நியாசி, யோகி, ஆத்மயக்ஞும் செய்தவன். (க0)

(இந்தப் பத்தனுவாகங்களினுல் பிராணன் ஆதித்தன் இந்த உபாதிமூலமாய், கிரமமுக்தியே பலனுன சிதாத்து மோபாசனையைச் சொல்லி, இனிசிதாத்துமாவாகிய ஜீவனுக்கு அப்பியுதயபலனை (இஷ்டசித்தியை)க் கொடுக்கிற அநேகவிதமான உபாசனையைச் சொல்லத் தொடங்கி சகலப்பிராணிகளுடைய இருப்பு அந்நத்தின் சுவாதீனமாகையால் அந்த அந்நத்தை பிர்ம்மமாக உபாசனை செய்ய-அந்நத்தினுடைய மகிமை சொல்லப்படுகிறது). அந்நமெதுவோ அது பரமாத்துமாவுடைய சிரேஷ்டமான ரூபம். பிராணனனது அந்நமயம் (அந்நத்தையே ஜீவனமாகவுடையது). அந்தப்பிராணன் (அந்நத்தை) புஜிக்காவிட்டால், மனதானது மனனம்செய்ய சக்தியற்றதாகிறது, (காது) கேட்கிறதில்லை, (துவக்கு) ஸ்பரிசிக்கிறதில்லை, (கண்)பார்க்கிறதில்லை, (வாய்)பேசுகிறதில்லை, (மூக்கு) வாசனையை யறிகிறதில்லை, (நாக்கு) ருசிபார்க்கிறதில்லை, பிராணனும் போய்விடுகிறது. இந்தப்படிக்கே சுருதியும் (சாந்தோக்கியோபநிஷத் எ-கூ-க) சொல்லுகிறது. "சாப்பி "ட்டால் அப்போது பிராணன் பலமுடையவனுய், நினைக்கிருன், கே "ட்கிருன், ஸ்பரிசிக்கிருன், பேசுகிருன், ருசிபார்க்கிருன், முகருகி "ருன், பார்க்கிருன்." பின்னும் சுருதி (தைத்திரியோபநிஷத் உ-உ.) சொல்லுகிறதாவது - பிருதிவியை ஆசிரயித்திருக்கிற பிரஜைகள் அந்நத்தினு லுண்டாகிருர்கள். அந்நத்தினுல் ஜீவிக்கிருர்கள். முடிவில் அந்தையே அடைகிருர்கள்(அந்ந சுவரூபமான பூமியிலேயே லயமடைகிருர்கள்). (கக)

வேறிடத்திலும் (வேறுசுருதியிலு மிந்த அந்நத்தினுடைய ஸ்துதி) சொல்லப்பட்டிருக்கிறது.

"இந்தச் சகலப்பிராணிகளும் பிரதிதினமும் ஆகாரத்தைச் சம் "பாதிக்கிறதற்காக சஞ்சாரம் செய்கிருர்கள். சூரியனும் தன் கிரணங் "களினுலே (பூமியின் ரஸமாகிற) அந்நத்தைக் கிரகிக்கிருன். அதி "னுலே உஷ்ணத்தை யுண்டாக்கிருன். அந்நத்தினு லிந்தப் பிராணன்

"கள் திருப்தியடைந்து பக்குவம்செய்கின்றன. (பிராணன்கள் இந்திரி "யங்கள் அவைகளின் வியாபாரங்களைச் செய்கின்றன. அல்லது போ "க்தாவுக்கு விஷயங்களைச் சேகரித்துக் கொடுக்கின்றன). அக்கினியும் "(நெய் விரகு முதலிய) அந்நத்தினுல் சுவலிக்கிறது. அந்நாபேக்ஷை "யுள்ள பிர்ம்மாவினுலிது (இந்த அந்நம்) உண்டாக்கப்பட்டது. ஆகை "யினுல் அந்நத்தை ஆத்மாவாக * உபாசிக்கவேண்டியது." சுருதி (தைத்திரீயம் உ - உ) சொல்லுகிறதாவது "அந்நத்தினுல் பிரஜைக ளுண்டாகிருர்கள். பிறந்தவர்களந்நத்தினுல் விருத்தியாகிருர்கள். அந்நமானது புஜிக்கப்படுகிறது. அது பூதங்களை புஜிக்கிறது (பூதங் களை சம்ஹாரம் செய்கிறது). ஆகையால் அந்நமென்று சொல்லப்பட் டது. (கஉ)

வேறிடத்திலும் (மற்றொரு சுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கி றது. "இந்த அந்நமானது விஷ்ணுவினுடைய, உலகத்தைத் தரிக்கிற "சரீரமாயிருக்கிறது. இந்தப்பிராணனுனது அந்நத்தினுடைய ரஸமா "யிருக்கிறது. மனதானது பிராணனுடைய ரஸமாயிருக்கிறது. விக் "ஞானமானது மனதினுடைய ரஸமாயிருக்கிறது. ஆனந்தமானது விக் "ஞானத்தினுடைய ரஸமாயிருக்கிறது. இப்படி எவன் அறிகிருனே "அவன்தான் அந்நமுடையவன், பிராணனுடையவன், மனதுடைய "வன், விக்ஞானமுடையவன், ஆநந்தமுடையவன் ஆகிருன். இப் "படி எவனறிகிருனே (பூமியைத்தரிக்கிற விஷ்ணுவினுடைய சரீர "மென்று எவனறிகிருனே) அவன் எங்கெந்தப் பிராணிகள் இவ்விடத் "தில் அந்நத்தைப் புஜிக்கின்றுர்களோ அந்தச் சகல பூதங்களுக்குள் "ளேயும் தான் (பூதாத்மாவாக) இருந்துகொண்டு (அபிமானமற்றவ னுய்) அந்த அந்நத்தை புஜிக்கிருன்." அந்நந்தான் (அதைப் புஜிக்கிற வனை) க்ஷீணிக்கச் செய்கிறதில்லை. அந்நம் உபாசிக்கத்தக்கதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்நம் சகலப் பிராணிகளுக்கும் பிராண னுயிருக்கிறது. அந்நம் முதன்மையாயுண்டானது, அந்நமே வைத்தி யன் (பசியாகிற வியாதியை சுவஸ்தப்படுத்துகிறபடியால் வைத்திய னுகச் சொல்லப்பட்டது). (கங)

மற்றொருவிடத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. "இந்தச்சகலத் திற்கும் அந்நமே காரணம், காலமானது அந்நத்திற்குக்காரணம். காலத்திற்கு சூரியன் காரணம். நிமிஷம் முதலான அங்கங்களாலுண்

* அந்நத்தைப் பிர்ம்மமாக உபாசிக்கவேண்டியது. "நானே பிர்ம்மமென்று உபா சிப்பதுபோல நானே அந்நமென்று உபாசிக்கக் கூடாது. ஏனென்ருல், அந்நம் பிர்ம் மத்தின் விகாரமாகையால் அதைப் பிர்ம்மாக உபாசிப்பது கூடுமானுல் தானும் அந்த விகாரமென்றே உபாசித்ததாகும். எப்படிப்பொலென்ருல், அரசனுடைய சேவகனை அரசனென்று ஸ்தோத்திரம் செய்தால் அவன் சந்தோஷப்படுவான். அரசனைப்பார் த்து சேவகனென்ருல், அது குற்றமாகும். பிர்ம்ம சூத்திரம் ச-க-ச-டு சூத்திரங்க ளும் அவைகளின் பாஷியமும் பார்க்க.

டான பன்னிரண்டு மாதங்கள் கூடியவருஷம் காலத்திற்கு சுவரூபம். இதில் பாதி அக்கினிக்கு சம்பந்தமானது. மற்றொருபாதி வருணனுக்கு சம்பந்தமானது. மகாநக்ஷத்திரம் முதல் அவிட்டநக்ஷத்திரத்தின் பாதிவரையில் அக்கினிசம்பந்தமான காலம். ஆயில்லியநக்ஷத்திரம் முதல் அவிட்டநக்ஷத்திரத்தின் பின் பாதிவரையில் சந்திரசம்பந்தமானகாலம். இந்த நக்ஷத்திரங்களில் ஒன்பது நக்ஷத்திரங்களடங்கிய * ஒவ்வொருவகுப்பு வருஷமாகிற காலத்தினுடைய (மூன்றில்) ஒரு பாகமாயிருக்கிறது. இது சூரியனுடைய கதியினாலுண்டாகிறது. (இந்த அங்வாகத்தில் இதுவரையில் சொல்லியிருக்கிறவாக்கியங்களின் தாத்பரியமென்னவெனில் அந்நம் காலத்திற்கு உட்பட்டதாயும் காலம் ஆதித்தனுக்குட்பட்டதாயு மிருக்கிறபடியினாலே அந்நோபாசனைக்குள்காலம் ஆதித்தியன் இவர்களுடைய உபாசனை விதியுமிருக்கிற சங்கதி சொல்லப்படுகிறது. காலாத்துமா இப்போது ஸ்துதிக்கப்படுகிறது. இந்தச் சகலப்பிராணிகளுடைய உற்பத்திக்கும் அந்நம் தான் காரணம். காலத்தினாலே அந்நமுண்டாகிறது. அதாவது, இன்ன காலத்தில் இன்னதானியமுண்டாகிறதென்பது பிரசித்தமாயிருக்கிறதல்லவா. காலத்திற்கு ஆதித்தன் எப்படிக்காரணமென்றால், சூரியனுடைய உதயாஸ்தமனத்தைக்கொண்டு காலம் கணக்கிடப்படவேண்டுமாகையால் காலத்திற்கு சூரியன் காரணமாச்சுது. காலசுவரூபமின்னதென்பதற்குப் பிரமாணமில்லாததினால் காலம் எப்படி அந்நத்திற்குக் காரண மாகலாமென்றால், அதைத் திருஷ்டாந்தத்தினால் நிரூபிக்கிறார். நிமிஷம் கலைகாஷ்டை இவைமுதலியவைகளைக் கணக்கிட்டால் அதினால் வருஷத்தைக்கண்டு பிடிக்கலாம். அந்த வருஷத்தின் ஒருபாதி தெக்ஷிணயனம். அதற்கு அக்கினிதேவதை. ஏனென்றால், குளிர்காலமானதால் வெப்பத்திற்காக அக்கினி உபாசனை அவசியம். உத்தராயனம் உஷ்ணகாலமானதால் சந்திரன் தேவதை. ஏனென்றால், உஷ்ணகாலமானதால் குளுமையையுண்டாக்கச் சந்திரோபாசனை யவசியம். மகாநக்ஷத்திரம் முதல் அவிட்டத்தின் முன்னரைவரையில் பதிமூன்றரை நக்ஷத்திரங்களடங்கிய சிம்மம் முதல் மகரம்வரையிலுள்ள ஆறு இராசிகளில் சூரியன் சஞ்சரிக்கும் காலம் தெக்ஷிணயனம். ஆயில்லியம்முதல் தலைகீழாக நக்ஷத்திரங்களை எண்ணிவந்தால் பதிமூன்றரையாவது நக்ஷத்திரமானது அவிட்டநக்ஷத்திரத்தின் பிந்திய அரையில்முடியும். அந்தப் பதிமூன்றரை நக்ஷத்திரங்களடங்கிய கும்பம்முதல் கடகம்வரையிலுள்ள ஆறு இராசிகளில் சூரியன் சஞ்சரிக்கும்காலம் உத்தராயனம்) காலமிருக்கிறதென்பதற்கு இதுதான் சாக்ஷியாயிருக்கிறது. காலமானது இந்திரியங்களா லறியகூடியதல்ல வானாலும் இதினால் ஸ்தாபிக்கப்படுகிறது இந்தச் சாக்ஷியத்தைத்தவிர காலமிருக்கிற

* ஒரு இராசிக்கு உய-நக்ஷத்திரங்கள். ஒன்பது நக்ஷத்திரங்கள்-ச-இராசி அல்லது நாலுமாதங்கள். இப்படி கஉ-இராசிகள் கஉ-மாதங்கள்.

தென்பதற்கு அறியும்படியான வேறே சாக்ஷியமில்லை. ஆனால் காலத்தி னுடையவும் அதினுடைய அம்சங்களுடைய்யவும் (கலைநிமிஷம் முதலி யவைகளுடையவும்) சுபாவம் தனித்தனியாய்க் காணப்படுகிறபடியால் காலமுண்டென்பதற்கு காலமே சாக்ஷியாயிருக்கிறது. (அதெப்படிப் போலென்றால், தீபவெளிச்சத்தைக்கொண்டு தீபமிருக்கிறதாக அநு மானிக்கிறதுபோல) இந்த சூரியனானவன் காலத்தினுடைய எல்லா அம்சங்களிலும் சஞ்சரிக்கிறான். காலத்தை எவன் பிர்ம்மமாக உபாசி க்கிறானோ அவனிடத்திலிருந்து காலமானது தூரத்தில் விலகிப்போகி றதென்று (காலத்திற்குள்பட்டவனாக மறுபடி ஜனிக்கிறதில்லையென் று) சுருதி சொல்லியது. காலத்திலிருந்து எல்லாப்பூதங்களுண்டா கின்றன. அவைகள் காலத்தினால் விருத்தியடைகின்றன. காலத்திலே யே லயமடைகின்றன. காலமானது(சூரியசம்பந்தமாய்)மூர்த்தமாயும் (கலைநிமிஷம் முதலான சம்பந்தமாய்) அமூர்த்தமாயு மிருக்கிறதெ ன்று சுருதிசொல்லியது. (கச)

பிர்ம்மத்திற்குக் காலமென்றும் அகாலமென்று மிரண்டுரூப முண்டு. சூரியனுக்கு (சூரியனுடைய உற்பத்திக்கு) முந்தி அகாலம். ஏனென்றால், காலம் முதலியவை யில்லாததினாலே அகாலமாக விருந் தது. சூரியனுக்குப் பிந்தி அதுகாலமாயிற்று. ஏனென்றால், கலைமுத லியவைகளுடன் கூடியிருப்பதினால்தான். வருஷமெதுவோ அது கலை முதலான அம்சங்களுடைய ரூபம். வருஷத்தினால் பிராணிகளுண்டா கிறார்கள். அப்படி யுண்டானவர்கள் வருஷத்தினாலேயே விருத்தி யடைகிறார்கள். வருஷத்திலேயே லயமடைகிறார்கள். ஆகையால், வருஷம்தான் பிரஜாபதி. காலம் அந்த மிவைகள் பிர்ம்மமாக உபா சிக்க யோக்கியமானவை. (சகலபூதங்களுக்கும்) ஆத்மாவாயுமிருக்கி றது. காலமானது சகலபூதங்களையும் மகாத்மா (அகாலசுவரூபி யான ஈசுவரன்) இடத்தில் லயிக்கச்செய்கிறது காலமே எதினிடத் தில் லயித்துப்போகிறதோ, அதை யறிந்தவனெவனோ அவன் வேதத் தையறிந்தவனென்று சுருதி சொல்லுகிறது. (கரு)

மூர்த்திமானாயிருக்கிற காலனானவன் எல்லாப்பிராணிகளுக்கும் சமுத்திராஜனா யிருக்கிறான் (சமுத்திரம்போல தாண்டக்கூடாத வனாயிருக்கிறான்). சவிதா (சூரியன்) என்று பெயராயுடையவன் காலத்திற்குள் (காலத்திற்கு காரணமாய்) இருக்கிறான். அவனிடத்தி லிருந்தே சந்திரன், நக்ஷத்திரங்கள், கிரகங்கள், வருஷம், முதலா னவை யுண்டாகின்றன (சூரியனுடைய தேஜஸையடைந்து விருத்தி யாகின்றன). இவைகளிலிருந்து இதெல்லா முண்டாகின்றன. (எதெ ன்றால்,) இந்த உலகத்தில் பார்க்கப்படுகிற சுபாசுபங்கள் அவைகளி லிருந்துண்டானவைகள். ஆகையால், சூரியனுடைய ஆத்மா பிர்ம்மமே. காலமென்கிற பெயராயுடைய ஆதித்தனை உபாசிக்கவேண்டியது.

சிலர் ஆதித்தனே பிர்ம்மமென்று சொல்லுகிறார்கள். ஹோமம் செய்கிறவன், ஹோமத்தைக் கிரகிக்கிறவன் (அக்கினி), ஹவிஸ் (அந்நம் நெய் முதலியன), மந்திரம், யக்ஞம், விஷ்ணு, பிரஜாபதி, இவர்களெல்லாம் இந்த சூரியமண்டலத்தில் சாக்ஷியாய் விளங்குகிற பிரபு எவனோ அவன்தானென்று சுருதி சொல்லியது. (கசு)

(சிருஷ்டிக்கு) முந்தி பிர்ம்மமே ஜகத்தாக விருந்தது (நாம ரூபமற்றதாக இந்தப் பிரபஞ்சமானது பிர்ம்மத்தைவிட அந்நியமாக விருக்கவில்லை). ஒருவராகவே (பரமாத்துமா) இருந்தார். சம்பூர்ணமாக விருந்தார். கிழக்கே பூர்ணமாயும் தெற்கே பூர்ணமாயும் மேற்கே பூர்ணமாயும் வடக்கே பூர்ணமாயும் மேலும் பூர்ணமாயும் கீழும் பூர்ணமாயும் எங்கும் பூர்ணமாயுமிருந்தார். கிழக்குமுதலான திக்குகளென்பது மில்லை. குருக்குமில்லை. கீழுமில்லை. மேலுமில்லை. இந்தப் பரமாத்துமாவர்னவர் உளகத்தினு லறியத் தகுந்தவரல்ல. அளவிடக் கூடாதவர். பிறப்பற்றவர். வாதத்தினால் இப்படிப் பட்டவரென்று நிஷ்கரிஷை செய்யத்தகாதவர். சிந்திக்கக் கூடாதவர் * ஆகாசத்தைப்போல் ஒன்றிலு மொட்டாதவர். சகலமும் பிரளயத்தில் லயிக்கையில் இவரொருவர்தான் விழித்திருக்கிறார். ஆகாசத்தை முதன்மையாக வைத்துக்கொண்டு சேதாமாத்திரமா யிருக்கிற இந்தச் சகலப் பிரபஞ்சத்தையும் எழுப்புகிறார் (சித்தினுடைய ஆபாசமாத்திரத்தினால் இந்தப்பிரபஞ்ச மறியப்படுகிற தென்பது கருத்து). இவராலே (இந்தப் பரமாத்துமாவினாலே) இந்த ஜகத்துத்தியானிக்கப்படுகிறது (என்றால், இவருடைய தியான மாத்திரத்தில் ஜகத்து சிருஷ்டியாகிறது). அவரிடத்திலேயே லயமடைகிறது. இந்த ஆதித்தனிடத்தில் சுவலிக்கிறதும் புகையில்லாத அக்கினியிடத்தில் பல விசித்திரமாயிருக்கிற தேஜஸு அல்லது வயிற்றி லக்கினியாகவிருந்து அந்நத்தை ஜீர்ணிக்கச் செய்கிற பிரகாச சுவரூபமுமெதுவோ அது இவனுடைய (பிர்ம்மத்தினுடைய) து. அக்கினியிலும் ஹிருதயத்திலும் ஆதித்தனிலு மிருக்கிற இந்த ஆத்மா ஒருவனே. இப்படி எவன் அறிகிறானோ அவன் ஒன்றான அந்தப் பிர்ம்மத்துடன் ஐக்கிய மடைகிறானென்று வேதம் சொல்லுகிறது. (கஎ)

(முன் தியானிக்கத்தக்க பரமாத்தும ரூபத்தையும் தியான விதியையும் காண்பிவித்து இப்போது தியானிக்கத்தகுந்த வஸ்துவில் சித்தத்தை நிறுத்துகிற லக்ஷணத்தையுடைய தியான சித்தியின்பொருட்டு சித்தம் சுவாதீனமாகு முபாயமாகிய யோகத்தை அதின் அங்கத்துடன் சொல்லுகிறார்.)

(சித்தம்) எப்படி ஒரே நிலையில் நிற்குமோ அதற்குச் சாதனமான அநுஷ்டானவிதி (சொல்லப்படுகிறது). யோகமானது - பிராணயா

* பிரகதாரண்ணிய கோபநிஷத் ரு, உ, ச - கூ, கசு, பார்க்க.

மம் * பிரத்தியாகாரம் † தியானம் ‡ தாரணை § தர்க்கம் ¶ சமாதி ‖ என ஆறு + அங்கமுடையது. இந்தத் தியானத்தினால் சுவர்ண (தங்கம்) ச்சாயையா யிருக்கிறவனையும் கருத்தாவாயும் ஈசனையும் புருஷனையும் காரணனையு மிருக்கிற பரமாத்துமாவை எப்போது பார்க்கிறானோ அப்போது (ஆகாமிசஞ்சித) புண்ணிய பாபபலன்களை யொழித்து நாசமற்ற பரமாத்துமாவில் எல்லாவற்றையு மொன்றாய்ச் செய்கிறான். (என்றால் - பழுக்கக் காய்ந்திருக்கிற இரும்புக்குண்டில் விழுந்த நீர்த்துளிபோல் லயமடைகிறான் என்று தாத்பரியம்). ஜ்வலித்துக்கொண்டிருக்கிற (அக்கினியினால் எரிக்கப்பட்டு சுவலித்துக்கொண்டிருக்கிற) பருவதத்தை மிருகங்களும் பக்ஷிகளும் எப்படி அண்டமாட்டாவோ அப்படி பிர்ம்மத்தை யறிந்தவனை தோஷங்கள் (புண்ணியபாபபலன்கள்) அண்டமாட்டா என்று சுருதி சொல்லுகிறது. (கஅ)

மற்றொரு விடத்திலும் (வேறே சுருதியிலும்) சொல்லப்பட் டிருக்கிறது. "பிராணனாகிய (பிராணோபாதியை யுடைய ஜீவனாகிய) வித்துவானானவன் மனதையடக்கி இந்திரியார்த்தங்களாகிய (சப்தாதி) விஷயங்களை எப்போது வெளியில் தள்ளுகிறானோ அப்போது சங்கற்பமற்றவனா யிருக்கவேண்டியது. அப்பிராணனிடத்திலிருந்து (பிராணாதி விசேஷமற்ற சிதாத்துமா விடத்திலிருந்து) பிராணனென்று சொல்லப்பட்ட ஜீவனுண்டானபடியால் இவன் தன்னை நான்காவதவஸ்தையில் (துரியாவஸ்தையில் அப்பிராணனாகிய சதாத்மா விடத்தில்) நிறுத்தவேண்டியது" என்று சுருதி சொல்லியது. சித்தமில்லாததாயும் சித்தத்தின் நடுவிலிருக்கிறதாயும் சிந்திக்கத் தகாததாயும் அதிரகசியமாயு மிருக்கிற தெதுவோ அதில் சித்தத்தை வைக்கவேண்டியது. அப்போது அந்த லிங்கமானது (லிங்கசரீரத்தையுடைய ஜீவசுரூபமானது) ஆசிரயமற்றதாகிறது. (என்றால் - அப்போது அப்பிரா

---

* பூரக கும்பக ரேசகமென்கிற பேதத்தினால் பிராணவாயுவை சுவாதீனப் படுத்துவது.

† இந்திரியங்களை விஷயங்களிலிருந்து திருப்புகிறது.

‡ எந்த வஸ்துவைத் தியானம் செய்யவேண்டுமோ அந்த வஸ்துரூபமாய் மனதைச் செய்துக்கொள்வது.

§ அந்த வஸ்துவிலேயே மனதை இடைவிடாமல் ஸ்திரமாய் நிறுத்துவது.

¶ அந்த வஸ்துவில் மனது நன்றாய்ப் பற்றிற்றா இல்லையாவென்று பரிக்ஷிக்கிறது. அல்லது, தியானதாரணையினால் சித்தியான அற்பமாகிய சித்திகளை யோகத்திற்குத் தடையானதென்று ஊகிக்கிறது, அல்லது ஸவிகற்பஸமாதி.

‖ தியானத்தினால் எந்த வஸ்துவாக மனதாயிற்றோ அந்தவஸ்துவை விட்டு மனது திரும்பாமல் காற்றில்லாதவிடத்திலுள்ள தீபம்போல நிலையாய் நிறுத்துவது.

+ இதில் ஆறு அங்கமென்று சொல்லப்பட் டிருக்கின்றது. வராகோப நிஷத்திலும் யோகசாஸ்திரத்திலும் எட்டு அங்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

ணனைவிட வேருக விருக்கிறதில்லை. அல்லது, சித்தம் விஷயமற்றதாக வாகிறது.) (கசு)

இவனுக்கு (இந்த யோகிக்கு) இதைக்காட்டிலும் சிரேஷ்டமான தாரணை (மனதை ஒரேநிலையில் நிறுத்துதல்) ஒன்றிருக்கிறது. (அதாவது) நாக்கின் நுனியை உள்நாக்கின்மேல் அழுத்தி வாக்கு (சப்தம்) மனது பிராணன் இவைகளைத் தடுத்து தர்க்க (தாரணைக்குப் பிறகுண்டாகிற நிச்சயமாகிய ஞான) த்தினலே பிர்ம்மத்தைப் பார்க்கிருன். (இது லம்பிகாயோகமென்று சொல்லப்படுகிறது. இதனல் உன்மனீ பாவமென்கிற மனோநாச முண்டாகிறது). மனோநாசத்தினலே அணுவுக் கணுவாயும் சுவப்பிரகாச முள்ளதாயு மிருக்கிற ஆத்மாவை பரமாத்துமாவாக எப்போது பார்க்கிருனே அப்போது ஜீவ பாவத்திலிருந்து விடுபடுகிருன். இப்படி ஜீவபாவத்திலிருந்து விடுபட்டதினலே அகண்டமாக வாகிருன். ஒன்றையும் ஆசிரயிக்காதவனுகவும் ஆத்மா மாத்திரமாகவே யிருக்கிற நிலைமையையடைந்தவனுகவும் ஆகிருன். (இதுதான் உன்மனீபாவம்). அதிரகசியமான மோக்ஷமிதுதான் என்று வேறுஇடத்திலும் (வேறு சுருதியிலும்) சொல்லப் பட்டிருக்கிறது. சித்தம் தெளிந்ததினல் (விஷயவாசனை யற்றுப்போவதினல்) சுபாசுப கருமத்தை நாசம் செய்கிருன். சித்தம்தெளிந்தவன் ஆத்மாவிலிருந்துகொண்டு (பரமாத்துமாவி லக்கமாய்) நாசமற்றசுகத்தை யனுபவிக்கிருனென்று (சுருதி) சொல்லியது. (உ0)

ஹிருதயத்திலிருந்து பிர்ம்மரந்திரம் வரையில் மேலேபோகிறதாயும் பிராணன்களைச் சஞ்சாரம் செய்விக்கிறதாயு மிருக்கிற சுஷும்ன என்கிற பெயரையுடைய நாடியானது உள்நாக்கு மத்தியில் தடுக்கப்படுகிறது. (அப்பியாசத்தினல் வசமாயிருக்கிற) பிராணன் ஓங்கார துவனி, (தியானத்திற்கு விஷயமாகிய பிர்ம்மாகாரமாயிருக்கிற) மனது, இவைகளுடன்கூடிய இந்த (சுஷும்ன) நாடிமூலமாய் மேலே போகவேண்டியது. * (எப்படி யென்ருல், ஸ்தநம்போல் தொங்கிக் கொண்டிருக்கிற) உள்நாக்கை நாக்கு நுனியால் சுத்தி இந்திரியங்களைப் பிராணன் மனதுகளுடன் ஒன்ருய்†ச்சேர்த்து (தடையை நிவர்த்தி செய்துக்கொண்டு மேலேபோகவேண்டியது). தனித்தனியிருத்தல் போய்விடுகிறபடியினலே (ஜீவபாவம்போய் அகண்டாகார மாவதினலே) மகிமையை (ஜீவன் முக்திநிலையை) அனுபவித்து பின்பு நிரா

* மைத்திரியோபநிஷத் ...-சு-க. கடோபநிஷத் சு-கசு. பிரசிஞேபநிஷத்-ரு-சு பார்க்க.

† ஒன்ருய் சேர்க்காமல் என்று ஒரு பாடமுண்டு. அந்தப் பாடப்படிக்கானல் பிராணன் மனதுகளுடன் சேர்ந்திருக்கிற இந்திரியங்களை அவைகளிலிருந்து பிரித்தென்று அர்த்தம்.

த்து மகத்துவமடைந்து (இந்திரியம் மனது இல்லாதவனுய்) சுகதுக்கத்தை யடைகிறதில்லை. மோக்ஷத்தை யடைகிருன். இவ்விதமாய் வேறிடத்திலும்(வேறு சுருதியிலும்)சொல்லப்பட்டிருக்கிறது. "முதலில் பிராணனை சுவாதீனம்செய்துகொண்டு (சுவாசபந்தனம் செய்து) அதை உள்நாக்கில் நிறுத்தி பரிச்சின்னுவஸ்தையை (பிர்ம்மத்தைக் காட்டிலும் தான்வேறேயாயிருக்கிறேனென்கிற ஜீவபாவத்தை) தாண்டி பிர்ம்மரந்திரத்தில் அகண்டமாகிய பிர்ம்மத்தோடு ஆத்மாவைச் சேர்க்கவேண்டியது" என்று (சுருதி) சொல்லியது. (உக)

வேறொருவிடத்திலும் (வேறு சுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. (அதாவது) தியானிக்கவேண்டியதாயுள்ளது சப்தப்பிர்ம்மம் அசப்தபிர்ம்மமென இரண்டு. சப்த பிர்ம்மத்தினுல் அசப்தபிர்ம்மம் பிரகாசிப்பிக்கப்படுகிறது. ஓங்காரம் சப்த பிர்ம்மம். இதினுல் (வாச்சிய வாசகரூபமான சகலத்தையும் தாண்டி) மேலே கிளம்புகிருன். (சுஷும்ன நாடிவழியாய் மேலேபோகிறவன்) அசப்தபிர்ம்மத்தில் லயமடைகிருன். இதுதான் முடிவான பலன். இதுதான் அமிருதம். இதுதான் சாயுஜ்ஜியம். இதுதான் பிர்ம்மாநந்தம். சிலந்திப்பூச்சியானது தன்னுடைய நூலினுலே மேலேபோய் தனக்குத் துன்பமுண்டாகாதவிடத்தில் சேர்வதுபோல தியானம்செய்கிற இவன் ஓங்காரமாகிற சாதனத்தினுலே மேலேபோய் சுவதந்தரத்தை யடைகிருன் (பிர்ம்மமாகிருன்). சப்த(பிர்ம்ம)வாதிகள் வேறேவிதமாய்ச் சொல்லுகிருர்கள். (எப்படியென்ருல்) தங்கள் கட்டைவிரல்களினுலே காதுகளை மூடிக்கொண்டு ஹிருதயாகாசத்திலுண்டாகிற சப்தத்தைக்கேட்கிருர்கள். (இதுதான் சப்த பிர்ம்மமென்று நினைக்கிருர்கள்). அதற்கு ஏழுவித உபமானங்களுண்டு. எப்படி என்ருல், நதிகள், சலங்கை, வெண்கலபாத்திரம், (வண்டி)சக்கரம், தவளை, மழை, இவைகளிலிருந்துண்டாகிற சப்தம், காற்றில்லாதவிடத்திலிருக்கிற (குகையல்லது கிணற்றிலிருந்து பேசுகிறவனுடைய) சப்தம் (ஆக ஏழு) இப்படிப் பலவிதமாயிருக்கிற சப்தங்களைக்கடந்து அவ்வியக்தமாயும் அசப்தமாயுமிருக்கிற பிர்ம்மத்தில் லயித்துப்போகிருர்கள். அவ்விடத்தில் வேறென்பதில்லாமல் ஒன்ருய்ப்போகிருர்கள். அவர்களைத் தனிமையாய்ப் பிரித்தறியக் கூடாது. அதெப்படியென்ருல், பல புஷ்பங்களுடைய ரஸங்கள் (பகுத்தறியக் கூடாதவிதமாய்) ஓரே தேனுகவாயிருக்கிறதுபோல்தான். (சுருதி) சொல்லுகிறதென்னவெனில், சப்த பிர்ம்மம் பரபிர்ம்ம மிரண்டையும் அறியவேண்டியது. சப்த பிர்ம்மத்தில் செவ்வையாய்த் தேர்ந்தவன் (பிரணவமாகிற ஓங்காரத்தைப் பிர்ம்ம சுவரூபமாய்த் தியானித்து அதில் நிலையுற்றவன்) பிர்ம்மத்தையடைகிருன். (உஉ)

வேறிடத்திலும் (வேறே சுருதியிலு மிந்த அர்த்தம்) சொல்லப்பட்டிருக்கிறது. "ஓங்காரமானது சப்தம். அதினுடைய நுனி * (நாதம் முடிகிற இடமாகிய அர்த்தமாத்திரை) சாந்தமானது, சப்தமற்ற ஸ்தானம், பயமற்றது, துக்கமற்றது, ஆநந்தமானது, திருப்தியுள்ளது, ஸ்திரமானது, சலனமற்றது, மரணமற்றது, அழிவற்றது, சாசுவதமாயுள்ளது, விஷ்ணுவென்கிற பெயரையுடையது, சகலத்திற்கும் சிரேஷ்டமான ஸ்தான (மோக்ஷ)த்தை யடையும்பொருட்டு இவ்விரண்டையும் உபாசிக்கவேண்டியது. ஓமென்கிற பெயரையுடைய பராபரமான இந்த தேவனெவனோ அவன் சப்தமற்றவனாயும் ரூபமற்றவனாயுமிருக்கிறான். அவனை மூர்த்தநிஸ்தானத்தில் (ஹிருதயம் அல்லது புருவத்தின் மத்தியில்) தியானிக்கவேண்டியது" என்று (சுருதி) சொல்லியது. (௨௩)

பின்னும், வேறிடத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. "சரீரம் வில்லு, ஓங்காரம் அம்பு, அதினுடைய (அம்பினுடைய) நுனியாகிற மனதானது அக்ஞானமாகிய தமோலக்ஷணத்தை (அக்ஞானமாகிற இருளை லக்ஷணமாகவுடைய விசேஷபத்துடன்கூடிய ஆவரணத்தை) பிளந்து தமஸில்லாததை யடைகிறான் (தேகாந்தக் கரணங்களாகிய கூட்டத்தைவிட்டு விலகி சுத்தனாகிறான்). முந்தி அக்ஞானத்தினால் மூடப்பட்டிருந்த தெதுவோ அதை (அகங்காரத்திற்கு இருப்பிடமாயிருந்ததை) பேதித்து சுத்துகிற பந்தம்போல் ஜ்வலித்துக்கொண்டிருக்கிறவும் சூரியனைப்போல வர்ணமுள்ளவும் ஆநந்தரஸமாயிருக்கிறவும் தமஸுக்கு அப்புறப்பட்டவும் இந்த சூரியனிலும் சந்திரனிலும் அக்கினியிலும் மின்னலிலும் விளங்குகிறவுமான பிர்ம்மத்தைப் பார்க்கிறான். இப்படிப்பார்த்து அமிருதத்துவத்தை யடைகிறான் (மோக்ஷத்தையடைகிறான்). முதலில் தேகம் பிராணவம் மனது மனது லயிக்கிறவிடம் இவைகளாகிற லக்ஷியங்களைத் தியானிக்கவேண்டியது. (பிறகு) உள்ளே இருக்கிற சர்வாந்தரியாமியான பரபிர்ம்மத்தையும் தியானம் செய்யவேண்டியது. இப்படிச் செய்வதினால் பிரகாசிக்காமலிருந்த விக்ஞானமானது பிரகாசமாகிறது. மனது லயித்தால் ஆத்ம சாக்ஷியாகிய சுகமெதுவோ அதுதான் பிர்ம்மம். அதுதான் நாசமற்றது. அதுதான் பிரகாசமானது. அதுதான் புருஷார்த்தம். அதுதான் லோகம் (உலகத்திலுள்ள ஜனங்களுடைய சகல சாதனங்களுக்கும் பிரயோஜனம்). (௨௪)

---

* ஓங்காரத்தை இராமதாபினி யுபநிஷத்தில் அகார உகார மகார பிந்துநாதசக்தி சாந்தம் என எழுவிதமாய்ச் சொல்லியிருக்கிறது. பின்னும் வராகோபநிஷத் முதலிய உபநிஷத்களில் அகார உகார மகார அர்த்தமாத்திரை சுவரூபமாய்ச் சொல்லியிருக்கிறது.

மற்றொருவிடத்திலும் (வேறொரு சுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. "எவன் சுஷுப்தியிலிருக்கிறவனைப்போல இந்திரியங்கள் லயித்துப்போனவனும் இந்திரியங்களுடைய குகையில் (தேகத்தில்) வாசம் செய்கிறவனானாலும் சரீராபிமான மற்றவனும் சுவப்னம் காண்கிறவனைப்போலிருக்கிறவனு மிருந்துகொண்டு சுத்தமான புத்தியினாலே, ஓமென்கிற பெயரையுடையவனும் தேஜோரூபனும் தூக்கமற்றவனும் ஜரையற்றவனும் மரணமற்றவனும் துக்கமற்றவனுமிருக்கிற அந்தர்யாமியாகிய ஈசுவரனைப் பார்க்கிறானோ அவன் * ஓமென்கிற பெயரை யுடையவனும் தேஜோரூபனும் தூக்கமற்றவனும் ஜரையற்றவனும் மரணமற்றவனும் துக்கமற்றவனுமிருக்கிற அந்தர்யாமியான ஈசுவரனாகிறான்." பிராணன் ஓங்காரம் (இவைகளுடன்) பலவிதமாயிருக்கிற ஜகத்முழுதையும் சேர்க்கிறது அல்லது, ஜகத்தானது சேர்ந்துபோகிறதுதான் யோகமென்றுசொல்லப்படுகிறது. (என்றால், பிராணனாகிய ஆத்மா ஓங்கார சுவரூபியான ஈசுவரனாயிருக்கிறபடியினாலே அவனிடத்தில் ஜகத்தையெல்லாம் லயிக்கச்செய்வது அல்லது ஜகத்தை மறந்துபோவதினால் ஜகத்தானாகவே லயமானதாகவராகிறது என்பது கருத்து). பிராணன் மனது இந்திரியங்கள், இவைகளை ஒன்றாய்ச்சேர்ப்பதும் பலவென்கிற புத்தியை அல்லது வெளிவிஷயங்களைத் தள்ளிவிட்டிருப்பதும் யோகமென்று சொல்லப்படுகிறது. (முந்திச்சொல்லிய யோகம் தேருகடையான யோகம். பிந்தியது அப்பியாசகாலம்). என்று (சுருதி) சொல்லியது. (௨௫)

வேறொரிடத்திலும் (வேறேசுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. "செம்படவனானவன் வலையினால் ஜலத்திலிருக்கிற மீன்களை எடுத்து (வயிற்றுக்குள்ளிருக்கிற) ஜாடராக்கினியில் ஹோமம் செய்வதுபோல ஓங்காரத்தினால் பிராணன்களை எடுத்து அநாமயமாகிற † அக்கினியில்ஹோமம் செய்கிறான். ஆனபடியினாலே இந்த அக்கினியானது ‡ காயவைக்கப்பட்ட உர்விபோ லாகிறது. அந்தக் காயவைக்கப்பட்

---

* இவன் யோகி. யோகத்திலிருக்கும் நிலமை சொல்லப்பட்டது.

† அநாமயம் என்றால், வியாதிமுதலிய துன்பமற்றதென்று அர்த்தம். சுவேதாசுவதரோபநிஷத் ௩-௧0-ல் பிர்ம்மமென்றே சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு ஸ்ரீ சங்கராசாரியர் செய்திருக்கிற பாஷியத்தில் ஆத்தியாத்தும அதிதைவ அதிபூத என்கிற தாபத்திரயமற்றது பிர்ம்மமாகையால் பிர்ம்மமென்றே அர்த்தம் செய்திருக்கிறார்.

‡ யக்ஞயத்தில் நடத்தப்படுகிற பிரவர்க்கியமென்கிற கிரியையில் உபயோகிக்கப்படுகிற உர்விஎன்பது ஒரு பெரிய மண்பாத்திரம். அது அடுப்பில் வைக்கப்பட்டு விறகுமுதலியவைகளால் எரித்து சூடுசெய்யப்படுகிறது. அந்தப்பாத்திரத்தில் பால் நெய்முதலியவை போடப்பட்டு அவைகாய்ந்தபிறகு ஆஹவனீ யாக்கினியில் ஹோமம் செய்யப்படுகிறது. அக்கினியினால் சூடடைந்த பாத்திரத்தின் அக்கினியானது அதிலுள்ள நெய்முதலியவைகளை சூடடையச்செய்தாலும் அக்கினி ஜுவலனம் அதிலிருப்பதாக

டிருக்கிறபாத்திரத்திலுள்ள நெய்யானது திருணம் காஷ்டம் இவைக ளுடன்சம்பந்தப்பட்டபோது எப்படி ஜ்வலிக்கிறதோ அப்படி அப் பிராணனென்று சொல்லப்பட்ட ஆத்மாவாகிற அக்கினியானது பிரா ணனுடைய சம்பந்தத்தினால் ஜ்வலிக்கிறது. எதுஜ்வலிக்கிறதோ அதுதான் பிரும்மாவினுடைய (ஹிரண்ணிய கருப்பனுடைய) ரூபம். விஷ்ணுவினுடைய சுவரூபமும் ருத்திரனுடைய சுவரூபமும் இது (இந்தஆத்மா) தான். தன்னைப் பலவிதமாய்ப் பிரித்து இந்த லோகங் களை நிறைத்திருக்கிறது."

"நெருப்பிலிருந்து பொரிகள்போலவும் சூரியனிலிருந்து கிர ணங்கள்போலவும் பிராணன் முதலானவை ஆத்மாவிடத்திலிருந்து (பூர்வசிருஷ்டிப்படி) பின்னும் பின்னு முண்டாகின்றன." என்று (சு ருதி) சொல்லியது. (௨௬)

வேறிடத்திலும் (வேறு சுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. சரீரத்திலிருக்கிற சூடானது சிரேஷ்டமாயும் ...மற்றதாயும் சரீர மற்றதாயுமிருக்கிற பிர்ம்மத்தினுடைய தேஜஸேதான். இந்தச் சரீர மானது அதற்கு (அந்த தேஜஸ்கு) நெய்யாகவிருக்கிறது. (பிரகாசப் படாமல் மறைவாயிருக்கிற பிர்ம்மத்தினுடைய தேஜஸானது சரீரத்தி னால் பிரகாசிப்பிக்கப்படுகிறது. அதெப்படிப்போலென்றால், நெய் சம்பந்தத்தினால் அக்கினி பிரகாசிப்பதுபோல) இப்படிப் பிரகாசமான ஜோதிஸானது ஆகாசத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. ஹிருதயாகாச த்தை இந்தத் தேஜஸானது பிரகாசிப்பிக்கிறது. அவ்விடத்தில் (ஹிரு தயாகாசத்தில்) ஜோதிஸ் பிரகாசிக்கிறது. இதினாலே உபாசகன் சீக் கிரத்தில் அந்த சுவரூபத்தை யடைகிறான். பூமியில் புதைத்துவைத் திருந்த இரும்புகுண்டானது சீக்கிரத்தில் மண்ணாய்ப்போய் மறுபடி நெருப்புக்கும் கருமான் முதலானவர்களுடைய செய்கைக்கும் உப யோகமாகாததுபோல் அந்தக்கரணப் பிரதிபிம்பனான சிதாபாசன் அந் தக்கரணத்துடன் நசித்துப்போகிறான். (ஜீவபாவம்போய் பிறப்பற்ற தாகிய பிர்ம்மபாவத்தை யடைகிறான்). ஹிருதயத்திலிருக்கிற ஆகாச மாகிய இந்தப்பிர்ம்மமானது எல்லா இருப்புக்கும் பொக்கிஷமாக விருக்கிறது. ஆனந்தத்தைக் கொடுக்கத்தக்கதாயும் முடிவான ஸ்தான மாயு மிருக்கிறது. இதுதான் நம்முடைய வாஸ்தவ சுவரூபமும் புரு ஷார்த்தமும். இதுதான் அக்கினியிலும் சூரியனிலுமிருக்கிற தேஜஸ் என்று (சுருதி) சொல்லியது. (௨௭)

வேறிடத்திலும் (வேறு சுருதியிலும்) சொல்லப்பட்டிருக்கிறது. "பூதங்கள் (பூதக்கூட்டங்கள் சேர்ந்த சரீரம்) இந்திரியங்கள் விஷயங்

காணப்படுகிறதில்லை. அதில் பிரகாசமுமில்லை. ஆனால் அந்தநெய்க்கு அடிப்பிலுள்ள விறகிலிருக்கிற தீயினுடைய சம்பந்தமுண்டானால் அப்போது சுவலனம் பிரகாச மாய்த் தெரிகிறது. அப்படிப்போல ஆத்மாசரீரத்திலிருந்தாலும் பிராணன் முதலா னவை ஆத்மாவுடன் லயித்துப்போகிறவரை ஆத்மா வெளியாகிறதில்லை.

கள் இவைகளைத்தாண்டி (நான், என்னுடையது, என்கிற அபிமானத்தைவிட்டு) பின்பு சந்நியாசமே நாணாகவும் தைரியமே தண்டமாகவுமிருக்கிற வில்லை எடுத்துக்கொண்டு அபிமானமின்மையாகிய அம்புனாலே பிர்ம்மத் துவாரத்திலிருக்கிற (அகங்காரமாகிற) முந்திய காவற்காரனைக் கொல்லவேண்டியது. (அவனெப்படிப்பட்டவனென்றால்) மித்தியா (பொய்) ஞானமே அவனுக்குத் தலைப்பாகை. ஆசை பொறாமை இவைகள் குண்டலம். சோம்பல் நித்திரை பாபம் இவைகள் தண்டம். இவைகளையுடைய அபிமானத்திற்கு எஜமானனாகிய இவன் கோபமே நாணாகவும் பிரலோபமே (காமமே) தண்டமாயுமுள்ள வில்லை கிரகித்துக்கொண்டு இச்சையாகிற அம்புனாலே எல்லாப் பிராணிகளையும் துன்பம் செய்கிறான். (இப்படிப்பட்டவனைக் கொன்று) ஓங்காரமாகிற தெப்பத்தினால் ஹிருதயத்திற்குள்ளிருக்கிற ஆகாசத்தினுடைய கரையைத்தாண்டி அதில் விளங்கிக்கொண்டிருக்கிற பிர்ம்மமானது பிரகாசமானபோது, சுரங்கத்திலிருக்கிற (தங்கம் முதலிய) தாதுக்களைக் காணவேண்டியவன் அதில் மெதுவாய்ப் பிரவேசிப்பதுபோல, பிர்ம்மசாலையில் பிரவேசிக்கவேண்டியது. பின்பு நான்குவித மறைவையுடைய பிர்ம்மகோசத்தை குருவினாலுபதேசிக்கப்பட்ட சாஸ்திரத்தினால் பிரவேசிக்கவேண்டியது. (பிர்ம்மகோசமென்பது ஆநந்தமயகோசம். இது காரணசரீரத்தைச் சேர்ந்தது. சத்துவப்பிரதான அக்ஞானமானது. இவ்விடத்திலிருக்கிறது சகுணபிர்ம்மம்). பின்பு பரிசுத்தனாயும் நிர்மலனாயும் சூன்னிய (விகாரமற்றவ) னாயும் சாந்தனாயும் அப்பிராணனாயும் மனதில்லாதவனாயும் முடிவற்றவனாயும் நாசமற்றவனாயும் ஸ்திரமானவனாயும் சாசுவதனாயும் பிறப்பற்றவனாயும் சுவதந்திரனாயுமுள்ள தன்னுடைய மகிமையிலேயே யிருக்கிறான். பிறகு தன்மகிமையிலேயே யிருக்கிற ஆத்மாவைப்பார்த்து சமுசார சக்கரத்தை, சுத்திவருகிற ரதசக்கரத்தைப்போல் பார்க்கிறான்.

ஆறுமாதம் அப்பியாசம் செய்தவனாயும் பெந்தத்திலிருந்து விடுபட்டவனாயு மிருக்கிற தேகத்தை யுடையவனுக்கு அநந்தமாயும் சிரேஷ்டமாயும் இரகசியமாயு மிருக்கிற அத்தபூர்த்தியான யோகமானது சித்திக்கிறது. நன்றாய் ஜுவலித்துகொண்டிருக்கிறவனானாலும் (வித்தியாவிநய ஆசாரசம்பன்ன னானாலும்) இரஜஸ்தமோ குணங்களினாலே அடிபட்டவனாயும் புத்திரதார குடும்பங்களில் அபிமான முள்ளவனாயுமிருக்கிறவனுக்கு இந்த யோகசித்தியானது ஒருபோது முண்டாகிறதில்லை என்று (சுருதி) சொல்லியது. (௨௮)

அந்தர் ஹிருதயராகிய (ஆத்மநிஷ்டராகிய) சாகாயன்னியர் இவ்விதமாய்ச்சொல்லி அவருக்கு (பிரும்மாவுக்கு அல்லது தன்குருவுக்கு) நமஸ்காரம் செய்து ஓ! இராஜாவே! (பிரகத்ரதனே!) இந்தப் பிர்ம்மவித்தையினாலே பிரஜாபதியினுடைய புத்திரர்கள் (வாலகில்லியர்கள்)

பிர்ம்மப் பிராப்திமார்க்கத்தை ஏறினர்கள், யோகாப்பியாசத்தினலே சந்தோஷத்தையும் இருமைகளை ஸகிப்பதையும் சாந்தத்தையும் (ஒருவன்) அடைகிருன், இந்தரகஸியத்தை சாந்தனயிருக்கிற புத்திரன் சிஷியன் இவர்களைத்தவிர மற்றவர்களுக்குச் சொல்லக்கூடாது, சகல குண சம்பன்னனயிருக்கிற குருபக்தி யுள்ளவனுக்குச் சொல்லலாம் என்று சொன்னர். (உ௯)

ஓம், சுத்தமானவிடத்திலிருந்துகொண்டு தானும் (உள்ளும்புறமும்) சுத்தனய் சத்துவகுணமுள்ளவனய் (பிரசன்னசித்த முடையவனய்) பிர்ம்மவித்தையை யப்பியாசம் செய்கிறவனய் பிர்ம்மத்தைக் குறித்து சம்பாஷணம் செய்கிறவனய் பிர்ம்மத்தியான முள்ளவனய் (மனதினல்) பிர்ம்மத்தைப் பூஜிக்கிறவன யிருக்கவேண்டியது. இப்படியிருக்கிறவன், சத்தாயிருக்கிறவனை யனுக்கிரகிக்கிற இச்சையுள்ள சத்தான பிர்ம்மத்தினிடத்தில் ஐக்கியமடைகிருன்.

பின்பு தானகவும் அந்நியமானவனகவும் (பிர்ம்மமேதான் என்கிற பாவமுள்ளவனகவும் சம்சாரமாகிற தேகாதிக் கூட்டங்களுக்குத் தான் அந்நியன் என்பதாகவும்) பிர்ம்ம தெரிசனத்தினல் அறுபட்ட பாசங்களை யுடையவனகவும் ஆசையற்றவனகவும் தன்னல் பிறருக்கும் பிறரால் தனக்கும் பயமற்றவனகவும் காமமற்றவனகவு மிருக்கிறவன் (ஜீவன்முக்தன்) அக்ஷயமாயும் அபரிமிதமாயுமுள்ள சுகத்தை அனுபவிக்கிருன். காமமற்றதாகிய இந்த இருப்பானது சிரேஷ்டமான நிதியில் (பிர்ம்மத்தில்) இருந்துண்டான உயர்ந்தப் பிரயோஜனமாயிருக்கிறது. ஏனென்றால், மனிதனனவன் சகல காமத்தினல் நிறைப்பப்பட்டவன யிருக்கிறதினலேயும் நிச்சயம் சங்கற்பம் அபிமானம் இவைகளை அடையாளமாயுடையவன யிருப்பதினலேயும் பெத்தன யிருக்கிருன். இதற்கு விபரீதமானவன் (காமம் முதலியவைகளை ஜயித்தவன்) முக்தனே.

சிலர் குணமானது பிரகிருதி வசத்தினலே அத்தியவஸாய (மனோநிச்சயம்) சுவரூபமான பெந்தத்தை யடைந்ததென்றும் அத்தியவஸாய தோஷம் நசிப்பதினல் மோக்ஷமென்றும் சொல்லுகிருர்கள்.

(சாங்கிய மதஸ்தர்கள், ஆத்துமாவுக்குப் பெந்தமில்லை என்றும் பிரகிருதியினிடத்திலிருந்து முதலிலுண்டான புத்தி தத்துவமாகிய மகத்தத்துவத்திற்குக் குணமென்று பெயராகையால் அதற்குத்தான் பூர்வகரும வாசனையினலே அத்தியவஸாயமென்கிற பெந்தமென்றும் அந்தப் பெந்தநிவர்த்தியே மோக்ஷமென்றும் சொல்லுகிருர்கள். ஆனல் உபநிஷத்துக்கள் பெந்தமோக்ஷம் புத்திக்கல்லவென்றும் அது ஒரு சாதனமென்றும் சொல்லுகின்றன). ஆனல், மனதினலேதான் பார்க்கிருன். மனதினலேதான் கேட்கிருன். காமம், சங்கற்பம், சமுசயம்,

சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், வெட்கம், விவேகம், பயம், இவைகளெல்லாம் மனதே (மனதினுடைய விருத்தியே) யன்றி வேறல்ல. இந்தப் புருஷனானவன் குணசமூகங்களுடைய சுவாதீனமானவனும் கலங்கினவனும் ஸ்திரமற்றவனும் சஞ்சலமுள்ளவனும் ஞானமற்றவனும் ஆசையினால் நிறைந்தவனும் வியாகுலமுள்ளவனு மிருந்துகொண்டு அபிமானத்திற் குள்பட்டவனாகிறான். "நான்" "அவன்" "இதென்னுடையது" என்பது முதலிய வைகளை நினைத்துக்கொண்டு பக்ஷி வலையில் (அகப்பட்டுக்கொள்ளுவது) போல தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்ளுகிறான் (புத்திமனது அகங்காரம் சித்தம் இவைகளெல்லாத்திற்கும் அந்தக்கரணமென்று பெயர். அந்த அந்தக்கரணமானது அதினுடைய செய்கையைதான் செய்கிறதுபோல் காண்கிற ஆத்மாவுக்கு சாதனமாயிருக்கிறது. வாஸ்தவத்தில் ஆத்மாகருத்தாவல்ல. அந்தக்கரணத்தையே தானென்று தப்பெண்ணம் கொண்டதினால் செவப்பு புஷ்பத்தினுடைய வர்ணம் ஸ்படிகத்தில் காணும்போது ஸ்படிகம் செவப்பாயிருக்கிறதாக சொல்வதுபோல அந்தக்கரண தருமத்தை ஆத்மா தன்பேரில், நானிச்சிக்கிறேனென்பது முதலியவைகள் மூலமாய் ஆரோபித்துக் கொள்ளுவதினால் பெத்தனாகிறான்). ஆகையால், ஆத்மாவானவன் அத்தியவசாயம், சங்கற்பம், அபிமானம் இவைகளை அடையாளமாயுடைவனாய்க் கட்டுப்படுகிறான் (கட்டுப்பட்டவன்போல் காணப்படுகிறான்). ஆகையால், இதற்கு விரோதமாயிருக்கிறவன் முக்தனாகிறான். ஆகையால் அத்தியவசாயம், சங்கற்பம், அபிமானம் இவைகளில்லாதவனா யிருக்கவேண்டியது. இதுதான் மோக்ஷலக்ஷணம். (சிரேயோமார்க்கங்களுக்குள்ளே சர்வசிரேஷ்டமான) பிர்ம்மபதவி இதுதான். மோக்ஷத்துவாரம் திறத்தல் (சாக்ஷாத்பிர்ம்மத்தை அடையச்செய்வது) இதுதான். இதினாலே அக்ஞானத்தைத் தாண்டுகிறான். இதில் சகல காமங்களு மடங்கியிருக்கின்றன (இவன் இச்சித்தால் கிடைக்காதது ஒன்றுமில்லை யென்பது கருத்து).

ஞானேந்திரியங்களைந்தும் மனதுடனே அசையாமலும் புத்திசலிக்காமலுமிருக்கிற நிலமை சிரேஷ்டமான கெதி * (பிர்ம்மப்பிராப்தி சாதனம்) என்று (பிர்ம்மவித்துக்கள்) சொல்லுகிறார்கள்.

அந்தர் ஹிருதயராகிய சாகாயன்னியர் இப்படிச்சொல்லி (மௌனத்தையடைந்தார்). மருத்தாகிய பிரகத்திரதன் என்கிற இராஜாவானவன் அவருக்கு நமஸ்காரம்செய்து கிரமப்படி யுபசரித்து கிருதகிருத்தியனாய் உத்தராயணமார்த்தை † அடைந்தான். வேறே குருக்குவழியில்லை. பிர்ம்மப்பிராப்தி மார்க்க மிதுதான். சூரியமண்டலத்தைப்

* கடோபநிஷத் சு-௧௦-பார்க்க.

† பிரசினோபநிஷத் ௧ - ௧௦ பகவத்கீதை அ - உச பார்க்க.

பேதித்துக்கொண்டு போகிறார்கள். (உத்தராயணமார்க்கமென்றதினால் அர்ச்சிராதி மார்க்கமென்று சாதாரணமா யர்த்தமாகலாம். ஆனால் வியாக்கியாதா சகுணநிர்குணப்பிர்ம்மஞானத்தை அடைந்தானென்று அர்த்தம் செய்திருக்கிறார். பிர்ம்மப்பிராப்திமார்க்க மிதுதான் என்றதினால் பிர்ம்மத்தை யடைவதற்கு இதுவரை சொல்லிவந்ததைத் தவிர வேறே மார்க்கமில்லை யென்பது தாத்பரியம். கடைசிவாக்கியத்தில் "போகிறார்கள்" என்று பெருவசனமாய் முடித்திருக்கிறது. இது விஷயத்தில் வியாக்கியாதா சொல்லுகிற தென்னவென்றால், பிரகத்ரதனைப்போல் நிர்குணோபாசனை செய்யாதவர்கள் தேவயானம் அல்லது அர்ச்சிராதி மார்க்கமாய் சூரியனைப் பேதித்துக்கொண்டு கிரமமுக்தி அடைகிறார்களென்று அர்த்தமென்றும் "போனான்" என்று ஒருபாடமுண்டு, அப்படியானால் பிரகத்ரதனே மேல்சொன்னபடி கிரமமுக்திமார்க்கமாய்ப் போனானென்றும் கிரகிக்கத்தக்க தென்பது தான்). இந்த விஷயத்தில் (வேதவித்துக்கள்) சொல்லுகிறதாவது ஹிருதயத்தில் தீபத்தைப்போல் பிரகாசித்துக்கொண்டிருக்கிற ஆத்மாவினுடைய கிரணங்கள் † அநேகங்கள். அவைகள் வெளுப்பு கறுப்பு (கூ, ௯) தவிட்டுநிறம் நீலம் மஞ்சள் சுவற்பச்செவப்பு இந்த நிறங்களையுடையன ‡. இவைகளி லொன்று (சுழும்னநாடி) சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு மேலேபோயிருக்கிறது. (உபாசகர்கள் சுழும்னநாடி மூலமாய்) பிர்ம்மலோகத்தையடைந்து பரமபதத்தை யடைகிறார்கள். மற்ற § நூறுநாடிகளும் மேலுக்குச் செல்லுகின்றன. அவைகளின்மூலமாய் பலதேவதைகளுடைய ஸ்தானத்தை அடைகிறான் (தான் உபாசித்த தேவதையை அடைகிறான்). அநேகவருணமுள்ளதாயும் கீழே போகிறதாயும் சொற்பப்பிரகாசமுள்ளதாயு மிருக்கிற நாடிகளில் போகிறவன் தன்னுடைய கருமத்தின்பலனை யனுபவிக்க ஏவப்பட்டவனாய் இந்தலோகத்தில்சமுசாரியாகிறான். ஆகையா லிந்த பகவானான சூரியனானவன் சமுசாரத்திற்கும் சுவர்க்கத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஏதுவாயிருக்கிறான். (எப்படி என்றால், இந்த சூரியனை ஆராதிக்காவிட்டால் சமுசாரத்தைக் கொடுக்கிறான். சூரியனைத் தேவதையாக உபாசித்தால் சுவர்க்கத்தைக் கொடுக்கிறான். பிர்ம்மமாக உபாசித்தால் மோக்ஷத்தைக் கொடுக்கிறான்). (௩௦)

(சாகாயன்னியருக்கும் பிரகத்ரதனுக்கும் நடந்த சம்வாதம் முடிந்தது. இனி சுருதி தானாகவே உத்தரப்பிரத்தி யுத்தரமாக முன்சொல்லாத சங்கதிகளைச் சொல்லுகிறது).

---

† ஹிருதயத்திலிருந் துண்டாயிருக்கிற அநேக நாடிகள் கிரணங்களென்று சொல்லப்பட்டன. சாந்தோக்கியோபநிஷத் அ - ௬ பார்க்க.

‡ இந்தநிறங்கள் வாதபித்த சிலேஷ்மங்களுடைய சேர்க்கைக்குத் தக்கபடி வருணங்கள் அதிகமாயும் குறைந்ததாயு மிருக்கும்.

§ கடோபநிஷத் ௬ - க௬ பார்க்க.

இந்த இந்திரியங்கள் என்னவிதமான சுவரூபங்களாய் விஷயங்களில் பிரவேசிக்கின்றன? அவைகளை ஏவுகிறவன்யார்? அவைகளை யடக்கி ஆளுகிறவன்யார்? அந்த இந்திரியங்கள் ஆத்மசுவரூபம்தான். அவைகளை ஏவுகிறவனும் அடக்கி யாளுகிறவனும் ஆத்மாதான். அப்ஸரஸ்களும் (விஷயங்களும்) சூரியகிரணங்களும் (சூரியன் முதலிய இந்திரியாபிமானி தேவதைகளும்) கூட ஏவுகிறவர்கள்தான். ஐந்து கிரணங்களினாலே (ஐந்து ஞானேந்திரியங்களினாலே) விஷயங்களை (ஆத்மா) புஜிக்கிறான். ஆத்மா யார்? (தேகேந்திரிய மனோபுத்தி பிராணன்கள் தானென்று வெளிப்படுகிறது. ஆகையால் அவைகளுக்குள்ளே ஒன்றா? அல்லது வேறையா ஆத்மா?). சுத்தன், நிர்மலன், சூன்னியன் (விகாரமற்றவன்), சாந்தன், முதலான அடையாளங்களினால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறவன்தான் ஆத்மா. அவனுடைய சொந்த அடையாளங்களினாலேயே அறியத்தகுந்தவன். அடையாள மில்லாதவனுக்கு இது (இனி சொல்லப்போகிறது) தான் அடையாளம். அக்கினிக்கு அதின் உஷ்ணமும் அதினால் வியாபிக்கப்பட்ட வஸ்துவும் தான் அடையாளம் (காயவைக்கப்பட்ட ஜலத்திலுள்ள உஷ்ணமும் விரகுமுதலியவைகளிலுள்ள புகையும் அக்கினியிருக்கிற தென்பதற்கு அடையாளம் போல). ஜலத்திற்குப் பரிசுத்தமான ருசியுடையாளம். (இப்படிப்போல ஆத்மாவுக்கு அசேதனமாகிய தேகாதிகளில் சேதனமும் பிராணாதிகளும் அடையாளம்) என்று சிலர் * சொல்லுகிறார்கள். பின்னும் சிலர் † வாக்கு காது கண் மனது பிராணன் இவைக ளடையாளங்களென்று சொல்லுகிறார்கள். பின்னும் சிலர் ‡ புத்தி தைரியம் ஸ்மரணை ஞானம் இவைகள் (அடையாளம்) என்று சொல்லுகிறார்கள். இவைகளெல்லாம் ஆத்மாவுக்கு அடையாளங்கள்தான். விளையிருப்பதற்கு முளையும் அக்கினியிருப்பதற்குப் புகை காந்தி பொரிகள் இவைகளும்(அடையாளங்கள்)போல. (ஞானிகள்) சொல்லுகிறதாவது-அக்கினியிலிருந்து பொரிகளும் சூரியனிலிருந்து கிரணங்களும் எப்படியோ அப்படி பிராணாதிகள் ஆத்மாவிடத்திலிருந்து பின்னும் பின்னுமுண்டாகின்றன. (இந்தப்பிரபாடகத்தில் உசு-வது கடைசி பார்க்க). (ஙக)

தனக்குள்ளேயே யிருக்கிற இந்த ஆத்மாவிடத்திலிருந்து சகலப் பிராணன்களும் சகல லோகங்களும் சகல வேதங்களும் சகல தேவதைகளும் சகல பூதங்களும் உண்டாகிறார்கள். அதினுடைய உபநிஷத் சத்தியத்தினுடைய சத்தியம் (சத்தியத்தி லெல்லாம் சத்தியமான இரகசியமென்பது கருத்து; சாந்தோக்கியோபநிஷத் கூ-க-பார்க்க)

* சுவேதாசுவதரோபநிஷத் கூ-கங-பார்க்க.

† கேனோபநிஷத் உ-பார்க்க.

‡ ஐதரேயோபநிஷத் ங-உ-பார்க்க.

அக்கினிசம்பந்தமடைந்த பச்சைவிறகிலிருந்து புகையுண்டாகிறதுபோல இந்த ருக்வேதம் யஜுர்வேதம் சாமவேதம் அதர்வாங்கிரஸ் இதிஹாஸம் புராணம் வித்தை (உபாசனாவித்தை)உபநிஷத்துக்கள் சுலோகங்கள் சூத்திரங்கள் அநுவியாக்கியானம் வியாக்கியானங்கள் இவைகளெல்லாம் அவனுடைய மூச்சுக் காற்றுத்தான். சகலபூதங்களும் இவனுடையவைதான். (௩௨)

(முன் பிர்ம்ம வித்தையில் சொல்லவேண்டிய விசேஷத்தைச் சொல்லி இப்போது மறுபடி ஸம்வத்ஸர சுவரூபமாகிய காலத்தின் அவயவங்களை (மாதம்முதலானவை) அக்கினி அவயவங்களாகச்செய்து கொண்டு முன்சொல்லப்படாத உபாசனா விசேஷத்தைச் சொல்லுகிறார். உபநிஷத்தினிந்தபாகம் சிதறிப்போனதாகையால் அதுசரியாய்ப் பொருந்திக்கையாயிராது. மேலும் அக்கினிஹோத்திர அதிகாரி சம்பந்தமான இந்த உபாசனையானதுபதேசிக்கப்படுகிறது. அந்த அக்கினிஹோத்திராதிகாரியானவன் அக்கினிஹோத்திர ஹோமகாலத்தில் கார்கபத்தியாதி அக்கினிகளில் கிரமமாயிதைச் சிந்திக்கவேண்டியது.) ஐந்து செங்கற்களால் சேர்க்கப்படுகிற இந்த (கார்கபத்திய)அக்கினியானது வருஷம்(வருஷமென்று தியானிக்கப்படவேண்டியது). இதற்கு (இந்தவருஷத்திற்கு) வசந்தகிரீஷ்ம வருஷசரத் ஹேமந்தருதுக்கள் செங்கற்கள். இந்த அக்கினிக்கு இந்த ருதுக்கள்முறையே தலை, (இடப்பக்க வலப்பக்க) சிறகுகள், முதுகு, மத்தியபாகம், இவைகளாயிருக்கின்றன. * புருஷனை (ஆத்மாவை) அறிந்தவனாயிருக்கிற பிரஜாபதிக்கு முதலாவது அக்கினிஸ்தானமிது. (இந்தப்பூமி வருஷரூபமாயிருக்கிறவும் வசந்தாதிருதுக்களாகிய செங்கல்களால் அடுக்கப்பட்ட சிரசு பக்ஷம் முதுகு புச்சம் பிருஷ்டம் இவைகளையுடையவும் விராட்சுவரூபமாயிருக்கிறவுமான இந்த கார்கபத்திய அக்கினியானவன் "நானே" என்று தியானிக்கவேண்டியது என்பது கருத்து). இவன் (இந்த அக்கினியானவன்) தன்கைகளினாலே யஜமானனை அந்தரிக்ஷத்திற் தூக்கி வாயுவிடத்தில் ஒப்பிவிக்கிறான். பிராணனே வாயு. பிராணனேயக்கினி (தக்ஷிணாக்கினி) இதற்குப் பிராணன் வியானன் அபானன் சமானன் உதானன் இவ்வைந்தும் செங்கற்கள். இவை (இந்த அக்கினிக்கு முறையே) தலைசிறகுகள் முதுகு மத்தியபாகங்கள். ஆத்மாவை அறிந்தவராகிய பிரஜாபதிக்கு இந்த இரண்டாவது அக்கினிஸ்தானமானது அந்தரிக்ஷமாயிருக்கிறது. (இந்த அக்கினியானவன்) கைகளினாலே யஜமானனைத்தூக்கி சுவர்க்கத்தில் இந்திரனுக்குக் கொடுக்கிறான். சூரியன்தானிந்திரன் (பரமேசுவரன்). இவன்தான் (ஆகவநீய) அக்கினி. இவனுக்கு ருக், யஜுஸ், ஸாமம் அதர்வாங்கிரஸ் இதிஹாஸம் புரா

* இந்த மத்தியபாகத்தில் ஹேமந்தருதுவோடு சிசிருதுவும் சேர்ந்திருப்பதாக கிரகிக்கத்தக்கது.

ணம் * இவைகள் செங்கற்கள். இவைகளினுல் சிரசு பக்ஷங்கள் முதுகுமத்தியபாகம் இவைகளை யுடையவனுக இந்த அக்கினியாகிறுன். ஆத்மவித்தாகிய பிரஜாபதிக்கு இந்த சுவர்க்கமானது மூன்ருவது அக்கினிஸ்தானமாயிருக்கிறது. (இந்த அக்கினியான இந்திரனுனவன்) கைகளினுலே யஜமானனை எடுத்து ஆத்மவித்தாகிற பிரஜாபதிக்கு ஒப்பிக்கிறுன். அந்த ஆத்மவித்தான (பிரஜாபதியான)வர் அவனைத் தூக்கி பிரும்மாவுக்குக் (சூத்திராத்துமாவுக்கு) கொடுக்கிறுர். அவ்விடத்தில் (சூத்திராத்துமாவிடத்தில் யஜமானனுனவன்) ஆநந்தமுடையவனுயும் சந்தோஷமனுபவிக்கிறவனுயும் மாகிறுன். (ருரு)

பூமிகார்கபத்தியாக்கினி, அந்தரிக்ஷம் தெக்ஷிணுக்கினி, சுவர்க்கம் ஆகவனீயாக்கினி; அவைகளே முறையே பவமானம் † பாவகம் ‡ சுசி § என்று சொல்லப்படுகின்றன. இவைகளினுலே இந்த அக்கினிகள் யஜிக்கப்படுகின்றன (பவமானம் பாவகம் சுசி, என்கிற மந்திரங்களினுலே இந்த அக்கினியில் ஹோமம் செய்யப்படுகின்றது). ஜாடராக்கினியும் பவமானபாவகசுசிகளுடைய சேர்க்கைதான். ஆகையினுலே அக்கினியானது (ஹவிஸ்களினுல்) யஜிக்கத்தக்கது. (செங்கற்களினுல்) அடுக்கத்தக்கது. (மந்திரங்களினுல்) ஸ்தோத்திரம்செய்யத்தக்கது. (ஆத்மாவாக) தியானிக்கத்தக்கது. யஜமானனுனவன் ஹவிஸ்ஸையெடுத்துக்கொண்டு தேவதையைத் தியானம்செய்யவேண்டியது. (எப்படி என்ருல்) "சுவர்ணவருணனுன பக்ஷிஹிருதயத்திலும் ஆதித்தியனிடத்திலுமிருக்கிறுன். அவன் ஜலபக்ஷி, அம்சபக்ஷி, [illegible] கூட்டமுள்ளவன், இந்த அக்கினியை யஜிக்கிறேம் (சுவர்ணவருணனுயும் கூட்டிலிருக்கிறபக்ஷியானது கூட்டில் சம்பந்தப்படாததுபோல ஹிருதயத்திலும் சூரியனிடத்திலுமிருந்தாலும் அவைகளில் சம்பந்தமற்றிருக்கிறவனுயும் ஜலத்திலிருக்கிற பக்ஷியானது ஜலத்தில் சஞ்சரித்தாலும் ஜலத்திற்குள் மறைந்திருக்கிறதுபோல் மறைந்திருக்கிறவனுயும், அம்சபக்ஷியைப்போல் பரிசுத்தமானவனுயுமிருக்கிற பிர்ம்மமாகிற அந்த புருஷனைப் பூஜிக்கிறேமென்பது கருத்து). என்று (மந்திரத்தை யுச்சரித்து) மந்திரார்த்தத்தை விசாரிக்கவேண்டியது. தியானிக்கிறவன் ஹிருதயத்திலிருந்துகொண்டு (ஹிருதயத்தை நிலையாய்வைத்துக்கொண்டு) சூரியனிலிருக்கிற பூஜிக்கத்தக்கதான தேஜஸைத்தியானம்செய்யவேண்டியது. இவ்விடத்தில் பூர்த்தியான மனசாந்தியாகிய பிடிப்பையடைகிறுன். ஆத்மாவிலேயே அனுசந்தானம் செய்கிறுன். (இவ்விடத்தில் என்ருல், இப்போதே விக்ஷேபத்தை விடுகிறதினுலே

* இதிஹாஸபுராணங்களை ஒன்ருக பாவிக்கவேண்டியது.

† பவமானம்—பரிசுத்தம்.
‡ பாவகம்—பரிசுத்தம் செய்கிறவன்.
§ சுசி—ஒளி அல்லது பிரகாசம்.

{ தைத்திரியப் பிராமணம் க-க-டு-சாயனருடைய வியாக்கியானம்பார்க்க.

அல்லது மாயையைத்தாண்டுகிறதினாலே சாந்திபதத்தைஅடைகிறான் என்றால், தியானிக்கத்தக்க ரூபத்தைத் தன்னிடத்தில் அநுசந்தானம் செய்கிறான்). இந்த விஷயத்தில் சுலோகங்களிருக்கின்றன. "அக்கினி "யானது விறகில்லாதபோது தன்னுடைய காரணத்திலேயே (சூக்ஷ்ம "பூதத்திலேயே) எப்படி லயித்துப்போகிறதோ அப்படிப்போல சித் "தமானது பிரவிருத்தியற்றுப்போவதினாலே தன்னுடைய காரணத் "தில் (அக்கியானத்தில்) லயிக்கிறது. இந்திரியார்த்தங்களிலே முழுகி "யிருந்த சித்தமானது சத்தியகாமத்தினாலே (பிர்ம்மத்தை அறியும் "விருப்பத்தினாலே) தன்னுடையகாரணத்தில் லயமடைந்தபோது "கருமவசமானதாயும் பொய்யானதாயு மிருந்த பிரவிருத்திகள் மறு "படியுண்டாகிறதில்லை. சித்தமே சமுசாரம். பிரயத்தினத்தினாலதை "ச்சோதிக்கவேண்டும் சித்தமெந்தசுவரூபமாயிருக்கிறதோ அந்தசுவ "ரூபமாயாகிறான். இது சாசுவதமான இரஹஸியம். சித்தத்தினுடை "யப் பிரசாதத்தினால் (சமாதானமடைதலினால்) சுபாசுபகருமங்களை "நசிக்கச்செய்கிறான். பிரசன்னமான சித்தத்தையுடையவன் தன்னு "டைய சுவ சுவ ரூபத்திலேயே யிருந்துகொண்டு நாசமற்ற சுகத்தை "யடைகிறான். ஜந்துவினுடைய சித்தமானது விஷயங்களில் ஒட்டி "யிருப்பதுபோல அது பிர்ம்மத்தினிடத்தில் ஒட்டியிருந்தால் எவன் "தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான்? மனதுசுத்தமென்றும் "அசுத்தமென்று மிரண்டுவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. காமத் "தினுடைய சேர்க்கையினால் அசுத்தமாகிறது. காமமற்றிருப்பது சுத்த "மானது. நித்திரை நினைப்பு இவைகளில்லாமல் மனதை சலனமற்ற "தாய்ச்செய்து எப்போது மனதில்லாமையை (மனோவிருத்தி சூன்னி "யத்தை) அடைகிறானோ அப்போது அதேபரமபதம். மனதானது "ஹிருதயத்தில் க்ஷயமடைகிறவரையில் அது தடுக்கப்படவேண்டும். "இதுதான் ஞானம். இதுதான் மோக்ஷம். மற்றவையெல்லாம் சாஸ் "திரவிஸ்தாரம்தான். சமாதியினாலே செவ்வையாய் சுத்தம் செய்யப் "பட்டதும் ஆத்மாவிடத்தில் வைக்கப்பட்டதுமான மனதுக்கு எந்த "சுகமுண்டாகிறதோ அதை வாக்கினால் சொல்ல சாத்தியமானதல்ல. "அது அனுபவத்தினாலேயே கிரகிக்கப்படுகிறது. ஜலம் ஜலத்துட "னும் அக்கினி அக்கினியுடனும் ஆகாசம் ஆகாசத்துடனும் லயமடைந் "தால் எப்படிப் பகுத்தறியக்கூடாதோ அப்படிப்போல எவனுடைய "மனதானது ஆத்மாவில் லயமடைகிறதோ அவன் பெந்தத்திலிருந்து "நன்றாய் விடுபடுகிறான். மனிதர்களுக்குப் பெந்தமோக்ஷத்திற்குக்கா "ரணம் மனதுதான். விஷயங்களில் பற்றுள்ள மனதானது பெந்தத் "தின் பொருட்டாகிறது. விஷயமற்றமனதானது மோக்ஷத்தின்பொ ருட்டாகிறது." ஆகையால், அக்கினிஹோத்திரம் செய்யாதவனுக்கும் அக்கினிசயனம் (செங்கற்களடுக்கி அதில் அக்கினியையுண்டாக்கிச்செய்

யும் ஹோமம் முதலியன) செய்யாதவனுக்கும் அக்ஞானிகளுக்கும் (ஆத்ம) தியானம்செய்யாதவனுக்கும் பிர்ம்மபதமாகிற (சித் *) ஆகாசானுசந்தானமானது சாத்தியமல்ல. ஆகையால், அக்கினியானது (ஹவிஸினால்) யஜிக்கத்தக்கது. (செங்கற்களினால்) அடுக்கத்தக்கது. (மந்திரங்களினால்) ஸ்தோத்திரம் செய்யத்தக்கது. (ஆத்மாவாக) தியானிக்கத்தக்கது. (௩௪)

(முன்சொன்ன அக்கினிஹோத்திரத்தையும் அக்கினிசயனத்தையும் செய்கிற எஜமானன் அந்தக்கிரியைகள் முடிந்தபின் சொல்லவேண்டிய உபஸ்தான (கிரியையை முடித்தபின் கருத்தா வெழுந்திருந்து சொல்லுகிற) மந்திரத்தைச்சொல்லுகிறார்).

பூமியில் வாசம்செய்கிறவும் பூலோகத்தை ஸ்மரித்துக்கொண்டிருக்கிறவுமான அக்கினியின் பொருட்டு நமஸ்க்காரம். இந்த எஜமானனுக்கு லோகத்தைக்கொடு (எஜமானனாகிய தனக்கு இந்தப் பிரதிவிலோகத்தைக்கொடுக்கவேண்டும்). அந்தரிக்ஷத்திலிருக்கிறவும் (அந்தரிக்ஷ) லோகத்தை ஸ்மரித்துக்கொண்டிருக்கிறவும் வாயுவின்பொருட்டு நமஸ்க்காரம். இந்த யஜமானனுக்கு (அந்தரிக்ஷ) லோகத்தைக்கொடு. ஆகாசத்திலிருக்கிறவும் (ஸ்வர்க்கத்தை) ஸ்மரித்துக்கொண்டிருக்கிறவும் சூரியனின்பொருட்டு நமஸ்க்தாரம். இந்த யஜமானனுக்கு (சுவர்க்க) லோகத்தைக்கொடு. எல்லாவற்றிலிருக்கிறவும் எல்லாவற்றையும் ஸ்மரித்துக்கொண்டிருக்கிறவுமான பிரும்மாவுக்கு நமஸ்காரம். எஜமானனுக்கு சகலத்தையும் கொடு.

(முன்சொன்னது அக்கினி உபஸ்தானம். அவைகள் முறையே கார்கபத்திய தெக்ஷிண ஆகவநீயாக்கினிகளுக்கு சம்பந்தப்பட்ட உபஸ்தானங்கள். நான்காவதாக சொல்லப்பட்ட உபஸ்தானமந்திரத்தை முந்திய மூன்றுஸ்தானத்திற்கும் சொல்லிக்கொள்ளவேண்டியது. இனி சூரியோபஸ்தானம் சொல்லப்படுகிறது). சுவர்ணவருணமான பாத்திரமாகிய மண்டலத்தினாலே சத்தியத்தினுடைய முகமானது (பிர்ம்மப்பிராப்தி துவாரம்) மறைக்கப்பட்டிருக்கிறது. ஓ பூஷனே! (சூரியனே) சத்தியதருமசுவரூபியான விஷ்ணுவின்பொருட்டு அதை நீ விலக்கு (விஷ்ணுவை நானடையும்பொருட்டுள்ள தடையை நீ விலக்கு). சூரியனிலுள்ள புருஷன் நான்தான் (அந்தக்கரணத்திலுள்ள புருஷனுக்கும் ஆதித்தனிலுள்ள புருஷனுக்கும் பேதமில்லையென்பது கருத்து). அவன்தான் சத்தியதருமம். ஆதித்தனுக்கு ஆதித்தத்துவத்தைக்கொடுக்கப்பட்டவன் அவன்தான். அது (அந்த ஆத்மதேஜஸ்) சுத்தமானது. புருஷாகாரமுள்ளது † லிங்கமற்றது ‡ (புல்லிங்க, ஸ்திரீ

* சிதாகாசமென்பது பிர்ம்மமே. பிரும்மசூத்திரம் க-க-௨௨ பார்க்க.

† சாந்தோக்கியோபநிஷத் க-கூ-கூ.

‡ சுவேதாசுவதரோபநிஷத் ரு-௧0.

லிங்கநபும்ஸக லிங்கமற்றது, அல்லது ஆண்பால் பெண்பால் அஃறிணைப்பாலற்றது). சூரியமண்டலத்திலும் கண்ணிலும் அக்கினியிலும் எது காணப்படுகிறதோ அது (சித்) ஆகாசத்தில் பரவியிருக்கிற (பிர்ம்ம) தேஜஸின் ஒரு அம்சம். இது (இந்த தேஜஸ்)தான் பிர்ம்மம். இதுதான் அமிருதம். இதுதான் தேஜஸ். இதுதான் சத்தியதருமம். சூரியனுடைய மத்தியில் அமிருதமாய் எது காணப்படுகிறதோ சந்திரனும் பிராணன்களும் எந்த அமிருதத்திற்கு முளையாயிருக்கின்றனவோ அது (சித்) ஆகாசத்தில் பரவியிருக்கிற தேஜஸின் அம்சம் மாத்திரமே. இதுதான் பிர்ம்மம். இதுதான் அமிருதம். இதுதான் தேஜஸ். இதுதான் சத்தியதருமம். * ஓங்காரமாகவும் அப்பாகவும், ஜோதிஸாகவும், ரஸமாகவும், அமிருதமாகவும் சூரியனில் எந்த யஜுஸ் (வணங்கயோக்கியமானதாக எது) விளங்கிறதோ, அது (சித்) ஆகாசத்தில் வியாபித்திருக்கிற தேஜஸினுடைய அம்சம். பிர்ம்மமானது (ஓம் பூர்புவஸ்ஸுவரோம்) = பூர்ப்புவஸ்வரோமாக யிருக்கிறது (பூலோக புவர்லோக சுவர்லோகங்களாகிய இந்த மூன்று சுவரூபமும் ஓங்காரமும் பிர்ம்மமே என்பது தாத்பரியம்). எட்டுப்பாதங்களை † யுடையவன். ‡ சுசியாயிருக்கிறவன். § ஹம்ஸனாயிருக்கிறவன். ¶ திருசூத்திரமுடையவன். ‖ அணுவாயிருக்கிறவன். நாசமற்றவன். பாபபுண்ணியங்களற்றவன். பிரகாசமான தேஜஸையுடையவன் இப்படிப்பட்டவனை (சூரியாத்துமாவான ஈசுவரனை)ப்பார்க்கிறவன் சகலத்தையும் பார்க்கிறான் (சர்வக்ஞனாயிருக்கிறான்). சூரியனுடைய மத்தியிலுண்டாகிற இரண்டுகிரணங்களும் (சித்) ஆகாசத்தில் வியாபித்திருக்கிற தேஜஸினுடைய அம்சமாயிருக்கின்றன. இது சூரியன், இதுசத்தியதருமம், இது யஜுஸ், இதுதபஸ், இது அக்கினி, இது வாயு, இதுப்பிராணன், இது ஜலம், இது சந்திரன், இது சுக்கிரம் (சுத்தம் அல்லது பலம்), இது அமிருதம், இதுபிர்ம்மத்தை யடையும்மார்க்கம். ஹா ந்ருபண்ணுவம் = + தேஜஸ்கூட்டம். அதிலேயே யஜமானன்கள் (அந்த

---

* ஓமாபோ ஜ்யோதீரஸோ அம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ்ஸுவரோம்.

† எட்டுத்திக்குகள் பாதங்கள்.

‡ சுத்தன்.

§ சஞ்சரிக்கிறதினால் சூரியனுக்கு ஹம்ஸனென்று பெயர்.

¶ ருக் யஜுஸ் சாமங்களினால் குறித்துக்காட்டத் தக்கவன்.

‖ சூக்ஷ்மனானதால் கண்களால் அறியக்கூடாதவன்.

\+ ஹாஸ: = பிரகாசசுவபாவம். சுக்ர: = ஜலத்தை வகிக்கிறவன், அல்லது சேர்ப்பிக்கிறவன். அல்லது மழையினால்ஜலத்தைக்கொடுக்கிறவன். அல்லது. அர்ணவ: = சமுத்திரம். ருக்வேதம். ௩-௨௨-௨ பார்க்க.

அர்ணவத்திலேயே உபாசகர்கள் (சமுத்திரத்தில் உப்பைப்போல்) லயித்துப்போகிறார்கள். இதேதான் பிர்ம்மத்தினுடைய யக்ஞம் (சகுணப்பிர்ம்ம ஐக்கியம்) சகல இஷ்டங்களும் அதிலிருக்கிறது.

இதுவிஷயமாய் (இருஷிகள்) சொல்லுகிறதாவது - இவன் (உபாசகன்) தேவதைகளுக்குள் பிரவேசித்து மந்தமாருதத்தினால் (இளந் தென்னல் காற்றினால்) அசைக்கப்பட்ட தீபத்தைப்போல் பிரகாசிக்கிறான். இப்படி எவனறிகிறானோ அவனறிந்தவன். அவன் துவைதத்தை * அறிகிறான். அவன் ஒன்றான ஸ்தானத்தை யடைந்து அந்த (தேஜஸ்) சுவரூபமாகிறான். காற்றினால் அடிக்கப்பட்ட (ஜல) பிந்துக்கள்போலவு மாகாசத்தில் மேகத்திற்குள் மறைந்திருக்கிற தேஜஸாகிய மின்னல்கள்போலவும் எப்போது முண்டாகப்பட்ட ஜீவாத்துமாக்கள் பிர்ம்மத்தினுடைய தேஜஸின் பிரதிபிம்பமாக விருக்கிறார்கள். அக்கினியிலிருந்துண்டாகிற பொரிகள்போல வெளிப்படுகிறார்கள். (௩௫)

பிர்ம்ம தேஜஸுக்கு சாந்தம், ஸமிர்த்தம், என இரண்டு குறிகளுண்டு. சாந்தத்திற்கு இருப்பிடம் ஆகாசம். ஸமிர்த்தத்திற்கு இருப்பிடம் அந்நம். ஆகையால் மந்திரங்கள், தான்னியம், நெய், மாம்சம், மாவுண்டை, ஸ்தாலீபாக அந்நம் முதலானவைகளினாலே யக்ஞவேதியில் (ஈசுவரபூஜையாகிய) ஹோமம் செய்யவேண்டும். மிச்சமிருக்கிற அந்நபானாதிகளை வாயை ஆகவனீயாக்கினியாக நினைந்துக்கொண்டு அதில் ஆகுதி செய்யவேண்டியது (அதாவது, ஜீவசுவரூபமாயிருக்கிற பிர்ம்மத்தை யஜிக்கிறதாக நினைந்து புஜிக்கவேண்டிய தென்பது கருத்து). தேஜஸ் விருத்தியின்பொருட்டும் புண்ணியலோகப் பிராப்தியின்பொருட்டும் மோக்ஷத்தின்பொருட்டும் யஜிக்கவேண்டியது. (முந்திய விரண்டும் காம்மியம். பிந்தியது நிஷ்காமம்). இதுவிஷயமாய் (இருஷிகள்) சொல்லுகிறதாவது, சுவர்க்கத்தை யிச்சிக்கிறவன் அக்கினிஹோத்திரத்தைச் செய்யவேண்டியது. அக்கினிஷ்டோமத்தினால் யமலோகத்தையும் உக்தம் என்கிற யாகத்தினால் சந்திரலோகத்தையும், ஷோடசீஎன்கிற யக்ஞத்தினால் சூரியலோகத்தையும் அதிராத்திர யக்ஞத்தினால் இந்திரலோகத்தையும் துவாதசாராத்திரம் முதல் ஆயிரம்வருஷம் என்கிற பெயரையுடைய யக்கியம்வரையில் இடைவிடாமல் செய்யப்பட்ட யக்ஞங்களினாலே பிரஜாபதி லோகத்தையும் ஜயிக்கிறான். தீபமானது வத்தி, பாத்திரத்திலிருக்கிற எண்ணெய், இவைகளுடையசேர்க்கையினாலே யிருப்பதுபோல (வியஷ்டி) சரீரம் (ஸம்ஷ்டி) சரீரமாகிய அண்டம் இவைகளுடைய சேர்க்கையால் ஜீவாத்துமாவும் சூரியனு மிருக்கிறார்கள். (வத்தியும்

* துவைதத்தை அறிகிறானென்றால், சகுணநிர்குணப் பிர்ம்மத்தை யறிகிறானென்பது தாத்பரியம்.

எண்ணெயு மிருக்கிறவரையில் தீபமிருக்கிறதுபோல தேகவாசனை லோகவாசனை அதாவது, பூர்வ கருமவாசனை யிருக்கிறவரையில் ஜீவனும் ஆதித்தனும் பேதமாய்க் காணப்படுகிறார்களென்பது தாத்பரியம்). (௩௬)

ஆகையால் ஓமென்கிற மந்திரத்தைச் (துவக்கத்தில்) சொல்லிக்கொண்டு இதை (மேலாகச்சொன்ன யக்ஞங்களை) உபாசிக்கவேண்டியது. அதினுடைய தேஜஸானது அளவற்றது. அது அக்கினி சூரியன் பிராணன் இம்மூன்றிலு மிருக்கிறது. (அக்கினி ஆகுதிஸ்தானம். சூரியன் யக்ஞதேவதை. பிராணன் யக்ஞத்தினு லுண்டாகும் பலனை யனுபவிக்கிறவனாகிய யஜமானன்). இந்த நாடியானது (இந்த மார்க்கமானது அல்லது, அந்த யக்ஞானுஷ்டானமானது) அந்நத்தை விருத்தியாக்கிறது. இதானது (இந்த யக்ஞமானது) அக்கினியில் ஹோமம் செய்யப்பட்டதை (ஹவிஸ் முதலியதை) சூரியனிடத்தில் சேர்ப்பிவிக்கிறது. அவனிடத்திலிருந்து எந்தரஸம் பெருகிறதோ அது சப்தத்தோடு (மழையாக) வருஷிக்கிறது. இந்த வருஷத்தினால் பிராணன்கள் பலத்தை யடைகின்றன. பிராணன்களால் பிரஜைகளுண்டாகிறார்கள். இதுவிஷயத்தில் (இருஷிகள்) சொல்லுகிறதாவது. "எந்த ஹவிஸ் அக்கினியில் ஹோமம் செய்யப்படுகிறதோ அது ஆதித்தனைப் போயடைகிறது. அதை யாதித்தன் (கிரகித்து) கிரணங்களினாலே வருஷிக்கிறான். அதினால் அந்நமுண்டாகிறது. அதினால் பிராணிகளுண்டாகின்றன." இதுவிஷயத்தில் (சுருதி) சொல்லுகிறதாவது. * அக்கினியில் செய்யப்பட்ட ஆகுதியானது ஆதித்தனைப்போய் சேருகிறது. ஆதித்தனிடத்திலிருந்து மழையுண்டாகிறது. மழையினாலந்நமும் அந்நத்தினால் பிரஜைகளும் (உண்டாகின்றன). (௩௭)

அக்கினிஹோத்திரம் செய்கிறவன் ஆசையாகிற வலையை யறுக்கிறான். பின்பு மோகத்தைத்தள்ளி கோபங்களைவிட்டு தனக் கிஷ்டமானதை (மோக்ஷத்தை)த் தியானிக்கிறான். பின்பு (அந்நமயப் பிராணமய மனோமய விக்ஞானமய) நான்கு கோசங்களால் சூழப்பட்டிருக்கிற பிர்ம்மகோசத்தை (பிர்ம்மத்தை மறைத்துக்கொண்டிருக்கிற ஆநந்தமயகோசத்தை) பேதித்து அதற்குப்பிறகு பரமாகாசத்தைப் பிரவேசிக்கிறான். † அவ்விடத்திலோவென்றால், சூரிய சந்திர அக்கினி சம்பந்தமான சாத்துவிக மண்டலங்களைப் பேதித்து (சூரியன் முதலிய தேவதைகளையுடைய சகலப்பிரபஞ்சத்தையும் லயிக்கச்செய்து) பின்பு சுத்தனாய் சத்துவமாயிருக்கிற அந்தக்கரணத்தில் விளங்குகிறவும் சலனமற்றவும் அமிருதமானவும் நழுவிப்போகாதவும் உறுதியுள்ளவும் விஷ்ணுவென்று பெயருடையவும் சகலத்திற்கும் சிரேஷ்டமா

* இந்த வாக்கியங்களை மனுஸ்மிருதி ௩-எசு-ல் காண்க.

† சாந்தோக்கியோபநிஷத் அ-கச பார்க்க.

னவும் சத்தியகாமத்துவம் சர்வக்ஞத்துவம் இவைகளுடன் கூடியிருக்கிறவும் சுவதந்தரமானவும் தன்னுடைய மகிமையிலேயே யிருக்கிறவுமாகிய சைதன்னியத்தைப் பார்க்கிறான் (பிர்ம்மப்பிராப்தியாகிய மோக்ஷத்தை யடைகிறான் என்பது தாத்பரியம்). இவ்விடத்தில் சத்தியகாமத்துவம் சர்வக்கியத்துவம் முதலியவை சொல்லியிருப்பதினாலே நிர்குண பிர்ம்மப்பிராப்தியல்ல. ஆனால் சகுணப்பிர்ம்மத்தை யடைந்து பிறகு நிர்குணப்பிர்ம்மப்பிராப்தி கிடைக்கிறது. இது கிரமமுக்தி மார்க்கம்). இதுவிஷயத்தில் (இருஷிகள்) சொல்லுகிறதாவது, "சூரியன் மத்தியில் சந்திரனிருக்கிறான். சந்திரன் மத்தியில் அக்கினியிருக்கிறான். அக்கினி மத்தியில் சத்துவமிருக்கிறது. சத்துவத்தின் மத்தியில் அச்சுதனிருக்கிறான்."

சரீரத்தில் ஓட்டைச்சாண் அளவுள்ள ஹிருதயத்தில் அங்குஷ்டமாத்திரமாயிருக்கிற (கமலத்தில்) அணுவுக் கணுவாயிருக்கிறதை (ஆத்மாவை) த்தியானஞ்செய்து பிர்ம்மத்தை யடைகிறான். இவ்விடத்தில், தான் சகல காமங்களு மடங்கியிருக்கின்றன. இதுவிஷயத்தில் (இருஷிகள்) சொல்லுகிறதாவது, "சரீரத்தில் ஓட்டைச்சாண் அளவுள்ள ஹிருதயத்தில் அங்குஷ்டமாத்திரமான (கமலத்) தில் இரண்டுமூன்றுப் பிரகாரமாய் (எண்ணெய் வத்தி இவைகளுடைய தாரதம்மியத்தினாலே மந்தமத்தியம உத்தம) தீப சுவாலைபோல் விளங்கிக்கொண்டிருக்கிறவும் எல்லாவிடத்திலும் ஸ்துதிக்கப்படத்தக்கவும் மகாதைவமாகவுமிருக்கிற அந்த பிர்ம்மமானது சகலலோகத்தையும் வியாபித்திருக்கிறது. ஓம் நமோ பிர்ம்மணேநமஃ (௩அ)

ஆறுவது பிரபாடகம் முற்றிற்று.

---

## எ-வது. பிரபாடகம்.

ஓம், அக்கினி (தேவதை) காயத்திரி (சந்தஸ்) திருவிருத் (ஸ்தோமம்) ரதந்தரம் (ஸாமம்) வஸந்தா (வஸந்தருது) பிராணன் நக்ஷத்திரங்கள் வசுக்கள் இவைகள் சூரியனுக்கு முன்பாக (கிழக்கே) உதயமாகின்றன. தபிப்பிக்கின்றன. வருஷிக்கின்றன. ஸ்தோத்திரஞ்செய்கின்றன. மறுபடி உள்ளே (சூரியனுக்குள்ளே) பிரவேசிக்கின்றன. துவாரத்தின்வழியாய் பார்க்கின்றன. (சூரியனுடைய கிரணங்களின் பிரவிருத்தி மார்க்கத்தினால் அனுபவிக்கப்படவேண்டிய அமிருதத்தை அக்கினி காயத்திரிமுதலிய தேவதைகள் அனுபவிக்கிறார்களென்பது கருத்து).

(அக்கினி முதலியவர்களுடைய விருத்தாந்தம் தியானிக்கத்தக்கதென்பதைத் தெரியவேண்டியதற்காக முந்தி சொல்லப்பட்டது. இப்போது தியானிக்கத்தக்க ஆதித்தியனுடைய சுவரூபத்தைச் சொல்லுகிறார்). நினைப்புக்கெட்டாதவன் ரூபமில்லாதவன், கெம்பீரன் (கரு

மேந்திரியங்களாலறியக்கூடாதவன்). குப்தன் (ஞானேந்திரியங்களுக்கெட்டாதவன்). அநவத்தியன் (பாபபுண்ணியமற்றவன்). கனன் (பேதிக்கத்தகாதவன்). கேகநன் (தெரிந்துகொள்ளக் கூடாதவன்). நிர்குணன் (ரூபமுதலிய குணமற்றவன்). சுத்தன் (ஒட்டாதவன்) ஹாஸ்வரன். (சகலத்தையும் பிரகாசம்செய்கிற ஜோதி சுவரூபன்). குணபுக் (முக்குண விகாரங்களுக்கு சாக்ஷியாயிருக்கிறவன்). பயங்கரன் (காலசுவரூபி). அநிர்விருத்தி (சிருஷ்டிக்கப்படாதவன்). யோகிகளுக்கீசன். சர்வக்ஞன். ஐவநு (பூஜ்ஜியன்). அப்பிரமேயன் (அளவிடக்கூடாதவன்). ஆதியந்தமற்றவன். ஸ்ரீமான் (சகலபெருமை பொருந்தியவன்). பிறப்பற்றவன். தீமான (விவேகி). குறித்துச் சொல்லத்தகாதவன். சகலத்தையும் உண்டாக்கிறவன். சகலத்திற்கும் ஆதாரமாயிருக்கிறவன். சகலத்தையும் அனுபவிக்கிறவன். சகலத்திற்கு மீசன். சகலத்திற்கு முள்ளுக்குள்ளே யிருக்கிறவன் (சகல பூதாந்தரியாமி).()

இந்திரன்(தேவதை), திருஷ்டுபு(சந்தஸ்), பஞ்சதசம் (ஸ்தோமம்), பிரகத் (ஸாமம்), கிரீஷ்மம் (ருது), வியானன், சோமன், ருத்திரர்கள் இவர்கள் வலப்புறத்தில் (தெற்கே) உதயமாகிறார்கள். தபிப்பிக்கிறார்கள். வருஷிக்கிறார்கள். ஸ்தோத்திரம் செய்கிறார்கள். மறுபடியுள்ளே பிரவேசிக்கிறார்கள். துவாரத்தின்வழியாய் பார்க்கிறார்கள். (அந்த சூரியனானவன்) ஆதியந்தமற்றவன். அளவிடக்கூடாதவன். எல்லையற்றவன். எவனாலும் ஏவப்படாதவன். சுவதந்திரன். (ஆண்பால் பெண்பால் முதலிய) அடையாள மில்லாதவன். மூர்த்தியற்றவன். அநேக சக்தியுள்ளவன். சகலத்தையும் தரிக்கிறவன். சகலத்தையும் பிரகாசிப்பிக்கிறவன். (உ)

மருத்துக்கள் (தேவதை), ஜகதீ (சந்தஸ்), ஸப்ததசம் (ஸ்தோமம்), வைரூபம் (ஸாமம்), வருஷா (வருஷருது), அபானன், சுக்கிரன், ஆதித்தர்கள் (துவாதசாதித்தர்கள்), இவர்கள் பின்புறத்தில் (மேற்கே) உதயமாகிறார்கள். தபிப்பிக்கிறார்கள். வருஷிக்கிறார்கள். ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள். மறுபடி உள்ளே பிரவேசிக்கிறார்கள். துவாரத்தின்வழியாய்ப் பார்க்கிறார்கள். (இந்த சூரியனானவன்) சாந்தன், அசப்தன், அபயன், அசோகன், ஆனந்தன், திருப்தன், ஸ்திரன், அசவற்றவன்; அமிருதன், அச்சுதன், சாசுவதன், விஷ்ணுவென்னும் பெயரையுடைய சகலத்திற்கும் மேலான ஜோதிஸ். (௩)

விசுவேதேவதைகள் அநுஷ்டுபு(சந்தஸ்), ஏகவிம்சம்(ஸ்தோமம்), வைராஜ (ஸாமம்), சரத் (ருது), சமானன், வருணன், சாத்தியர்கள், இவர்கள் உத்தரபாகத்தில் (வடக்கே) உதயமாகிறார்கள். அவர்கள் தபிப்பிக்கிறார்கள். வருஷிக்கிறார்கள். ஸ்தோத்திரம் செய்கிறார்கள். மறுபடி உள்ளே பிரவேசிக்கிறார்கள். துவாரத்தின் வழியாய் பார்க்கி

ளுர்கள். (இந்த சூரியனானவன்) உள்ளே சுத்தமானவன். நிர்மலமாயிருக்கிறான். சூன்னியனா யிருக்கிறான். சாந்தனாயிருக்கிறான். பிராணனில்லாதவனா யிருக்கிறான். மனதில்லாதவன். முடிவில்லாதவன். (௪)

மித்திராவருணர்கள் (தேவதைகள்), பங்தி (சந்தஸ்), திருணவத்திரயத்திரும்சம் (ஸ்தோமங்கள்), சாக்குவாரைவதே (ஸாமங்கள்), ஹேமந்த சிசிர(ருதுக்கள்), உதானன், அங்கிரஸ், சந்திரன், இவர்கள் மேலேயுதிக்கிறார்கள்: தபிப்பிக்கிறார்கள். வருஷிக்கிறார்கள். ஸ்தோத்திரம் செய்கிறார்கள். மறுபடி உள்ளே பிரவேசிக்கிறார்கள். துவாரத்தின்வழியாப் பார்க்கிறார்கள். (இந்த சூரியனானவன்) பிரணவமென்ற பெயரையுடையவன். நடத்துகிறவன். பிரகாசரூபி. நித்திரையில்லாதவன். ஜரையற்றவன். மரணமற்றவன். துக்கமற்றவன். (௫)

சநி, இராகு, கேது, சர்ப்பங்கள், இராக்ஷஸர்கள், யக்ஷர்கள், மனிதர்கள், பக்ஷிகள், * சரபங்கள், யானைகள், கீழே உதயமாகிறார்கள். தபிப்பிக்கிறார்கள். வருஷிக்கிறார்கள். ஸ்தோத்திரஞ் செய்கிறார்கள். மறுபடி உள்ளே பிரவேசிக்கிறார்கள். துவாரத்தின்வழியாய்ப் பார்க்கிறார்கள். (இந்த சூரியனானவன்) பிராக்ஞன். தரிக்கிறவன் (வருணாசிரமதருமங்களை நிலைக்கச்செய்கிறவன்). சர்வாந்தரியாமி. நாசமற்றவன். சுத்தன். நிர்மலமானவன். பிரகாசமுள்ளவன். பொறுமையுள்ளவன். சாந்தன். (௬)

(தியானிக்கவேண்டிய அதிதெய்வசுவரூபம். விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. இப்போது அத்தியாத்தும சுவரூபம் சொல்லப்படுகிறது). இவன்தான் ஹிருதயத்திலிருக்கிற ஆத்மா. சூக்ஷமன், அக்கினியைப்போல் ஜுவலிக்கப்பட்டவன். விசுவரூபன். (சகலப் பிராணிகளாலும் புஜிக்கப்படுகிற) இந்த அந்நம் அவனுடையதுதான். அவனிடத்தில் (ஸ்தாவர ஜங்கமமாயுள்ள)இந்தப் பிரஜைகளெல்லாம் கோர்க்கப்பட்டிருக்கின்றார்கள். இவன்தான் ஆத்மா, பாபமற்றவன், ஜரையற்றவன், மரணமற்றவன், துக்கமற்றவன், பசியற்றவன், தாகமற்றவன், சத்தியசங்கற்பன், சத்தியகாமன், இவன்தான் பரமேசுவரன், இவன்தான் பூதாதிபதி, (இவன்தான்) பூதங்களை ரக்ஷிக்கிறவன், இவன்தான் அணை (வரம்பைத்தப்பி நடக்கவொட்டாமல் தடுக்கிறவன்), இவன்தான் விதரணன் (வருணாசிரதருமங்களை நிலைக்கச்செய்கிறவன்), இவன்தான் ஆத்மா, ஈசுவரன், சம்பு, ஹவன் (பவன்), ருத்திரன், பிரஜாபதி, பிரபஞ்ச சிருஷ்டிகருத்தா, ஹிரண்ணியகருப்பன், சத்தியம், பிராணன், ஹம்ஸன், ஆளுகிறவன், அழிவற்றவன், விஷ்ணு, நாரா

* சரபம்=ஒருவித மிருகம். எட்டு காலுள்ளது. சிம்மத்தைவிட மகா பலமுள்ளது. ஹிமோத்பருவதத்தி லிருப்பதாக சொல்லுவதுண்டு. ஆனால் இக்காலத்தில் காணப்படுகிறதில்லை.

யணன், அக்கினியிலும் ஹிருதயத்திலும் ஆதித்தனிலு மிருக்கிறவனிவ னொருவன்தான். இப்படிப்பட்ட சர்வரூபியான சிதாகாசத்தி லிருக்கிற உன்பொருட்டு நமஸ்காரம். (எ)

ஓ இராஜாவே! ஞானத்திற்கு விகாதங்களாயும் (தடைகளாயும்) மோகவலைக்குக் காரணமாயுமிருக்கிற விது (அடியில் சொல்லப்படுகிறது)தான். அதானது—சுவர்க்கத்திற்கு அநர்காளாயிருக்கிற (நாஸ்திகர்கள்) வர்களுடன் சுவர்க்கத்திற்கு அருகனாயிருக்கிறவன் சகவாசம் செய்வதுதான். இவர்கள் (இந்த நாஸ்திகர்கள்) எதிரில் விஸ்தாரமான கிளைகளுடனிருக்கிற மரமானது காண்பிவிக்கப் பட்டாலும் (அதை அலக்ஷியம் செய்து அற்பமாயிருக்கிற புல்லுப்புதைப் பெரிதாக நினைக்கிறார்கள். இந்த உலகவிஷய சுகத்திலேயே எப்போதும் சந்தோஷ மடைந்திருக்கிறவர்கள், பிறருடைய வேலைநிமித்தம் எப்போதும் ஏவப்படுகிறவர்கள், எப்போதும் பிச்சை வாங்குகிறவர்கள், எப்போதும் சிற்பவேலையினால் ஜீவனம் செய்கிறவர்கள், பட்டணங்களில் பிச்சை யெடுக்கிறவர்கள், யக்ஞம் செய்யத் தகாதவர்களுக்கு யக்ஞம் செய்விக்கிறவர்கள், சூத்திரனுடைய சிஷியர்கள், சாஸ்திர வித்துவானான சூத்திரர்கள், ச(வ)டகர்கள் (மோசக்காரர்கள் அல்லது நம்பிக்கைத் துரோகிகள் அல்லது கோட்சொல்லிகள் அல்லது குரூரமானவர்கள்), ஜடர்கள் (அசங்கியமான பேச்சுகளை வரம்பன்றி பேசுகிறவர்கள்), நடனம் செய்கிறவர்கள், படர்கள் (சிபாய்கள் அல்லது திருடர்கள்), சந்நியாசி வேஷதாரிகள், வேஷம்போட்டு நாடகமாடுகிறவர்கள், இராஜசேவகர்கள், பதிதன் முதலானவர்கள், யக்ஷ ராக்ஷஸ பூதகண பிசாச உரக கிரகங்கள் முதலானவர்களுடைய துன்பத்தை நிவிருத்தி செய்வதாக பணம் வாங்கிக்கொள்ளுகிறவர்கள், பாசாங்காய் காஷாயவஸ்திரம் குண்டலங்கள் கப்பரை இவைகளைத் தரித்துக்கொண்டிருக்கிறவர்கள், வீணான தருக்கம் திருஷ்டாந்தம் மோசம் இந்திரஜாலம் இவைகளினாலே வைதிகமார்க்கத்தில் பற்றுள்ளவர்களை எதிர்க்கிறவர்கள் இப்படிப்பட்டவர்களில் ஒருவனுடனும் சகவாசம் செய்யக்கூடாது. அவர்கள் வெளிப்படையான திருடர்கள். அவர்கள் சுவர்க்கத்திற்கு அபாத்திரர்கள். சுருதி சொல்லுகிறதாவது, "பொய்யான திருஷ்டாந்தங்களையும் ஏதுக்களையுமுடைய கபடமான* நிராத்துமவாதங்களினாலே மோகத்தை யடைந்த ஜனங்கள் வேதத்திற்கும் (சூதடியான) வித்தைக்கு முள்ளபேதத்தை அறிகிறதில்லை." ()

பிரகஸ்பதியானவர் சுக்கிரவேஷம் தரித்து இந்திரனுக்கு க்ஷேமமும் அசுரர்களுக்கு நாசமும் உண்டாகவேண்டியதற்காக இந்த அவித்தையை † உற்பத்திசெய்தார். அதினால் (பொய்யான அப்படிப்பட்ட

* சூன்னியவாதிகள் க்ஷணிகவாதிகள் முதலானவர்கள்.

† சர்வதெரிசனசங்கிரகத்தில் சார்வாகமதத்தைப்பற்றி சொல்லியிருக்கிற இடத்திலுள்ள பிரகஸ்பதிவாக்கியத்தைப் பார்க்க.

சாஸ்திரத்தினல் நாஸ்திகர்கள்) மங்களகரமானதை அமங்களமென்றும் அமங்களமானதை மங்களமென்றும் உபதேசிக்கிருர்கள். வேதாதிசாஸ்திரங்களுக்கு விரோதமான அனுஷ்டானங்களையே செய்யத்தக்கதென்று சொல்லுகிருர்கள். ஆகையாலிதைப்படிக்கக்கூடாது. இது (இந்த சூதடியானசாஸ்திரம்) பொய்யானதாயும் நிஷ்பலமானதாயுமிருக்கிறது. ஜா[illegible]வரம்பைக்கடந்து நடப்பவனுக்கு தாத்காலத்தில் ஒருசுகமிருப்பதாக நினைப்பதுபோல (இந்த துர்சாஸ்திர அனுஷ்டானத்திற்கு) தாத்கால அனுபவம்தான் பலன். இந்த சாஸ்திரத்தைத் துடங்கக்கூடாது. இதுவிஷயத்தில் (சுருதி) சொல்லுகிறதாவது.—"வித்தை * அவித்தை † இவ்விரண்டுக்கும் பரஸ்பரவிரோத "மிருக்கிறது. ஒன்றுக்கொன்று வெகுதூரம் பேதமுள்ளது. நசிகேத "ஸாகிய ‡ உன்னை வித்தியாபேக்ஷயுள்ளவனுக நினைக்கிறேன். "ஏனென்றல் (நான்சொன்ன) அநேககாமவிஷயங்கள் உன்னை அவை "களுக்குள்ப்படுத்தவில்லை" வித்தை அவித்தை இவ்விரண்டையும் § எவன் அறிகிருனே (இவ்விரண்டையும் அனுஷ்டிக்கவேண்டியவன் ஒருவன்தானென்று எவன் அறிகிருனே) அவன் அவித்தையினல் மிருத்துவைத்தாண்டி (கருமானுஷ்டானத்தினல் ஞானத்திற்கு விரோதியான பாபத்தைப் போக்கடித்துக்கொண்டு) வித்தையினல் அமிருதத்துவத்தை (மோக்ஷத்தை) அடைகிருன். அவித்தைக்குள்ளிருந்துகொண்டு (கருமங்களையே செய்துகொண்டு) தாங்களே ஞானிகளென்றும் பண்டிதர்களென்றும் நினைத்துக்கொண்டிருக்கிற மூடர்கள் ¶ குருடனுக்குக்குருடன் வழிகாட்டுவதுபோல் பாபரப்பாய் நானுவிதமான கெதிகளில் சுழண்டுகொண்டிருக்கிருர்கள் (திரும்பி திரும்பி பலஜன்மங்களை யடைகிருர்கள்). (கூ)

ஆத்மஞானத்திலிச்சையுள்ள தேவதைகளும் அசுரர்களும் பிரும்மாவிடத்திற்குப் போய் அவரை நமஸ்கரித்து அவர்கள் சொல்லுகிறதாவது, ஓ! பகவானே! நாங்கள் ஆத்மஞானத்திலிச்சையுள்ளவர்களாயிருக்கிறோம். எங்களுக்கு நீர் அதைச்சொல்லவேண்டுமென்றுர்கள். பின்பு பிரும்மாவானவர் சிலகாலம் தியானித்து இந்த அசுரர்கள் ஆத்மாவைக்காட்டிலும் அந்நியமாயிருக்கிறதை (தேகாதிகளை) ஆத்மாவென்று நினைக்கிருர்களென்று எண்ணி (நிஜத்தைக்காட்டிலும்) அந்நியமானதை அவர்களுக்குச் சொன்னர். இந்தத்தப்பான எண்ணத்தில் பிடிப்புள்ளமூடர்கள் (இக்காலத்திலுள்ளவர்கள்) இப்போது (சத்

* வித்தை = வேதத்தில் ஞானகாண்டம்.
† அவித்தை = வேதத்தில் கருமகாண்டம்.
‡ கடோபநிஷத் உ-ச-பார்க்க.
§ ஈசாவாஸியோபநிஷத் கக-பார்க்க.
¶ கடோபநிஷத் உ-ரு-பார்க்க.

தியம்போல்) அநுஷ்டித்துவருகிறார்கள். (சமுசாரத்தை) தாண்டுகிற சாதனமாயிருக்கிற ஆத்மதத்துவஞானத்தைக் கெடுக்கிறார்கள். (வேத மார்க்கத்தை தூஷித்து நிக்கிரகிக்கிறார்கள்) பொய்பேசுகிறார்கள். இந்திரஜாலத்தைப்போல பொய்யை மெய்யாகப்பார்க்கிறார்கள். வேதத்தில் சொல்லியிருக்கிறதெதுவோ அதுதான் சத்தியமானது. வேதத்தில் சொல்லியிருக்கிறதை வித்துவான்கள் அனுஷ்டிக்கிறார்கள். ஆகையால் பிராம்மணனானவன் வேதசம்பந்தமல்லாததை (சாஸ்திராதிகளை) அப்பியசிக்கக்கூடாது. அப்படிசெய்தால் அதினுடைய பலனிதுதான் (*நரகப்பிராப்தி மிருகாதி ஜன்மம் இவைகள்தான்). (௧௦)

இதுதான் அதினுடைய (வேதத்தினுடைய) சுவரூபம். ஹிருதயகுகையிலிருக்கிற ஆகாசத்தினுடைய சிரேஷ்டமான்தேஜஸ். அதானது அக்கினி சூரியன் பிராணன் இந்த மூன்றுஸ்தானத்திலு மிருக்கிறது. ஓமென்கிற அக்ஷரமானது ஹிருதயகுகையிலிருக்கிற ஆகாசத்தின் சுவரூபமாயிருக்கிறது. ஓமென்கிற அக்ஷரத்தினாலே அது (அந்த தேஜஸ்) முளைத்து மென்மேலும் பரவுகிறது. (அந்த பிர்ம்மதேஜஸானது) ஓங்காரரூபமாய் முளைக்கிறது (விதை முளைப்பதுபோல் வேதரூபமாய் வெளியாகிறது). நாதரூபமான பிரணவாகாரமாய் மேலே போகிறது (சுவாசத்தைப்போல உச்சாரணஸ்தானத்தை யடைந்து அக்ஷரரூபமாகவாகிறது). எப்போதும் பிர்ம்மோபாசனைக்கு ஆசிரயமாயிருக்கிறது. அது (அந்தப்பிர்ம்மதேஜஸ்) வயிற்றுக்குள் காற்றுடன் சேர்ந்து ஜாடராக்கினி மறைந்திருக்கிறவிடத்தில் கிளம்பி காற்று வீசுகையில் ஆகாசத்தில்புகை பலபிரிவாய் போவதுபோல் மரத்தைச் சுத்திலும் கிளைக்குக் கிளைமேலேபோகிறது. (மரத்தினடியிலுண்டான புகையானது மேலேகிளம்பி மரத்தைச்சுத்தி பலகிளைகளுடன் சம்பந்தப்படும்போது அந்தக்கிளைகளுடைய சுவரூபத்தை யடைவதுபோல் மூலாதாரத்திற்குமேலிருக்கிற அக்கினிமண்டலமானது அதிலிருக்கிற அக்கினியினால் உஷ்ணத்தையடைந்து அதானது சுவாசமாகிற காற்றினாலூதப்பட்டு, பிர்ம்மதேஜஸாகிற நாதமாத்திரமான ஓங்காரமானது விபாகமில்லாத ஓமென்கிற அக்ஷரமாகப் பிரகாசப்படுகிறது. அக்ஷர உற்பத்தி ஸ்தானங்களாகிய கழுத்து தாலுமுதலான விடங்களில் சம்பந்தப்படும்போது பல அக்ஷரசுவரூபமாகி வேதத்தினுடைய பலகிளைகளாகிறது). ஜலத்தில்போட்ட உப்பைப் போலவும் சூடுசெய்யப்பட்ட நெய்யைப்போலவும் (சுத்தசைதன்னியமானது மாறுதலையடைகிறதில்லை. எப்படி என்றால், எந்தஜலத்தில் உப்புப் போடப்பட்டதோ அந்த ஜலத்தைக்காய்ச்சினால் மறுபடி உப்பாகும். சூடுசெய்யப்பட்ட நெய்யானது சூடு ஆறினால் மறுபடி உறைந்து போகும். அப்படிபோல பரிசுத்தமாயிருக்கிற ஆத்மா

* சாந்தோக்கியோபநிஷத் கடைசிபாகம் பார்க்க.

வானது உபாதியான சரீரம் அக்கினி பிராணன் மனது முதலியவை நசித்தால் சுவசுவரூபமாகவே யிருக்கிறது). அபித்தியாதாவினாலே (இந்திரஜாலக்காரனுடைய ஜாலவித்தையாகிய தியானத்தினாலே மெத்தைவீடு முதலானது) விஸ்தரிப்பதுபோல ஈசுவரனுடைய சித்விஸ்தாரமே வேதரூபமாக பரவியிருக்கிறது. இதுவிஷயத்தில் (ஞானிகள்) சொல்லுகிறதாவது. இதெப்படி யென்று (சிஷியன் கேட்டான்). ஓமென்று உச்சரித்தமாத்திரத்தினால் சகல சரீரத்தையும் (பிரபஞ்சமுழுதையும்) பிரகாசிப்பிக்கிறபடியினாலே வேதமானது வைத்துதம் (மின்னல்போல் பிரகாசம்) ஆகையினாலே அபரிமிதமான தேஜஸை (பிர்ம்மத்தை) ஓங்காரத்தினாலுபாசிக்கவேண்டியது. வலக்கண்ணிலிருக்கிற புருஷன் இந்திரன். * இடக்கண்ணில் அவன் பாரியை † யிருக்கிறாள். (இது ஜாக்கிரதவஸ்தை). இவர்களுடைய சேர்க்கையானது ஹிருதயத்திற்குள்ளிருக்கிற துவாரத்திலுண்டாகிறது. (இது சுவப்னாவஸ்தை). ஹிருதயத்திலிருக்கிற ரக்தபிண்டமானது இவ்விருவருக்கும் ஆகாரமாயிருக்கிறது. (இது ஸுஷுப்தி அவஸ்தை). ஹிருதயத்திலிருந்து நாடித்துவாரம் நீண்டு கண்ணில் சேருகிறது. இந்த ஒருநாடியானது இரண்டாகப் பிரிந்து இரண்டு கண்களிலும் போய் ஸ்தாபித்திருக்கிறது. மனதானது தேகத்திலிருக்கிற அக்கினியை எழுப்புகிறது. அந்த அக்கினியானது வாயுவை எழுப்புகிறது. வாயுவானது மாரில் சஞ்சரித்து மந்தரத்துவனியை உண்டாக்கிறது. அக்கினியுள்ள கடைகிற கட்டையானது ஹிருதயத்தில் அசைவையுண்டாக்கிறது. அதானது (அந்ததுவனியானது) அணுவாயிருக்கிறது. பிறகு (கண்டத்தினிடத்தில்) இரட்டிக்கிறது. நாக்குநுனியில் மும்மடங்காகிறது. அது (வார்த்தையாக) பிறப்படுகையில் (சப்தங்களுக்கு) உற்பத்திஸ்தானமாக சொல்லுகிறார்கள். இதையெல்லாம் எவன் அறிகிறானோ அவன் மரணத்தையாவது வியாதியையாவது துன்பத்தையாவது அடைகிறதில்லை. இப்படியறிகிறவன் சகலத்தையுமறிகிறான். எவ்விடத்திலும் எல்லாவற்றையும் அடைகிறான் (என்றால், சகலத்தையும் பிர்ம்மமாகப்பார்த்து தானும் பிர்ம்மமாகிறான்). கண்ணில் எவனிருக்கிறானோ, சுவப்நத்தில் எவன் சஞ்சரிக்கிறானோ, சுஷுப்தியை எவன் அனுபவிக்கிறானோ அவைகளைக் (அந்த மூன்று அவஸ்தைகளை) கடந்து (துரியாவஸ்தையில்) எவனிருக்கிறானோ அந்த ஆத்மாவுக்கு ‡ இந்நான்கும் அவஸ்தைகள். இந்ததுரியாவஸ்தை சகலத்தி

---

* பரமேசுவரன்.
† விராட்.
{ இவ்விஷயத்தைக் குறித்து பிரகதாரண்ணியகோபநிஷத், ௪-௨-௨-௩ இதற்கு சங்கராசாரி சுவாமியார் பாஷியம்பார்க்க.

‡ ஜாக்கிரசுவப்ந சுஷுப்தி துரியாவஸ்தைகளிலுள்ள ஆத்மாவுக்கு முறையே விசுவன் தைஜஸன் பிராக்ஞன் துரியன் என்று பெயர். மாண்டூக்கியோபநிஷத் பார்க்க.

லும் சிரேஷ்டமானது. ஒருபாத பிர்ம்மமானது மூன்று அவஸ்தைகளிலும் சஞ்சரிக்கிறது. மூன்றுபாத பிர்ம்மமானது துரியாவஸ்தையில் சஞ்சரிக்கிறது. சத்தியம் அசத்தியம் இவைகளுடைய வியவகாரத்தின் பொருட்டு இந்தத்துவைதபாவமானது பரமாத்துமாவுக்குக் காணப் படுகிறது. இந்தத்துவைதபாவமானது பரமாத்துமாவுக்குக் காணப் படுகிறது. (இதின் கருத்தென்னவெனில் இந்தப்பிரபஞ்சத்தினுடைய இருப்புக்கு காரியகாரணமென இரண்டு அவஸ்தைகளுண்டு. காரியமானது. ஸ்தூலம் சூக்ஷ்மமென இருவகைப்படும். ஆத்மாவினுடைய ஜாக்கிரதவஸ்தையானது ஈசுவரன் விஷயத்தில் வைசுவாநரன் என்றும் ஜீவன்விஷயத்தில் விசுவனென்றும் வியவகரிக்கப்படுகிறது. இது ஸ்தூலகாரியம் அப்படியே சுவப்னுவஸ்தையில் முறையே ஹிரண்ணியகருப்பன் என்றும் தைஜஸனென்றும் சுஷுப்தி அவஸ்தையில் முறையே சூத்திராத்துமா என்றும் பிராக்ஞனென்றும் முறையே சூக்ஷ்ம காரணசரீரங்களில் அடங்கியிருக்கிற ஆத்மாவிஷயத்தில் வியவகரிக்கப்படுகிறது. இந்தப் பிரபஞ்சமானது காரியத்திலடங்கியிருந்து பிறகு வியவகாரத்தில் வருகிறது. துரியமானது காரியகாரணங்களுக்கு அப்புறப்பட்டது. ஆகையால் அகண்டமானது. மாண்டூக்கியோபநிஷத் கௌடபாதகாரிகை க-கக-பார்க்க). (கக)

எ-வது. பிரபாடகம் முற்றிற்று.

---

மைத்திராயண்ணியுபநிஷத் முற்றிற்று.

ஓம் தத்ஸத்.

---

ஓம் பரப்ரஹ்மணே நம:

ஶ்ரீ [illegible] நம:

ஸாமவேதத்தில்

# மைத்திரேயோபநிஷத்.

---

## முதலாவது அத்தியாயம்.

---

(ஆப்பியாயந்துசாந்தி:)

பிரஹத்திரதன் என்னும் பெயருடைய அரசன் இச்சரீரமானது அசாசுவதமானதென்றெண்ணி வைராக்கியமடைந்து தன்னுடைய மூத்தகுமாரனை இராஜ்யத்தில் வைத்துவிட்டு காட்டுக்குச் சென்றான். கைகளைத் தூக்கிக்கொண்டும் சூரியனைப் பார்த்துக்கொண்டும் சிரேஷ்டமான தபஸைச் செய்துகொண்டிருந்தான். ஆயிரம் நாள்களின் முடிவில் புகையில்லாத அக்கினிபோலவும் தேஜஸினால் தெகிக்கிறவர் போலவுமிருக்கிற ஆத்மவித்தாகிய பகவானான சாகாயங்கியமுனியானவர் சமீபத்திற்கு வந்தார். "எழுந்திரு, எழுந்திரு, வரத்தைக் கேட்டுக்கொள்" என்று இராஜாவைப்பார்த்துச் சொன்னார். இராஜாவானவன் அவருக்கு நமஸ்காரம்செய்து, ஓ பகவானே! நான் ஆத்மவித்தல்ல, நீர் தத்துவத்தை யறிந்தவர், ஸத்துவத்தைச் (சத்தான பிர்ம்மத்தை) சொல்லும் நான் கேட்கவேண்டுமென்று சொன்னார். ஓ இக்ஷ்வாகுவம்சத்தி லுதித்தவனே! "இந்தக் கேள்வியைக் கேட்காதே. இந்தச்சங்கதி சொல்லுவதற்கு அசத்தியமானது. அபேக்ஷையுள்ள வேறெதையாவது கேள்" என்றார் இராஜாவானவன் சாகாயங்கியருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு இந்த (அடியில்வரும்) வாக்கியத்தைச்சொன்னார். (க)

இவைகளினாலே (அபேக்ஷையுள்ள மற்றவைகளினாலே) எனக்காவது மற்றவர்களுக்காவது என்ன (பிரயோசனம்)?

சமுத்திரங்கள் வற்றிப்போகின்றன. மலைகள் விழுந்துபோகின்றன. துருவனுடைய ஸ்தானமும் மரங்களுடைய ஸ்தானங்களும் மாறுகின்றன. பூமி முழுகிப்போகிறது. தேவதைகள் ஸ்தானத்தை விட்டோடிப்போகிறார்கள். (மகா மகிமைபொருந்திய வைகளாகவும் வெகு ஸ்திரமானவைகளாகவும் எண்ணப்பட்டிருக்கிற இவைகளின் நிலைமையே இப்படியிருக்கையில்) நானோ அவன் (முன்சொல்லியபடி ஆத்மவித்தல்லாதவன்). காமபோகங்களினால் ஆசிரயிக்கப்பட்டிருக்கிறவனுக்கு இப்படிப்பட்ட சமுசாரத்தில் அடிக்கடி திரும்புதல் (பிறப்பிறப்பு) காணப்படுகிறபடியினாலே இந்தக் காமபோகங்களினா

லென்னப் பிரயோசனம்? நானே பாழுங்கிணற்றில் விழுந்திருக்கிற தவனைபோல் இந்தச் சமுசாரத்தில் முழுகியிருக்கிறேன். நீர் நமக்குக்கெதி. நீர் உத்தாரம் செய்வதற்குத் தகுந்தவரா யிருக்கிறீர் என்பதே. (உ)

ஓ பகவானே! இந்தத்தேகமானது ஸ்திரீபுருஷ சம்பந்தத்தினுலுண்டானது. ஞானமில்லாதது. நரகமே. மூத்திரத் துவாரத்தினுல் வெளிப்பட்டது. எலும்புகளினு லிணைக்கப்பட்டது. மாம்சத்தினுல் பூசப்பட்டது. தோலினுல் கட்டப்பட்டது. மலமூத்திர வாதபித்த கபக்கொழுப்பு ஊன் (வஸா) வபை இவைகளினுலேயும், பின்னும் அநேகமான மலங்களினுலேயும் நிறைந்திருக்கிறது. இப்படிப்பட்ட சரீரத்திலிருக்கிற நமக்கு பகவானே! நீர்தான் கெதி என்பதே. (ங)

அதின்பிறகு பகவானுன சாகாயங்கியர் பிரீதியடைந்து அரசனை நோக்கிச் சொல்லுகிறுர். இக்ஷுவாகு வம்சமாகிய கொடிக்கு சிரசாகவிருக்கிற மகாராஜாவாகிய பிரகத்திரதனே! நீ ஆத்மஞானி. செய்யவேண்டியதைச் செய்தவனு யிருக்கிறுய். மருத்துஎன்கிற பெயரினுல் பிரசித்தியடைந்தவனு யிருக்கிறுய். * (இராஜா) பகவானே! இந்த ஆத்மாவானவன் யாரென்பது உம்மால் வருணிக்கத்தக்கதன்று சொன்னுன். அதற்கவர் சொன்னதாவது—எவை அர்த்தங்கள்போ லிருக்கின்றனவோ அந்த சப்தஸ்பரிசாதிகள் அனர்த்தங்களாக விருக்கின்றன. அவைகளில் ஆஸக்தி (விருப்பம்) யுள்ள பூதாத்துமாவானவன் பரமபதத்தை நினைக்கிறதில்லை. தபசினுலே சத்துவகுண மடையப்படுகிறது. சத்துவத்தினுலே சுத்தமான மனது அடையப்படுகிறது. மனதினுலே ஆத்மா அடையப்படுகிறுன். ஆத்மாவை அடைவதினுல் (சமுசாரத்திலிருந்து) நிவிருத்தி யடைகிறுன். விறகில்லாத அக்கினியானது தன் உற்பத்தி காரணத்தில் லயமடைவதுபோல விருத்திக்ஷயத்தினுல் (பிரவிருத்திக்கு இடமற்றுபோனுல்) சித்தமானது தன்னுடைய உற்பத்திகாரணத்தில் (பிரகிருதியில்) லயமடைகிறது. உபசாந்தி (இந்திரிய வியாபாரங்களை யடக்குதல்) யையும் சத்தியத்தையும் அடைந்தவும் இந்திரியார்த்தங்களில் (சப்தாதிவிஷயங்களில்) ஞானமில்லாதவும் மனதிற்குக் கருமவசத்தினுல் சம்பவிக்கப்பட்டவைகள் பொய்யானவைகள். சித்தமேசமுசாரம். அதை முயற்சியினுல் சுத்தம் செய்யவேண்டும். எந்தவிதமான சித்தமுடையவனுகவிருக்கிறுனே அப்படிப்பட்ட சுவரூபமாகவாகிறுன். இது பழமையான இரகசியம். சித்தம் தெளிந்தால் பாசுப கருமங்களை நசிக்கச் செய்கிறுன். மனத் தெளிவுள்ளவன் தனக்குள்ளேயே யிருந்து நாசமற்றதாகிய சுகத்தை யடைகிறுன். ஜந்துவுக்கு எதிர்ப்படுகிற விஷ

* இதுவரையில் சொல்லிவந்த சங்கதிகள் மைத்திராயண்ணியோப நிஷத்திலும் காண்க.

யத்தில் சித்தமானது ஒட்டிப்போகிறதுபோல பிர்ம்மத்தினிடத்தில் ஒட்டினால் எவன்தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான். புத்தியின் நடனத்திற்கு (கூத்தாட்டத்திற்கு) சாக்ஷியாயும் அதி பிரீதிக்கு விஷயராயும் மனோவாக்குக் கெட்டாதவராயும் ஆதியந்தமற்றவராயும் சத்தாமாத்திரப் பிரகாசமே முக்கிய சுவபாவமாயுடையவராயும் தியானத்திற் கெட்டாதவராயும் ஹேயம் = விடத்தகாதவராயும் உபாதேயம் = கிரகிக்கத்தகாதவராயும் சாமான்னிய விசேஷங்கள் (தனக்குச் சமானமான அல்லது மேலானவஸ்து) அற்றவராயும் ஸ்திரமானவராயும் நிலையான பெருந்தன்மை யுடையவராயும் தேஜஸல்லாதவராயும் இருளல்லாதவராயும் எங்கும் பரவினவராயும் மாறுதலற்றவராயும் நிராபாஸராயும் (உபாதிஅற்றவர்) மோக்ஷசுவரூபமான ஞானமாயு மிருக்கிற பரமேசுவரனை ஹிருதய கமலமத்தியில் தியானம் செய்யவேண்டியது. நித்தியனையும் சுத்தனையும் ஞானமுள்ள முக்த சுவபாவனையும் சத்தியனையும் சூக்ஷ்மனையும் எங்கும் பரவினவனையும் இரண்டாவதற்றவனையும் ஆநந்த சமுத்திரனையும் பிரத்தியகாத்துமாவைக் காட்டிலும் சிரேஷ்டனையுமிருக்கிற பரமாத்துமாயாரோ அவன்தான் நான், இதில் சந்தேகமில்லை. என்னுடைய ஹிருதயத்தில் என் சொந்தமான ஆனந்தத்தை ஆசிரயித்தவனையும் ஆசைஎன்கிற பிசாசை அவமானம் செய்தவனையும் ஜகத்தை இந்திரஜாலமாய்ப் பார்க்கிறவனையும் (ஒன்றிலும்) பற்றற்றவனையு மிருக்கிற என்னைப் பெந்தமெப்படித் தொடரும். வருணாசிரம ஆசாரத்துடன் கூடிய மூடர்கள் கருமானுசாரமாய்ப் பலனை யடைகிறார்கள். வருணாதி தருமங்களை விட்ட புருஷர்கள் சுவாநந்த திருப்தர்களா யிருக்கிறார்கள். வருணாசிரம சுவரூபமானது அவயவத்துடன் கூடினது, ஆதியந்தமுள்ளது, அதிகஷ்டமானது, ஆகையால் புத்திரன் முதலிய தேகங்களில் அபிமானமற்றவனாய் முடிவற்றிருக்கிற அதி உத்தமோத்தம சுகத்திலிருக்கவேண்டியது. (ச)

முதலத்தியாயம் முற்றிற்று.

---

## உ-வது அத்தியாயம்.

மேலும் பகவானான மைத்திரேயர் கைலாசத்திற்குப் பிறப்பட்டு அவடம்சென்று ஓ பகவானே! பரமதத்துவ ரகசியத்தைச் சொல்லுமென்று கேட்டார். மகாதேவர் சொன்னதாவது—தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. அதிலிருக்கிற ஜீவனானவன் சிவனே. அஞ்ஞானமாகிய நிர்மால்யத்தைத் தள்ளி (ஸோஹம்) "அவன் நான்" என்கிற பாவனையினாலே பூஜிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்ப்பதுதான் ஞானம். மனது விஷயத்தைவிட்டிருப்பதுதான் தியானம். மனதினுடைய அழுக்கைப் போக்குவதுதான் ஸ்நானம். இந்

திரியங்களை யடக்குவதுதான் சுத்தி. பிர்ம்மா மிருதத்தைப் பானம் செய்யவேண்டியது. தேகசம்ரக்ஷணார்த்தம் பிக்ஷைவாங்க வேண்டியது. ஒருவருமில்லாத தனியிடத்தில் இரண்டாவதனன்னியில் ஒரே வித முயற்சியை யுடையவனாய் வாசம்செய்யவேண்டியது. புத்திமானனவ னிப்படி ஆசரிக்கவேண்டியது. அப்படிச் செய்தால் முக்தி யடைகிறான். (க)

இந்தத் தேகமானது பிறப்பிறப்புள்ளது. தாய்தகப்பனுடைய மல சுவரூபமானது. சுகதுக்கத்திற் கிடமாகிய அசுத்தமானது. அதைத் தொட்டால், ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. (வாதபித்த சிலேஷ்மம் முதலிய) தாதுக்களால் கட்டப்பட்டது. மகாவியாதியை யுடையது. பாபத்திற் கிருப்பிடமானது. நிலையற்றது. விகாரமுள்ள ஆகாரத்தையும் அளவையுமுடையது. இதைத்தொட்டால் ஸநானம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஒன்பது துவாரங்களிலும் எல்லாகாலத்திலும் சுவபாவமாய் மலக்கசிவுள்ளது. துர்கந்த முடையது. துர்மலங்களுடன் கூடியது. இதைத்தொட்டால் ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. மாதாசூதகத்துடன் சம்பந்தமானது. சூதகத்தோடேயே பிறக்கிறது. மரணசூதகத்தோ டுண்டானது. இதைத்தொட்டால் ஸ்நானம் விதிக்கப்பட்டிருக்கிறது. "நான் என்னுடையது" என்பதே மலமூத்திரத்தினல் பூசியகந்தம். அதைக் கழுவிக்கொள்ளுவதுதான் சுத்த சௌசம். ஜலத்தினலும் மண்ணினலும் செய்துகொள்ளும் சௌசம் உலகவழக்கம். வாசனத்திரய (சாஸ்திரவாசனை, உலகவாசனை, தேகவாசனை) நாசமானது சித்தசுத்திகரமான சௌசம். ஞானவைராக்கியமாகிற மண் ஜலங்களினலே செய்துகொள்ளும் சுத்திதான் சௌசமென்று சொல்லப்படுகிறது. (உ)

அத்துவைதபாவனைதான் (சந்நியாசிதருமமாகிய) பிக்ஷையெடுத்துண்ணல். துவைதபாவனை (பிர்ம்மத்தைவிட ஜீவன்வேறே பிரபஞ்சம் வேறே என்கிற எண்ணம்) புஜிக்கத்தக்கதல்ல (செய்யக்கூடாதென்பது கருத்து). பிக்ஷு=சந்நியாசியானவனுக்கு பிக்ஷையானது சாஸ்திரத்தினலேயும் குருவினலேயும் சொல்லப்பட்டிருக்கிறபடிக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. வித்துவானனவன் சந்நியாசம் செய்துகொண்டபிறகு சுவதேசத்தைத் தானக்வே விட்டுவிட்டு சிறைச்சாலையிலிருந்து விடுதலையடைந்த திருடனைப்போல் தூரத்தில்போய் வசிக்க வேண்டியது. அகங்காரமாகிற பிள்ளையையும் திரவியமாகிற சகோதரனையும் மோகமாகிற வீட்டையும் ஆசையாகிற பெண்சாதியையும் எப்போதுவிடுகிறானே அப்போது முக்தனென்பதில் சந்தேகமில்லை. மோகசுவரூபமான தாயார் இறந்துபோனள். ஞானசுவரூபமாகிற பிள்ளைபிறந்தான். இப்படி இருவகையான சூதகம் சம்பவித்திருக்கையில் சந்தியை (காலை மாலையில் செய்யவேண்டி சந்தியாவந்தனதி நித்திய

கருமத்தை) எப்படி உபாசிப்போம். பிரகாசித்துக்கொண்டிருக்கிற ஹிருதயாகாசத்தில் சித்தாகிற (பரமாத்துமாவாகிற) சூரியன் எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கிறன். அவன் உதயமாகிறதுமில்லை அஸ்தமானமாகிறதுமில்லை. அப்படியிருக்க எப்படி சந்தியை (காலை மாலைகளின் சந்தியாவந்தனுதிகளை) உபாசிப்போம். குருவாக்கியத்தினுல் இரண்டாவதில்லாத ஒன்றே யுள்ளதென்று எது நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அதுதான் ஏகாந்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது. மடமாவது வநாந்தரமாவது ஏகாந்தமல்ல. சம்சயமில்லாதவர்களுக்குத்தான் முக்தியுண்டு. சம்சயமுள்ளவர்களுக்கு ஜன்ம ஜன்மத்தின் முடிவிலும் (எத்தனை ஜன்மங்களானுலும்) முக்தியில்லை. ஆகையால் விசுவாசம் வைக்கவேண்டியது. கருமத்தை விட்டதினுலேயாவது (ப்ரைஷோச்சாரணம்) பிரைஷோச்சாரண (சந்நியாசம் வாங்கிகொள்ளுகிறபோது அப்படி வாங்கிகொள்ளுகிறவனுல் சொல்லவேண்டிய மந்திரத்தின் பெயர்)த்தினுலேயாவது சந்நியாச மாகமாட்டாது. (ஸம்யோ) இரண்டு சந்திகளிலும் ஜீவபரமாத்துமாக்களுடைய சேர்க்கை சந்நியாசமென்று சொல்லப்படுகிறது. சகலமான ஈஷண (புத்திரேஷண வித்தேஷண தாரேஷண) முதலானவைகளில் வாந்திசெய்த அன்னத்தில்போல் எவனுக்கு அருசியுண்டாகிறதோ அந்தத் தேகாபிமான மற்றவனுக்குத்தான் சந்நியாசத்தில் அதிகாரம் (யோக்கியனுயிருக்கிறன்). சகல்விஷயங்களிலும் மனசில் வைராக்கிய முண்டானபோதே வித்துவானுனவன் சந்நியாசம் வாங்கிக்கொள்ளலாம். மற்றவிதத்திலானுல் பதிதனு விடுவான். (பணம்முதலான) திரவ்வியத்திற்காகவும் அந்நவஸ்திரத்திற்காகவும் கீர்த்திக்காகவும் எவன் சந்நியாசம் செய்துகொள்ளுகிறுனே அவனிரண்டும் கெட்டவன் (சந்நியாசத்தின் பிரயோஜனமாவது இல்லறத்தின் பிரயோஜனமாவது இல்லாதவன்). அவன் முக்திஅடைய பாத்திரனல்ல. தத்துவ (ஆத்ம) சிந்தை உத்தமம். சாஸ்திரசிந்தை மத்தியமம். மந்திரசிந்தை அதமம். தீர்த்தயாத்திரையில் சிந்தை அதமாதமம். (இந்தச்சங்கதி சந்நியாசிக்கு சொன்னதேயன்றி மற்றவர்களுக்கல்ல). மரக்கிளைகளிலிருக்கிற பழங்களுடைய பிரதிபிம்பங்களை தண்ணீரிற் கண்டு அதைத்தின்று ருசிபார்த்து சந்தோஷப்படுகிறவனைப்போல அனுபவமில்லாத மூடன் பிர்ம்மத்தினிடத்தில் வீணுய் சந்தோஷப்படுகிறுன் (பிர்ம்மசுவரூபம் அனுபவத்தினுல் அறியத்தக்கதேயன்றி சாஸ்திராதிகளினுல் தெரிவது மட்டும் பிரயோஜனமில்லை என்பதும், கண்ணுல் பார்க்கப்படுகிற எதுவும் பிர்ம்மமல்லவென்பதும் தாத்பரியம்). வைராக்கியத்தை யுண்டுபண்ணுகிற அந்தரங்கபிக்ஷை (அத்துவைதபாவனை) யையும் சிரத்தையாகிற களத்திரத்தையும் ஞானமாகிற புத்திரனையும் எவன் கைவிடாமலிருக்கிறுனே அவன்முக்தன். பணத்தினுல் பெரியவன் வயதினுல்

பெரியவன் வித்தையினல் பெரியவன் இவர்கள் ஞானத்தினல் பெரியவனெவனே அவனுக்கு வேலைக்காரர்களாயும் (அவனுடைய) சிஷியனுக்கு வேலைக்காரர்களாயு மிருக்கிருர்கள். என்னுடைய மாயையினுலே மோகிக்கப்பட்ட மனதையுடையவர்கள் வித்வான்களாயிருந்தாலும் பரிபூர்ணமாயிருக்கிற ஆத்மாவாகிய என்னை அடையாமல், வெந்துபோனவயிற்றை நிறைக்கிறதற்காக மாத்திரம் காக்கைபோல் அலைகிருர்கள். மோக்ஷயிச்சை யுள்ளவனுக்குப் பாஷாணம், உலோகம், மணி, மண், இந்தரூபமான விக்கிரங்களிலே செய்யும் பூஜையானது புனர் ஜனனத்தையும் போகத்தையும் கொடுக்கத்தக்கது. ஆகையால் யதியானவன் மறுபடி ஜனனத்தையடையாம லிருக்கும் பொருட்டுத் தன்னுடைய ஹிருதயார்ச்சனையையே செய்யவேண்டியது. வெளிஅர்ச்சனையைத் தள்ளிவிடவேண்டியது. (இப்படிப்பட்டவன்) சமுத்திரத்திற்குள் பூர்ணமாயிருக்கிற குடத்தைப்போல உள்ளும் பூர்ணமாயும் வெளியும் பூர்ணமாயுமிருக்கிருன். ஆகாசத்தில் சூனியமாயிருக்கிற குடத்தைப்போல் உள்ளும் சூனியமாயும் வெளியும் சூனியமாயுமிருக்கிருன். அறிகிறவனுயும் அறியப்படுகிறவனுயு மாகாதே (என்றல் ஜீவாத்மாவேறே பரமாத்துமா வேறே என்று நினைக்காதே என்பது கருத்து). சகலபாவனை (தோற்றம்) யையும் தள்ளி மிச்சமான தெதுவோ அந்தப் பிரம்மசுவரூபமாயாகக்கடவாய். பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளிவிட்டு (ஏகமேவாத்விதீயம்) = விளங்குகிற சிரேஷ்டமான பிர்ம்மமாகிய, ஆத்மாவையேபஜீ. சாந்தமடைந்திருக்கிற சகல சங்கற்பமுடைய தாயும் (ஒருவித பிரயத்தினமு மில்லாததாயும்) கல்லைப்போலிருக்கிறதாயுமுள்ள நிலமை எதுவோ அதுதான் சிரேஷ்டமான சுவரூபத்தினிருப்பு என்பதே.

இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ந-வது. அத்தியாயம்.

நானுயு மிருக்கிறேன். அந்நியனுயு மிருக்கிறேன். பிர்ம்மமாயு மிருக்கிறேன். உற்பத்தி காரணனுயு மிருக்கிறேன். சகலலோக குருவாயு மிருக்கிறேன். சகல லோகமாயு மிருக்கிறேன். அவனுகவு மிருக்கிறேன். நானுகவுமிருக்கிறேன். ஸித்தனுயு மிருக்கிறேன். சுத்தனுயு மிருக்கிறேன். உத்தமனுயு மிருக்கிறேன். நானிருக்கிறேன். எப்போதும் அவனுகவிருக்கிறேன். நித்தியனுகவு மிருக்கிறேன். நிர்மலனுயிருக்கிறேன். விஞ்ஞானமா யிருக்கிறேன். விசேஷனு யிருக்கிறேன். சந்திரனுயிருக்கிறேன். சகலமுமா யிருக்கிறேன். மானுவ மானமற்றவனு யிருக்கிறேன். (சத்துவாதி) குணமற்றவனு யிருக்கிறேன். மங்களாகரமாயிருக்கிறேன். துவைதாத்துவைத மில்லாதவனு யிருக்கிறேன்.

இருமை (த்வம்) அற்றவனாயிருக்கிறேன். அவனாக (பிர்ம்மமாக) இருக்கிறேன். (பாவ) பாவ (அபாவ) அபாவம் (இருக்கிறது இல்லாதது) இல்லாதவனா யிருக்கிறேன். பாஷையற்றவனா யிருக்கிறேன். விளங்கிக் கொண் டிருக்கிறேன். சூனியா சூனிய மகிமையை யுடையவனா யிருக்கிறேன். சோபனா சோபனனாயுமிருக்கிறேன். சுபனாயு மிருக்கிறேன். துக்கமில்லாதவனா யிருக்கிறேன். (சைதந்யம்) சைதன்னியமா (அறிவாய் அல்லது ஆத்மாவாய் அல்லது ஏவப்பட்டவனாய் அல்லது சாக்ஷியாய்) யிருக்கிறேன். சமமா யிருக்கிறேன். இணை யுள்ளவனாயும் இணையற்றவனாயு மிருக்கிறேன். நித்தியனாயும் சுத்தனாயும் சதாசிவனாயு மிருக்கிறேன். சருவனாயு மிருக்கிறேன். சருவமல்லாதவனாயு மிருக்கிறேன். சாத்துவிகனாயு மிருக்கிறேன். எப்போது மிருக்கிறேன். ஒன்று என்கிற கணக்கற்றவனா யிருக்கிறேன். இரண்டென்கிற கணக்கற்றவனாயிருக்கிறேன். சத் அசத் என்கிற பேதமற்றவனா யிருக்கிறேன். சங்கற்ப மற்றவனாயிருக்கிறேன். பலவென்கிற பேதமற்றவனா யிருக்கிறேன். அகண்டானந்த சுவரூபியா யிருக்கிறேன். நானில்லாதவனாயு மிருக்கிறேன். அந்நியனுமல்லாதவனாயு மிருக்கிறேன். தேகாதிகளற்றவனாயு மிருக்கிறேன். ஆசிரயனாயு மிருக்கிறேன். ஆசிரயமற்றவனாயு மிருக்கிறேன். ஆதாரமற்றவனாயு மிருக்கிறேன். பெந்த மோக்ஷமற்றவனாயு மிருக்கிறேன். சுத்தமான பிர்ம்மமாயிருக்கிறேன். அவன் நானாகவிருக்கிறேன். சித்தம் முதலியவை யற்றவனா யிருக்கிறேன். உத்தமனா யிருக்கிறேன். உத்தமோத்தமனாயு மிருக்கிறேன். எப்போதும் விசார ரூபனாயு மிருக்கிறேன். விசாரமற்றவனாயு மிருக்கிறேன். அவன் நானாகவிருக்கிறேன். அகார உகார ரூபனாயிருக்கிறேன். மகார ரூபனாயு மிருக்கிறேன். (சகலத்திற்கும்) மூந்தினவனா யிருக்கிறேன். தியானிக்கிறவன், தியானம் இவைகளற்றவனா யிருக்கிறேன். தியானிக்கப்படத் தக்கவனல்லாதவனா யிருக்கிறேன். அவன் நானாக விருக்கிறேன். சகலத்திலும் பூர்ண சுவரூபமா யிருக்கிறேன். சச்சிதானந்த லக்ஷணமுடையவனா யிருக்கிறேன். சருவதீர்த்த சுவரூபியாயிருக்கிறேன். பரமாத்துமாவாயும் சிவனாயுமிருக்கிறேன். இலக்ஷியா லக்ஷியமற்றவனா யிருக்கிறேன் (குறிப்பிட்டு சொல்லத் தகுந்தவனுமல்ல, குறிப்பிட்டு சொல்லத் தகாதவனுமல்ல). நாசமற்ற பிர்ம்மமாயிருக்கிறேன். அளக்கிறவனற்றவனாயு மிருக்கிறேன். அளவற்றவனாயு மிருக்கிறேன். அளக்கப்படுகிறவ னல்லாதவனாயுமிருக்கிறேன். மங்களகரனா யிருக்கிறேன். நான் ஜகத்தல்ல. சகலத்தையும் பார்க்கிறவனா யிருக்கிறேன், கண்முதலியவை யில்லாதவன். எங்கும் பரவினவனா யிருக்கிறேன். ஞானியாயிருக்கிறேன். பிரசன்ன (சாந்த, அல்லது அமரிக்கையுள்ள) னாயிருக்கிறேன். (சகலபாபத்தை) ஹரிக்கிறவன் (போக்கடிக்கிறவன்) ஆயிருக்கிறேன். சகலகாரியத்தையும் செய்கிறவனாயு

மிருக்கிறேன். சகலமான இந்திரிய மற்றவனுயு மிருக்கிறேன். சகல வேதாந்தத்தினுலே (ஆத்ம சுவரூபத்தினுலெ) திருப்தியடைந்தவனு யிருக்கிறேன். எப்போதும் சுலபனுயிருக்கிறேன். சந்தோஷ முள்ள வனென்றும் சந்தோஷ மில்லாதவனென்றும் பெயரை யுடையவனு யிருக்கிறேன். சகல மௌனத்திற்கு பலனு யிருக்கிறேன். எப்போதும் சின்மாத்திர சுவரூபனு யிருக்கிறேன். எப்போதும் சத்தாகிற சின்மய மா யிருக்கிறேன். யா்தொன்றல்லாதவனு யிருக்கிறேன். அற்பங்கூட யில்லாதவ னல்லாதவனு யிருக்கிறேன் (அற்பவஸ்துவிலும் அற்ப காலத்திலு மில்லாதவனல்லவென்பது கருத்து). அக்கியான மில்லாத தவனுயிருக்கிறேன். ஹிருதய கமலமத்தியிலிருக்கிறேன். ஆறு*விகா ரமற்றவனுயிருக்கிறேன். † ஆறுகோசங்களற்றவனுயிருக்கிறேன் ஆறு ‡ சத்துருக்களற்றவனு யிருக்கிறேன். உள்ளுக்குள்ளே யிருக்கிறேன். தேசகாலமற்றவனுயிருக்கிறேன். திக்குகளை வஸ்திரமாயுடைய சுக சுவரூபி. பெந்தமற்றவனுயும் விடுபட்டனுயு மிருக்கிறேன். இல்லை என்பதில்லாதவன். அகண்டாகார ரூபமாயிருக்கிறேன். அகண்டா காரமா யிருக்கிறேன். பிரபஞ்சத்திலிருந்து விடுபட்ட சித்தமுடை யவனுயிருக்கிறேன். பிரபஞ்ச மற்றவனுயிருக்கிறேன். சகலப்பிரகாச ரூபனுயிருக்கிறேன். சின்மாத்திர ஜோதியாயிருக்கிறேன். முக்கால த்திலிருந்து விடுபட்டவனுயிருக்கிறேன். காமாதிகளற்றவனு யிருக் கிறேன். சரீரமில்லாதவன். சரீரத்தையுடையவ னல்லாதவன். குணமற் றவன். ஒன்ருனவன். முக்தியற்றவன். முக்தனுயிருக்கிறேன். எப் போதும் மோக்ஷமற்றவனு யிருக்கிறேன். சத்தியா சத்தியாதிக ளற் றவனு யிருக்கிறேன். எப்போதும் சத்தைக்காட்டிலும் வேறல்லா தவன். போகவேண்டிய தேசமற்றவன். போகுதல் முதலியன வில் லாதவன். எப்போதும் ஒரேரூபமுள்ளவன். சாந்தனு யிருக்கிறேன். புருஷோத்தமனு யிருக்கிறேன். இப்படி எவனுக்கு சுவானுபோகம் வந்திருக்கிறதோ அவன்தான் நான் சந்தேகமில்லை. (இதை) ஒருதட வையாவது எவன் கேட்கிருனே அவன் பிர்ம்மமேயாகிருன். அவன் பிர்ம்மமே யாகிருன், என்று உபநிஷத்.

மூன்ருவது அத்தியாயம் முற்றிற்று.

ஓம் தத்ஸத்.

மைத்திரேயோபநிஷத் முற்றிற்று.

---

* பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகுதல், நசித்தல் இவைகள் ஆறு விகாரங்கள். கருப்போப நிஷத்தும் வராகோபநிஷத் முதலத்தியாமும் பார்க்க.

† தோல், உதிரம், மாம்சம், கொழுப்பு, ஊன், எலும்பு இவைகள் ஆறுகோசங் கள் வராகோபநிஷத் முதலத்தியாயம் பார்க்க.

‡ காமக்குரோத லோபமோகமத மாச்சரியம் இவைகளாறு சத்துருக்கள். வரா கோபநிஷத் உ-வது அத்தியாயம் பார்க்க.

ஓம் பரஸ்மை ப்ரஹ்மணே நம:.

ஹரி: ஓம்.

யஜுர்வேதத்தில்

# ஸர்வஸாரோபநிஷத்.

(ஸஹநாவவது சாந்தி:.)

(இந்த உபநிஷத்தின் துடக்கத்தில் கேள்விகளெல்லாம் துடர்ந்து கேட்டுவிட்டபிறகு ஒவ்வொரு கேள்விக்கும் உத்தரம் சொல்லியிருந்தபோதிலும் இந்த மொழிபெயர்ப்பில் கேள்விக்கடுத்து அதின் உத்தரமும் எழுதப்பட்டிருக்கிறது).

க. பெந்தம் எப்படிப்பட்டது?

ஆத்மாவானவன் ஆத்மா வல்லாததாகிய தேக முதலியவைகளைத் தானென் றெண்ணிக்கொண்டு அவைகளை ஆத்மாவென்று அபிமானிக்கிறதினால் அந்த அபிமானம் ஆத்மாவுக்குப் பெந்தமாகிறது.

உ. மோக்ஷம் எப்படிப்பட்டது?

அதின் (பெந்தத்தின்) நிவர்த்தியே மோக்ஷமெனப்படுகிறது.

ந. அவித்தை யாது?

(தேகமே ஆத்மாவென்கிற) அபிமானத்தை எது வுண்டுபண்ணுகிறதோ அதுதான் அவித்தை (அக்ஞானம்).

ச. வித்தை யாது?

அந்த அபிமான மெதினால் நிவர்த்தியாகிறதோ அதுதான் வித்தை (ஞானம்).

ரு. ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி துரீயமென்பன யாவை?

சூரியன் முதலிய அபிமானி தேவதைகளினால் அநுக்கிரகிக்கப்பட்டனவும் (குறைவன்றி) பூர்ணமாயுள்ளனவுமாகிய மனது முதலிய பதினான்கு (காது முதலிய ஞானேந்திரியங்கள் - ரு. வாய் முதலிய கருமேந்திரியங்கள் - ரு. மனது புத்தி சித்தம் அகங்காரங்கள் - ச.) கரணங்களினாலே ஸ்தூலங்களான சப்தாதி விஷயங்களை எப்போது கிரகிக்கிறானோ அப்போது ஜாகரணம் (ஜாக்கிருதவஸ்தையென்று சொல்லப்படுகிறது).

சப்தாதிவிஷயங்க ளில்லாவிட்டாலும் தாத்காலத்தி லுண்டாகப்பட்ட வாசனாமயமான சப்தாதிகளை ஜாக்கிரதவஸ்தையின் வாசனையுடனிருக்கிற பதினான்கு கரணங்களினால் எப்போது கிரகிக்கிறானோ அப்போது சுவப்னம் (சுவப்னாவஸ்தையென்று சொல்லப்படுகிறது).

பதினான்கு கரணங்களும் பிரவிருத்தியற்றிருப்பது னாலேயும் விசேஷ அனுபவஞான மில்லாதிருப்பதினாலேயும் சப்தாதி விஷயங்களை எப்போது அறிகிறதில்லையோ அப்போது ஆத்மாவுக்கு சுஷுப்தி (சுஷுப்தியவஸ்தையெனப் படுகிறது).

மேற்கண்ட மூன்று அவஸ்தைகளுடைய பாவாபாவங்களுக்கு (இருப்பு, இல்லாமைக்கு) சாக்ஷியாயும் பாவாபாவங்கள் (சுபாவமாய்) தனக்கில்லாமலு மிருக்கிற நிரந்தர (இடைவிடாத அல்லது அகண்ட) சைதந்நியமாத்திரமாக விருக்கும் நிலைமை யெதுவோ அது துரீயம் (துரியாவஸ்தை என்று சொல்லப்படுகிறது). அச்சைதந்நிய மெது வென்றால், மூன்று அவஸ்தைகளுடன் சம்பந்தப்பட்டதாயும் மூன்றவஸ்தைகளினு லாகிக்கத்தக்கதாயும் மூன்று அவஸ்தைகளற்றதாயும் சுத்தமாயுமிருக்கிற தெதுவோ அதுதான்.

௬. அந்நமய, பிராணமய, மனோமய, விக்ஞாநமய, ஆநந்தமய கோசங்க ளெவை?

அந்நத்தினாலுண்டாகும் கார்யங்களுடைய கூட்டம் அந்நமய கோசம்.

பிராணன் முதலிய பத்து வாயுக்கள் அந்நமயகோசத்தி லெப்போது சஞ்சரிக்கின்றனவோ அப்போது பிராணமயகோசம் எனப்படுகிறது.

அவ்விரண்டு கோசங்களுடன்கூடிய ஆத்மாவானவன் மனது முதலிய பதினான்கு கரணங்களினாலே சப்தம் முதலிய விஷய சங்கற்பாதி தருமங்களைச் செய்கிறபோது மனோமயகோச மெனப்படுகிறது.

இம்மூன்று கோசங்களுடன்கூடிய அந்தக்கரணத்தில் அவைகளிலுள்ள விசேஷத்தைப்பற்றி தியானமனனாதி விருத்தி எப்போதுண்டாகிறதோ அப்போது விக்ஞானமய கோசமெனப்படுகிறது. அக்ஞானத்துட னிருக்கிற (மேல்கண்ட) நான்கு கோசங்களுடன் கூடியிருக்கையில், ஆலம்விதையில் ஆலமரம் (அடங்கியிருக்கிறது) போல சுவரூபசுகத்தில் தன்னுடைய காரண ஞானமடங்கி யிருக்கிறபோது ஆநந்தமய கோசமெனப் படுகிறது.

கோசங்களாகிற உபாதியுடன் கூடியிருக்கிற ஆத்மா கோசமென்று உபசாரமாய்ச் சொல்லப்படுகின்றான்.

௭. கருத்தா, ஜீவன், பஞ்சவர்கங்கள், க்ஷேத்திரக்ஞன், சாக்ஷி, கூடஸ்தன், அந்தர்யாமி, எப்படி?

சுகதுக்கபுத்தியை யனுசரித்து அதநினிச்சையினாலே தேகாந்தக் கிருதிமான் (அதாவது தேகாந்தக் காணத்தையுடையவன்) கருத்தா. சுகபுத்தி யென்றால், இஷ்டமென்கிற (மனோ) விருத்திதான். துக்கபுத்தி யென்றால், அநிஷ்டமென்கிற (மனோ) விருத்திதான். இந்தச் சுகதுக்கங்களுக்கு ஏதுவெதென்றால், சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள்தான்.

புண்ணியபாப கருமானுசாரமா யடைந்திருக்கிறதேகத்தைத் தா னடையாத தேகம்போல எண்ணிக்கொண் டிருக்கிற பிராணியாகிய அத்தியாஸி (தேகமே ஆத்மாவென் றெண்ணுகிறவன்) தான் ஜீவன்.

மனது முதலியன (மனது புத்தி சித்தம் அகங்காரம்), பிராணன் முதலியன (பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் என் கிறவாயுக்கள்), சத்துவம் முதலியன (சத்வரஜஸ்தமோ குணங்கள்), பூதாதிகள் (பிரதிவி அப்பு அக்கினி வாயு ஆகாசம்) முதலியன, புண் ணிய பாபங்கள், இவைகள்தான் பஞ்சவர்க்கமெனப் படுகின்றன.

பஞ்சவர்க தருமியாக ஆயிருக்கிறவும் ஆத்ம ஞானமன்றியில் நசி க்காதவும் ஆத்ம சந்நிதியினாலே நித்தியமானதாகக் காணப்படுகிறவு மான ஆத்மோபாதியாயிருக்கிற மூலாவித்தை யெதுவோ அதுதான லிங்கசரீர பீஜம். அதுதான் (ஹ்ருதயக்ரந்தி) ஹிருதயகிரந்தி என்றும் சொல்லப் படுகிறது. அதில் பிரதிபலித்துப் பிரகாசித்துக்கொண்டி ருக்கிற சைதன்னியமானது க்ஷேத்திரக்ஞனெனப்படுகிறான்.

(ஜ்ஞாதா) அறிகிறவன் (ஜ்ஞானம்) அறிவு (ஜ்ஞேயம்) அறியப்படுவது இவை முதலியவைகளிலெ ஆவிர்பாவம் (தோன்றல்) திரோபாவம் (மறைதல்) களையறிகிறவனும் தனக்கு ஆவிர்பாவம் திரோபவங்க ளில்லாதவனும் சுவப்பிரகாச முள்ளவனுமிருக்கிற சேதனனே சாக்ஷி எனப் படுகிறான்.

பிரும்மா முதல் எறும்புவரையுள்ள சகலப் பிராணிகளுடைய புத் திகளிலெ அவிசிஷ்டமாய் (ஏற்றதாழ்த்தியன்றி) காணப்படுகிறவனு யும் சகல (பிராணி) புத்தி சாக்ஷிக்கிருப்பிடமான ஆத்மாவாயுமிருந்து கொண்டு விளங்குகிறவன் எவனோ அவன்தான் கூடஸ்தன்.

(தன்னுடன்) கூடியிருக்கிற கூடஸ்தன் முதலியவர்களுடன் பே தங்களுடைய சுவரூபத்தை யறிகிற விஷயத்தில் ஏதுவாய் எல்லா க்ஷேத்திர (தேகம்) ங்களிலும் மணிகளில் நூல்போல் தொடர்ச்சியாய் உள்ளே யிருந்துகொண்டு நியாமகனாக விளங்குகிற ஆத்மா எவனோ அவன்தான் அந்தர்யாமி எனப்படுகிறான்.

அ. பிரத்திய காத்மாயார்?

சத்திய ஞானானந்தானந்த மயமானது, எவ்வித சரீர உபாதியுமற் றது, கடக மகுடாதி உபாதியில்லாத சுவர்ணக் கட்டிபோ லுள்ளது, ஞானக்கட்டி, சித்சுபாவம், ஆத்மசைதன்னியம், பிரம்மம், இப்படி யாய் எது விளங்குகிறதோ அது, அவித்தியோபாதிக் குள்பட்டதும் துவம்பதத்தினால் சொல்லப்படுவதுமான பிரத்தியகாத்மா.

கூ. பரமாத்துமாயார்?

சத்தியம் ஞானம் அநந்தம் ஆநந்தம் சருவக்ஞத்துவம் முதலிய வைகளுடன் கூடினதாயும் மாயோபாதியுள்ளதாயும் தத்பதத்தினலே சொல்லப்படுகிறதாயு மிருக்கிறதெதுவோ அதுதான் பரமாத்துமா.

கo. பிர்ம்ம மெப்படிப்பட்டது?

எவ்வித உபாதியுமற்றது, நிர்விசேஷ சின்மாத்திரம், சத்தானது, இரண்டாவதற்றது, ஆநந்தமானது, மாயையற்றது, எதுவோ அதுதான் பிர்ம்மம். அதல்லவா உபாதியோடிருககிற துவம்பதார்த்தத்தைக் காட்டிலும் உபாதி பேதத்தோடிருக்கிற தத்பதார்த்தத்தைக்காட்டிலும் விலக்ஷணமாயும் அபேதமாயும் அதிஷ்டானம்போல் காணப்படுகிறதாயுமிருக்கிற சுத்தம் பாரமார்த்திகம் சத்தாமாத்திரம் அவிநாசி.

(மேலாகச் சொல்லப்பட்டிருக்கிற) "சத்தியம்" எதுவென்றலோ, வேதங்களினல் குறிக்கப்படும் லக்ஷியமானசத்துதான் சத்தியம்.

அசத்தென்று எதைச்சொல்லக் கூடாதோ, அதுதான் சத்தியம்.

முக்காலத்திலும் பாதிக்கப்படாததெதுவோ அதுசத்தியம்.

முக்காலத்திலும் தொடர்ந்தேத்தியாயிருப்பது சத்தியம்.

எதிருக்கிறதோ அது சத்தியம்.

இரண்டாவதில்லாம லொன்றாகவே யிருப்பது சத்தியம்.

ஸஜாதியவிஜாதிய பேதமற்றது சத்தியம்.

சகல கற்பனைக்கு அதிஷ்டானமாய் (இருப்பிடமாய்) இருப்பதானது சத்தியம்.

(மேலாகச் சொல்லப்பட்டிருக்கிற) அவிநாசி எதுவென்றால், தேசகால வஸ்துநிமித்தம் முதலியன நாசமடைந்தாலும் எது நாசமடைகிறதில்லையோ அதுதான்.

(மேலாகச்சொன்ன) ஞானமென்பதெதுவென்றல்—

சுவப்பிரகாசம் ஞானம். சகலத்தையும் பிரகாசிப்பிக்கிறது ஞானம்.

ஆவரணமற்ற சின்மாத்திரம் ஞானம்.

அநாதியாயும் அநந்தமாயும் நிரந்தரமாயும் விருத்தியற்றதாயும் விருத்திக்குச் சாக்ஷியாயு மிருக்கிற சைதன்னியமே ஞானம்.

(மேலாகச்சொன்ன) அநந்தமெதுவென்றல்—

உற்பத்தி நாசமற்றது அநந்தம். ஷட்பாவ விகாரமற்றது அநந்தம். உபாதியற்றது அநந்தம். மண்விகாரங்களில் மண்போலவும் சுவர்ண விகாரங்களில் சுவர்ணம் போலவும் நூல் விகாரங்களில் நூல் போலவும் அவ்வியக்தம் முதலிய சிருஷ்டி பிரபஞ்சங்களில் வியாபித்து பூர்ணமாயும் நாசமற்றதாயுமிருக்கும் சைதன்னியமே அநந்தம்.

(மேலாகச்சொன்ன) ஆநந்தமென்பதெதுவென்றால், ஜலங்களுக்குச் சமுத்திரம்போல சுக்ரூபமான சேதனங்களுக்கு ஆதாரமாயும் நித்திய சுத்தாகண்டாத்துவைத சிதாநந்த ஏகரஸமாயுமுள்ளதெதுவோ அதுதான் ஆநந்தம்.

கக. பதார்த்தங்கள் எத்தினைவிதம்?

ஸத் அஸத் மித்தையென மூவகைப்படும்.

ஸத்எது? பிர்ம்மம்.

அஸத்எது? துச்சம் (இல்லாதது).

மித்தை எது? இல்லாத பிரபஞ்சத்தைப் பிர்ம்மத்தில் ஆரோபிப்பது.

(மேலாகச்சொன்ன) ஜ்ஞேயம் = அறியத்தகுந்தது எதென்றால், ஆத்மாவாகிய பிர்ம்மமே.

(மேலாகச்சொன்ன) பிர்ம்மஞான மென்பது என்ன வென்றால், அநாத்துமாவான தேகாதிகளை மூலத்தோடு நிவர்த்தித்துக்கொண்டு சத்தான பிர்ம்மத்தில் லயமடைவதுதான். (இந்த) அநாத்துமாவென்பதெதென்றால், ஜீவனுள்பட ஆகாசம்முதலிய பிரபஞ்சம்தான்.

கஉ. மாயையென்பது யாது?

அநாத்துமாவுக்கு மூலமானதெதுவோ அதுதான் மாயை. அவளானவள் ஆகாசத்தில் மேகம் முதலியவைபோல் பிர்ம்மத்தினிடத்தில் காணப்படுகிறாள். அந்த மாயையானவள் அநாதி. முடிவையுடையவள். பிரமாணப் பிரமாணங்களுக்குப் பொதுவானவள். இருக்கிறவளுமல்ல இல்லாதவளுமல்ல. அவ்விரண்டுங் கலந்தவளுமல்ல. வாக்குக்கெட்டாதவள். (பிர்ம்மமாகிய) அதிஷ்டானத்திலேயே யில்லாதவள். வித்துவான்களினால் வர்ணிக்கப்படுகிற ஏற்றக்குறைச்சலான பேதவிவரங்களையுடையவள். எவள் வாஸ்தவத்திலில்லையோ அவள்தான் மாயை. அவள் சுவரூபம் அக்ஞானம். அதேதான் மூலப்பிரகிருதி. (குணஸாம்யம்) குணசாம்யம் (சத்துவாதி குணங்கள் ஒன்றுடனொன்று கலவாமலிருக்கும் நிலைமை). அவித்தை. இவைமுதலிய அநேக ஆகாரமுள்ளவள். ஜகதாதாரமாய்ப் பரிணமித்திருக்கிறவள். அந்த மாயையை இவ்விதமாய்ப் பிர்ம்மஞானி அறிந்து அநுபவிக்கிறான்.

இந்தவிஷயத்தில் ச்லோகங்க ளிருக்கின்றன.

[illegible]

[illegible]

[illegible]

ஸதாஶிவ: । நாஹம் கர்தா நைவ போக்தா ப்ரக்ருதே: ஸாக்ஷிரூபக: ।

த்ஸாந்நித்யாத் ப்ரவர்த்தந்தே தேஹாத்யா அஜடா இவ | ஸ்திரோ நித்யஸ்ஸதா நந்த: ஶுத்தோ ஜ்ஞாநமயோ(அ)மல: | ஆத்மாஹம் ஸர்வபூதாநாம் விபுஸ்ஸாக்ஷீ நஸம்ஶய: | ப்ரஹ்மைவாஹம் ஸர்வவேதாந்தவேத்யம் நாஹம் வேத்யம் வ்யோமவாதாதிரூபம் | ரூபம் நாஹம் நாம நாஹம் நகர்ம ப்ரஹ்மைவாஹம் ஸச்சிதாநந்தரூபம் | நாஹம் தேஹோ ஜந்மம்ருத்யூ குதோ மே நாஹம் ப்ராண: க்ஷுத்பிபாஸே குதோ மே | நாஹம் சேதஶ் ஶோகமோஹௌ குதோ மே | நாஹம் கர்தா பந்தமோக்ஷௌ குதோ மே | இதிமுநிப்ய: ஶ்ருதிர்வாண்யுவாச | ஸத்யமிதிமுநிப்ய: ஶ்ருதிர்வாண்யுவாச | ஸத்யமித்யுபநிஷத்.—நான் தேகமு மல்ல. இந்திரியங்களு மல்ல. புத்தி மனசு ஈசனுமல்ல. அப்படியே அகங்காரமுமல்ல. பிராணனை யுடையவனு மல்ல; மனதையுடையவனு மல்ல. ஒளிபொருந்தியவன். நான் புத்தி முதலியவைகளுக்கு எப்போதும் சாக்ஷியா யிருப்பவன். நான் எக்காலத்திலும் நாசமில்லாதவன். சித்தாகவே யிருக்கிறவன். எப்போதும் மங்களகரமானவன். நான் கருத்தாவுமல்ல. போக்தாவுமல்ல. பிரகிருதிக்குச் சாக்ஷி சுவரூபமாகவே யிருக்கிறவன். என் சந்நிதி மாத்திரத்திலே தேகாதிகள் ஜடமல்லாதவைபோல் காரியங்களை நடத்துகின்றன. ஸ்திரமாயும் நித்தியமாயும் எப்போதும் ஆநந்தமாயும் சுத்தமாயும் ஞானசுவரூபியாயும் அழுக்கற்றவனாயு மிருப்பவன். நான் சர்வபூதங்களுக்கும் ஆத்மா. எங்கும் பரவியிருப்பவன். சாக்ஷியா யிருப்பவன். (இவைகளில்) சந்தேகமில்லை. சகல வேதாந்தங்களினாலேயும் அறியத்தகுந்த பிர்ம்மம் நானே. அறியக்கூடிய ஆகாசம் வாயு முதலிய ரூபம் நானல்ல. நான் ரூபமுமல்ல. பெயருமல்ல. கருமமுமல்ல. சச்சிதாநந்த சுவரூபியான பிர்ம்மம் நானே. நான் தேகமல்ல (ஆகையால்) எனக்குப் பிறப்பேது? நான் அகங்காரமல்ல (ஆகையால்) எனக்குப் பசி தாகமேது? நான் மனதல்ல (ஆகையால்) எனக்கு துக்க மோகங்களேது? நான் கருத்தாவல்ல (ஆகையால்) எனக்குப் பெந்த மோக்ஷங்களேது? என்று முனிகளுக்கு அதிருசியவாணி சொன்னாள். சத்தியமென்று முனிகளுக்கு அதிருசியவாணி சொன்னாள். இந்த உபநிஷத் சத்தியமே.

ஸர்வசாரோபநிஷத் முற்றிற்று.

---

ஹரிஃ ஓம்.

பரப்பிர்ம்மணேநமஃ

சுக்கிலயஜுர்வேதத்தில்

# நிராலம்போபநிஷத்.

(பூர்ணமதஃ சாந்திஃ.)

இந்த அக்ஞான ஜந்துக்களுக்கு சகலமான அரிஷ்ட (பீடை) நிவர்த்திக்காக எதெது அறியவேண்டுமோ அதை எல்லாம் கேள்வி உத்தரமாக சொல்லுகிறேன்.

(க.) பிர்ம்மம் யாது?

மகதகங்கார பூமி ஜல அக்கினி வாயு ஆகாசங்களாகிய பூதங்களடங்கிய பெரிதான ரூபமாகிய அண்டகோசத்தினல் கரும ஞானர்த்த ரூபங்களாய் விளங்கிறதாயும், இரண்டாவ தற்றதாயும், சகலவித உபாதி (வேஷம் அல்லது பொய்க்கோலம்) யற்றதாயும், சகல சக்தியுடன் கூடினதாயும், ஆதியந்த மற்றதாயும், சுத்தம் சிவம் சாந்தம் நிர்குணம் இந்தச் சப்தங்களால் சொல்லத்தக்கதாயும், வாக்குக் கெட்டாததாயு மிருக்கிற சைதன்னியமே பிர்ம்மம்.

(உ.) ஈசுவரன் யார்? அவருடைய இலக்ஷணம் யாது?

பிர்ம்மமே தன்னுடைய சக்தியாகிற பிரகிருதியினலே (ஈசுவரன் என்கிற) பெயரை வகித்து உலகங்களை சிருஷ்டித்து (அதிலே) அந்தர்யாமியாய்ப் பிரவேசித்துப் பிரும்மா முதலானவர்களுடைய புத்தி இந்திரியங்களுக்கு நியாமகன யிருப்பதினலே ஈசுவர னகிறன்.

(ங.) ஜீவன் யார்?

ஈசுவரனே பிரும்மா விஷ்ணு ருத்திரன் இந்திரன் முதலான நாம ரூப மூலமாய் "நான் ஸ்தூலதேகமா யிருக்கிறேன்" என்று ஆரோபிதம் (தப்பிதமாய்ச் சுமத்திக்கொள்ளுவது) செய்துக்கொள்ளுவதினலே ஜீவனகிறன். அவனெருவனே யானலும் தேகோற்பத்திக்குக் காரணமான கருமபெந்தத்தினல் பல ஜீவர்களாகக் காணப்படுகிறன்.

(ச.) பிரகிருதி யாது?

பிர்ம்ம சந்நிதி மாத்திரத்தினலே பல விசித்திரமான ஜகந்நிர்மாண ஸாமர்த்தியமுடைய புத்தி சுவரூபமாகிய பிர்ம்மத்தினுடைய சக்தியே பிரகிருதி.

(ரு.) பரமாத்துமா யார்?

தேகாதிகளைக் காட்டிலும் அதிசிரேஷ்டமா யிருப்பதினாலே பிர்ம்மமே பரமாத்துமா.

(சு.) பிரும்மா யார்?
(எ.) விஷ்ணு யார்?
(அ.) ருத்திரன் யார்?
(கூ.) இந்திரன் யார்?
(க0.) யமன் யார்?
(கக.) சூரியன் யார்?
(கஉ.) சந்திரன் யார்?
(கங.) தேவதைகள் எவர்கள்?
(கச.) அசுரர்தள் எவர்கள்?
(கரு.) பிசாசுகள் எவர்கள்?
(கசு.) மனிதர்கள் எவர்கள்?
(கஎ.) ஸ்திரீகள் எவர்கள்?
(கஅ.) பசு முதலியன எவை?
(ககூ.) ஸ்தாவரம் யாது?
(உ0.) பிராம்மணர் முதலியவர்கள் எவர்கள்?

அவன் (அந்தப் பிர்ம்மமே) பிர்ம்ம விஷ்ணு ருத்திரன். அவனே இந்திரன். அவனே யமன். அவனே சூரியன். அவனே சந்திரன். அவனே தேவர்கள். அவனே அசுரர்கள். அவனே பிசாசுகள். அவனே மனிதர்கள். அவனே ஸ்திரீகள். அவனே பசு முதலியன. அவனே ஸ்தாவரம். அவனே பிராம்மணர் முதலியவர்கள். சகலமும் பிர்ம்மமே. இவ்விடத்தில் அற்பம்கூட பலவென்பதில்லை (பிர்ம்மத்தைத் தவிர வேறே யாதொரு வஸ்துவுமில்லை என்பது தாத்பரியம்).

(உக.) ஜாதி யாது?

(ஜாதியானது தேகத்தின்மேலுள்ள) தோலுக்குமில்லை. இரக்தத்திற்குமில்லை. மாம்ஸத்திற்குமில்லை. எலும்புக்குமில்லை. ஆத்மாவுக்கு ஜாதி இல்லை. ஜாதியானது வியவகாரத்தின்பொருட்டு கற்பிக்கப்பட்டிருக்கிறது.

(உஉ.) கருமம் யாது?

இந்திரியங்களினாலே செய்யப்படுகிற காரியங்களை "நான் செய்கிறேன்" என்று ஆத்மாவிடத்தில் சம்பந்தப்படுத்திச் செய்கிறகிரியைதான் கருமம்.

(உங.) அகருமம் யாது?

கருத்திருத்துவ ("நான் செய்கிறேன்" என்று அகங்காரம் கொள்ளுதல்) போக்த்திருத்துவம். ("நான் இதை அநுபவிக்கிறேன்" என்று அகங்காரம் கொள்ளுதல்) முதலிய அகங்காரத்தோடு கூடியதும் பெந்த சுவரூபமாயும் ஜனனம் முதலியவைகளுக்குக் காரணமாயுமிருக்கிற நித்திய, நைமித்திக, யாக, விருத, தபோதானாதிகளிலே பலாபேக்ஷையைவிட்டுச் செய்கிறதெதுவோ அது அகருமம்.

(உச.) ஞானம் யாது?

பார்க்கிற பார்க்கப்படுகிற சுவரூபமாயும், சகலத்திலும் அந்தர் யாமியாயும், சகலத்திலும் சமமாயும், கடபடாதிகள்போல விகாரமுள்ள தல்லாததாயுமிருக்கிற சைதன்னியத்தைத்தவிர, விகார பதார்த்தங்களிலே, வேறே இல்லையென்று தெரிந்து தேகேந்திரியங்களை அடக்குவது, சத்குருசேவை, (வேதாந்த) சிரவணம், மனனம், நிதித்தியாஸனம், இவைகளினுலே உண்டான சாக்ஷாத்கார அனுபவம்தான் ஞானம்.

(உரு.) அக்ஞானம் யாது?

இரண்டாவதற்றதாயும், எங்குந்தொடர்ச்சியாயுள்ளதாயும், சகல சுவரூபமாயுமிருக்கிற பிர்ம்மத்தினிடத்திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ, புருஷ், வருணுசிரம, பெந்தமோக்ஷ உபாதி (கற்பிதமான வேஷம் அல்லது கற்பிதமானதடை) யாக விருக்கிற பலதேகபேதங்களினுலே கயிற்றில் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமாயிருக்கிற ஞானமே அஞ்ஞானம்.

(உசு.) சுகம் யாது?

சச்சிதாநந்த சுவரூபத்தை அனுபவத்தினுல் அறிந்து ஆநந்த சுவரூபமாகவே இருத்தலே சுகம்.

(உஎ.) துக்கம் யாது?

சுகத்திற்கு அந்நியமான சமுசாரவிஷய சங்கற்பமே துக்கம்.

(உஅ.) சுவர்க்கம் யாது?

சத்சங்கமே சுவர்க்கம். (அதாவது, சத்துக்களாகிய ஜனங்களுடைய சேர்க்கை, அல்லது சத்தாகிய பிர்ம்மத்தில் தன் ஆத்மாவை சேர்ப்பதுவே சுவர்க்கம்).

(உகூ.) நரகம் யாது?

அசத்தாகிய சமுசாரவிஷயத்தை உண்டுபண்ணுகிற தெதுவோ, அதின் சேர்க்கைதான் நரகம்.

(ரு0.) பெந்தம் யாது?

அநாதி அக்கியான வாசனையினுலே "நான் பிறந்தேன்" என்பது முதலிய எண்ணம் பெந்தம்.

தகப்பன் தாய் சகோதரன் பெண்ஜாதி பிள்ளை வீடு தோட்டம் பூமி முதலியவைகளிலே "என்னுடையது" என்கிற சம்சாரமாகிய அக்ஞான விஷயமான மனேவியாபாரம் பெந்தம்.

கருத்திருத்துவாதி அகங்கார சங்கற்பம் பெந்தம்.

அணிமாதி அஷ்டைசுவரியம், சித்திக்கவேண்டுமென்கிற ஆசை பெந்தம்.

தேவமனுஷியாதிகளை உபாசிக்கவேண்டுமென்கிற இச்சையாகிற சங்கற்பமே பெந்தம்.

யமம் முதலான அஷ்டாங்க யோகாப்பியாசம் செய்யவேண்டுமென்கிற சங்கற்பமே பெந்தம்.

வருணாசிரம தரும கரும சங்கற்பமே பெந்தம்.

ஆக்ஞை, பயம், சமுசயம், இவைகள் ஆத்மகுணமென்கிற சங்கற்பம் பெந்தம்.

யக்கியம், விருதம், தபசு, தானம், இவைகளுடைய விதியை அறிதல் (அவைகளை) நடத்தல் இந்த விஷயமான மனோவியாபாரம் பெந்தம்.

மோக்ஷம் மாத்திரம் வேண்டுமென்கிற சங்கற்பமே பெந்தம்.

சங்கற்பமாத்திரத்திலேயே பெந்தமுண்டாகிறது.

(௩க.) மோக்ஷ மெது?

நித்தியா நித்தியவஸ்து விசாரத்தினாலே அநித்தியமாகிய சமுசார சுகதுக்க விஷய சகல க்ஷேத்திராபிமானம் முதலிய சகல மனோவியாபாரமில்லாம லிருக்கிற ஸ்திதியே மோக்ஷம்.

(௩உ.) உபாசிக்கப்படத்தக்கவன் யார்?

எல்லாச்சரீரத்திலிருக்கிற சைதன்னியமாகிற பிர்ம்மத்தை அடைவிப்பிக்கிற குருவே உபாசிக்கத்தக்கவன்.

(௩௩.) சிஷியன் யார்?

பிர்ம்மஞானத்தினால் பிரபஞ்சாகார ஞானமற்று மிஞ்சியிருக்கிற பிர்ம்மமே சிஷியன்.

(௩௪.) வித்துவான் யார்?

சகலத்திலும் அந்தர்யாமியா யிருக்கிற தன்னுடைய ஞான சுவரூபத்தை யறிந்தவன் வித்துவான்.

(௩௫.) மூடன் யார்?

தேக வருணாசிரம கருத்திருத்துவ போக்த்திருத்துவ முதலான அகங்கார பாவனையுடையவன் மூடன்.

(௩௬.) ஆசுரமாவ தென்ன?

பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், இந்திரன் முதலியவர்களுடைய ஐசுவரியம் வேண்டுமென்கிற ஆசையினால் உணவைவிட்டு ஜபம் அக்கினிஹோத்திரம் முதலானவைகளினால் உள்ளேயிருக்கிற ஆத்மாவை வருத்தி ஆசரிக்கப்படுகிறதாயும், எப்போதும் கொடியஆசைத் துவேஷம் துன்பம் டம்பம் முதலானவைகளுடன் கூடினதாயு மிருக்கிற தபசு ஆசுரம்.

(௩௭.) தபசாவ தென்ன?

பிர்ம்மம் சத்தியம் ஜகத் பொய் என்கிற அபரோக்ஷஞானமாகிற அக்கினியினாலே பிரும்மாதிகளுடைய ஐசுவரிய ஆசை உறுதிப்பட்டிருக்கிற சங்கற்பமாகிற விதையை வறுக்கிறதுதான் தபசு.

(௩௮.) பரமப்தம் யாது?

பிராணன், இந்திரியம், அந்தக்கரணம், குணங்கள், இவைகளைக் காட்டிலும் மகாசிரேஷ்டமாயும் சச்சிதானந்த சுவரூபமாயும், சர்வ சாக்ஷியாயுமிருக்கிற நித்யமுக்த பிர்ம்மஸ்தானம்தான் பரமபதம்.

(௩௯.) கிரகிக்கத்தக்க தெது?

தேசம் காலம் வஸ்து இவைகளினால் வறையறுக்கப்படாத சின்மாத்திர சுவரூபம்தான் கிரகிக்கத்தக்கது.

(௪௦.) கிரகிக்கத்தகாத தெது?

தன் சுவரூபத்திற்கு அந்நியமாயிருக்கிறவும் மாயாமயமான புத்தி இந்திரியாதிகளுக்கு விஷயமா யிருக்கிறவுமான ஜகத்தை சத்தியமென்கிற நினைப்பு கிரகிக்த்தகாதது.

(௪௧.) ஸந்நியாசி யார்?

சகல தருமங்களையும் (வருணாசிரமதருமம் சத சத்கருமங்கள் முதலியவைகளை) விட்டு மமகாரம் அகங்காரங்கள் (நான் என்னுடையது என்கிற பற்றுதல்கள்) அற்றவனாய் பிர்ம்ம மொன்றையே சரணமடைந்தவனாய், (தத்த்வமஸி) = அது நீயாயிருக்கிறாய், (ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம) = இந்தச் சகலமும் பிர்ம்மமே, (நேஹ நாநாஸ்தி கிஞ்சந) = இவ்விடத்தில் பலவென்பது அற்பங்கூடவில்லை, இவை முதலிய மகாவாக்கியார்த்த அனுபவ ஞானத்தினாலே ("ப்ரஹ்மைவாஹமஸ்மி) = நான்பிர்ம்மமாகவே யிருக்கிறேன்" என்று நிச்சயித்துக்கொண்டு நிர்விகல்பசமாதியுடன் சுவதந்திரனாய் சஞ்சரிக்கிற யதி எவனோ அவன்தான் சந்நியாசி. அவன்தான் முக்தன். அவன்தான் பூஜ்ஜியன். (பூஜிக்கப்படத் தகுந்தவன்). அவன்தான் யோகி. அவன்தான் பரமஹம்ஸன். அவன்தான் அவதூதன். அவன்தான் பிர்ம்மஞானி என்றபடி.

நிராலம்போபநிஷத்தை எவன் அத்தியயனம் செய்கிறானோ அவன் குரு அநுக்கிரகத்தினால் அக்கினியைப்போல் பரிசுத்தனாகிறான். வாயுவைப்போல் பரிசுத்தனாகிறான். அவன் மறுபடி திரும்புகிறதில்லை. அவன் மறுபடி திரும்புகிறதில்லை. அவன் மறுபடி பிறக்கிறதில்லை. அவன் மறுபடி பிறக்கிறதில்லை என்று உபநிஷத்.

நிராலம்போபநிஷத் முற்றிற்று.

———

ஹரி: ஓம்.

பரப்பிர்ம்மணேநம:

ருக்வேதத்தில்

# ஆத்மபோதோபநிஷத்.

(வாங்மேமனஸி-சாந்தி:)

ஓம். பிரத்தியகாநந்த (ஒரேவிதமானஆநந்த) மாயும் பிர்ம்மபுரு
ஷம் (எங்குபரவிய ஆத்மா) ஆயும், அகாரஉகார மகாரமாகிய மூன்று
எழுத்துக்கள் கூடிய ஓங்காரமாகிற பிரணவசுவரூபமாயுமிருக்கிற எவ
னை யுச்சரித்து, யோகியானவன் ஜனனமாகிய சமுசார பெந்தத்திலிரு
ந்து விடுபடுகிறானோ, அப்படிப்பட்ட சங்கசக்கர கெதாதாரியாகிய
நாராயணன் பொருட்டு நமஸ்க்காரம். ஓம். ஆகையினாலே "ஓம்நமோ
நாராயணாய" என்கிற மந்திர உபாசகன் வைகுண்டலோகத்தையடை
கிறான். அதானது (அந்தவைகுண்டமானது) ஹிருதய கமலமாகிற
பிர்ம்மபுரம். மின்னல்போல் காந்தியுள்ளது. தீபத்தைப்போல் பிர
காசமுள்ளது. பிர்ம்மண்ணியன் (தபசுவேதம் ஸத்தியம் ஞானம்
இவை முதலியவைகளுக்குப் பிரியன் ஆனதால் பரமாத்துமாப் பிரம்ம
ண்ணியன் என்றுசொல்லப்படுகிறார்) தான் தேவகீபுத்திரன். பிர்ம்ம
ண்ணியன்தான் மதுசூதனன். பிர்ம்மண்ணியன்தான் புண்டரீகாக்ஷன்.
பிர்ம்மண்ணியனான விஷ்ணுதான் அச்சுதன். சகலபூதங்களுக்குள்ளே
யிருக்கிறவனாயும் காரணபுருஷனாயும் (தனக்கு) காரணமற்றவனாயும்
ஓங்கார வாச்சியனான பரபிர்ம்மமாயும் துக்கமோகங்க ளில்லாதவனாயு
ம் சருவவியாபியாயுமிருக்கிற ஒரேநாராயணனைத் தியானிக்கிறவன் துக்
கமடைகிறதில்லை. துவைதத்திலிருந்து பயமற்றதாகிய அத்துவைத
மாகிறான். எவன் இந்தலோகத்தில் பலவாக (நான் நீ அவன் இவன்,
என்கிற பேதபுத்தியாக) பார்க்கிறானோ அவன் மிருத்தியுவிலிருந்தும்
மிருத்தியுவை (மரணமடையத்தக்க பலஜன்மத்தை) அடைகிறான்.
ஹிருதயகமலமத்தியில் சர்வ சுவரூபியாயும் பிரக்ஞையேகண்ணா
யுடையதாயுமிருக்கிற பிர்ம்ம மிருக்கிறது. பிரக்ஞானத்திலேயே
யிருக்கிறது. பிராணிகளுக்குப் பிரக்ஞானமேகண். பிரக்ஞைதா
னிருப்பிடம். பிரக்ஞானமே பிர்ம்மம். அந்த உபாசகனானவன், பிரக்
ஞானமாகிய ஆத்மாவினாலேயே இந்த உலகத்தைவிட்டுக் கிளம்பி
பரமானசுவர்க்க (உத்தமமானவைகுண்ட) லோகத்தில் சகலகாமங்
களையும் அடைந்து (பிறகு) மரணமற்றவனாக வாகிறான். எந்தலோ
கத்தில் எப்போதும் ஜோதியானது விளங்கிக்கொண் டிருக்கிறதோ,

எந்தலோகத்தில் பூஜிக்கப்படுகிருனே, அப்படிப்பட்டஅமிருதம் பெருகிக்கொண்டிருக்கிற குறைவற்ற லோகத்தி லென்னைவை. அமிருதத்தை யடைகிருன். ஒழ நஉ௰.

நான் மாயையற்றவன். நான் உவமையற்றவன். ஞானசுவரூபமான வஸ்துமாத்திரமா யிருக்கிறவன். நான் அகங்காரமற்றவன். நான் ஜகத் ஈசுவர ஜீவ பேதமற்றவன். நான் பிர்ம்மத்தைவிட வேறல்லாத உத்தமன். நாசமடைந்த சகலவிதி நிஷேதங்களையுடையவன். நன்ருய்த் தள்ளப்பட்டிருக்கிற ஆசிரமத்தையுடையவன். நான் விஸ்தாரமாயிருக்கிற பூர்ண ஞானசுவரூபி. நான் சாக்ஷியாயும் அபேக்ஷையற்றவனுயு மிருக்கிறவன். என்னுடைய மகிமையிலேயே யிருக்கிறவன். அசையாதவன். கிழத்தனமற்றவன். நாசமற்றவன். தன்னுடையபக்ஷமென்றும் அந்நியனுடைய பக்ஷமென்றும் பேதமற்றவன். ஞானத்தையே முக்கிய ரஸமாயுடையவன். மோக்ஷமாகிற ஆநந்த சமுத்திரமாகமாத்திர மிருக்கிறேன். சூக்ஷ்மனுயிருக்கிறேன். மாறுதலற்றவனுயிருக்கிறேன். குணக்கூட்டங்களற்ற ஆத்ம சுவரூப மாத்திரமாகவிருக்கிறேன். முக்குணமற்ற ஸ்தானமா யிருக்கிறேன். வயிற்றிற்குள் ளிருக்கிற அநேக லோகங்களுடைய சிருஷ்டியையுடைத்தானவனுக விருக்கிறேன். கூடஸ்தனுயிருக்கிற சேதனனு யிருக்கிறேன். யாதொரு செய்கையுமற்ற ஜோதி சுவரூபனு யிருக்கிறேன். நான் ஊகத்தினு லறியப்படத் தக்கவனல்ல. நான் ஒருவனே பூர்ணமாயிருக்கிறேன். நிர்மலமான மோக்ஷ சுவரூபியா யிருக்கிறேன். அவயவமற்றவன். பிறப்பற்றவன். சத்தாமாத்திர ஸாரமா யிருக்கிறேன். எல்லையற்ற சுவஞானமாத்திரமா யிருக்கிறேன். அதிக மங்களகரமான சுவரூபியா யிருக்கிறேன். பேதப்படுத்தத் தகாதவனு யிருக்கிறேன். எங்கும் வியாபித்திருக்கிறவனுயும் குற்றமற்றவனுயு மிருக்கிறேன். எல்லையும் முடிவுமற்ற சத்துவமாத்திரமா யிருக்கிறேன். நான் வேதாந்தங்களினு லறியத்தகுந்தவன். நான் ஆராதிக்கத் தகுந்தவன். நான் சகல லோகங்களுக்கு மின்பமானவன். பரமானந்த கனமாயிருக்கிறேன். பரமாநந்த மாத்திரமான சுகசுவரூபியா யிருக்கிறேன். நான் சுத்தன். நான் இரண்டாவதற்றவன். நான் எப்பவு மிருக்கிறவன். நான் ஆதியற்றவன். நான் (ஸ்தூல சூக்ஷமகார்ண) மூன்று தேகங்களற்றவன். நான் ஞானசுவரூபி. நான் முக்தன். நான் ஆச்சரியமான சுவரூபமுடையவன். நான் சுத்தன். நான் அந்தரியாமி. நான் சாசுவதமான விக்ஞான சமரஸ சுவரூபன். நான் வடிக்கட்டின பரதத்துவம். நான் ஞானனந்த சுவரூபியானவன். விவேகமான புத்தி யுக்தியினுலே இரண்டாவதற்ற ஆத்மாவை நான் அறிகிறே னுனுலும் பெந்த மோக்ஷாதி வியவகாரங் காணப்படுகிறது. பிரபஞ்சமானது எனக்கு நிவிருத்தியானுலும் எப்போதும் சத்தியம்போல் விளங்கிறது. பழுதையில் ப

ம்பு முதலியனபோல் (பழுதையில் பாம்பு என்கிற பிரமைக்குக் கார
ணம் பழுதைபோல) பிரபஞ்சத்திற் காதாரரூபமாய் பிர்ம்மசத்து மா
த்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது. ஆகையால் ஜகத்தில்லை. கரும்பு
ரஸமானது எப்படி சர்க்கரையை வியாபித்து நிறைந்திருக்கிறதோ அப்
படிப்போல அத்துவய பிர்ம்மரூபத்தினாலே மூன்று லோகத்திலும்
நிறைந் திருக்கிறேன். குமிழிமுதலிய விகாரங்களும் அலைகளும் சமுத்
திரத்தி லெப்படியோ, அப்படிப்போல பிரும்மாமுதல் புழு அல்லது
பூச்சிவரையிலுள்ள பிராணிகள் என்னிடத்திற் கற்பிக்கப்பட் டிருக்
கின்றன. அலைகளினசைவை சமுத்திரம் கோராததுஎப்படியோ அப்
படிப்போல நான் ஆநந்தரூபியா யிருக்கிறதினாலே விஷயாநந்தக்கோ
ரிக்கை யுண்டாகவேண்டாம். சம்பந்நனாயிருக்கிறவனுக்குத் தரித்திரத்
தில் ஆசையில்லாததுபோல பிர்ம்மாநந்தத்தில் முழுகியிருக்கிற என
க்கு விஷயாசை யுண்டாகமாட்டாது. அமிருதத்தையும் விஷத்தை
யும்பார்த்த புத்தியுள்ளவனானவன் விஷத்தைத் தள்ளி விடுகிறான்.
நான் ஆத்மாவையறிந்தபடியால் ஆத்மாவல்லாததைத் தள்ளிவிடுகிறே
ன். குடத்தைப் பிரகாசிப்பிக்கிற சூரியன் குடத்தினுடைய நாசத்தி
னால் நாசமடைகிறதில்லை தேகத்தைப் பிரகாசிப்பிக்கிற சாக்ஷியாக
விருக்கிறவன் தேகநாசத்தினால் நாசமடைகிறதில்லை. எனக்குப் பெந்
தமுமில்லை, எனக்கு முக்தியுமில்லை. எனக்குச் சாஸ்திரமு மில்லை.
எனக்குக் குருவுமில்லை. (அவைகள்) மாயாமாத்திரமாக விளங்குவதி
னாலே நான் (அவைகளை) அதிக்கிரமித்தவன். இரண்டாவதற்றவன்.
பிராணன்களானவை அவைகளினுடைய தருமங்களினாலே சலித்துக்
கொண் டிருக்கட்டும் மனதானது ஆசையினாலே அடிக்கப்படட்டும்
சுபாவமாய் ஆநந்தரூபியாயிருக்கிற எனக்குத் துக்கமெப்படி யுண்டா
கும். ஆத்மாவை வாஸ்தவமாயறிந்து கொண்டேன். அக்ஞானமானது
எங்கேயோ பறந்துபோய் விட்டது. கருத்திருத்துவமாகிய அகங்கா
ரம் நஷ்டமாய்விட்டது. நான் செய்யவேண்டியதாக வொன்றுமில்லை.
பிராம்மண்ணியம், குலம், கோத்திரம், பெயர், அழகு, ஜாதி, இவை
கள் ஸ்தூலதேகத்தைச் சேர்ந்தன, தேகமில்லாத எனக்கு (அவைகள்)
இல்லை. ஜடத்துவம் பிரியத்துவம் சந்தோஷத்துவம் இந்தத் தருமங்
கள் காரணதேகத்தைச் சேர்ந்தன, நித்தியனாயும் மாறுதலற்ற சுவ
ரூபியாயுமிருக்கிற எனக்கில்லை. கோட்டானுக்கு சூரியன் இருட்டா
கக் காணப்படுகிறதுபோல மூடனுக்கு சுவப்பிரகாச பராநந்தத்தில்
இருட்டுண்டா யிருக்கிறது. கண்பார்வையை மேகம்மறைத்தால்(அந்த
அக்ஞானி) சூரியனில்லையென்று நினைக்கிறான். அப்படிப்போல அக்
ஞானத்தினால் சூழப்பட்டிருக்கிற தேகத்தையுடைய ஜீவன் பிர்ம்ம
மில்லைஎன்று நினைக்கிறான். விஷத்தைக்காட்டிலும் வேறாயிருக்கிற
அமிருதமானது விஷத்தோடு எப்படி ஒட்டுகிறதில்லையோ, அப்படி

ப்போல ஜடத்தைவிட வேறாய் விளங்கிக்கொண்டிருக்கிற நான் ஜட தோஷங்களைத் தொடுகிறதில்லை. தீபம் எவ்வளவு சிறியதானாலும் அதின் பிரகாசமானது பெரிதான இருளைப்போக்குவதுபோல் ஞானமானது சொற்பமாயிருந்தாலும்கூட அதிகமான அக்ஞானத்தை நசிக்கச்செய்கிறது. கயிற்றில் பாம்பு முக்காலத்திலு மெப்படியில்லையோ, அப்படி அகங்காராதி தேகம்வரையிலுள்ள ஜகத்தானது அத்துவயனா யிருக்கிற என்னிடத்திலில்லை. சித்சுவரூபனாகவே நானிருக்கிறதனாலே என்னிடத்தில் ஜடத்துவமில்லை. சத்தியசுவரூபனா யிருக்கிறதினாலே பொய்யில்லை. ஆநந்தசுவரூபனா யிருக்கிறதினாலே துக்கமில்லை. அக்ஞானத்தினால் ஜகத்தானது சத்தியம்போல விளங்கிறது.

இந்தப்படி ஆத்மபோதோபநிஷத்தை ஒருமுகூர்த்தம் உபாசித்தால் மறுஜனனமில்லை மறுஜனனமில்லை, என்று உபநிஷத்.

ஆத்மபோதோபநிஷத் முற்றிற்று.

---

ஹரி: ஓம்.

ஓம் பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீ ஹயக்ரீவாய நம:.

அதர்வணவேதத்தில்

# நாரதபரிவிராஜகோபநிஷத்.

## முதலாவது உபதேசம்.

ஓம். ஒருகாலத்தில் பரிவிராஜகர்களுக்கு (துறவியாய் எங்கும் சஞ்சாரம் செய்கிறவர்களுக்கு) ஆபரணமாயிருக்கிற நாரதர் சகல லோகங்களையும் சஞ்சாரம் செய்துகொண்டும் அபூர்வ புண்ணியபலன்களைத் தரத்தக்கதாயிருக்கிற தீர்த்தங்களைப் பார்வையினாலேயே பரிசுத்தம் செய்கிறவராய், சித்தசுத்தியை யடைந்தவராய், த்வேஷமற்றவராய், சாந்தராய், பொறுமையுள்ளவராய், சகலத்தையும் வெறுத்தவராய், சுவரூபானு சந்தானத்தி லிருக்கிறவராய்க் கொண்டும் ஏற்பட்டிருக்கிற ஆனந்த மகிமை பெற்றவும் முனிஜனங்களால் நிறைந்தவுமான நைமிசாரண்ணிய புண்ணிய ஸ்தலத்தைக்கண்டு, ஸ, ரி, க, ம, ப, த, நி, என்கிற பெயர்களையுடைய ஸ்வரவிசேஷங்களோடு கூடிபவும் வைராக்கியத்தை யுண்டாக்கத்தக்கவும் பிரபஞ்சத்தை அசட்டைசெய்யத்தக்கவும் ஸ்தாவர ஜங்கமரூபமான * பகவத்பக்தி விசேஷங்களைத் தெரிவிக்கிறவுமான ஹரிகதாலாபங்களினாலே நர மிருக கிம்புருஷ அமர கின்னர° அப்ஸர உரகக் கூட்டங்களை மோகிக்கச்செய்துகொண்டு (நைமிசாரண்ணிய ஸ்தலத்திற்கு) வந்தார். பனிரண்டு வருஷம் சத்திரயாகத்தில் ஏற்பட்டிருக்கிறவர்களும் வேதாத்தியயன சம்பன்னர்களும் சகலத்தையும் அறிந்தவர்களும் தபசிலேயே நிஷ்டையுடையவர்களும் ஞானவைராக்கிய சம்பன்னர்களுமான சனகாதி மகரிஷிகள், பிரும்மாவின் குமாரரும் பகவத் பக்தருமான அந்த நாரதனைப்பார்த்து எழுந்திருந்து மரியாதைசெய்து தகுந்த உபசாரஞ்செய்து உட்காரவைத்துத் தாங்களும் உட்கார்ந்து, ஓ பிரும்ம புத்திரராகிய பகவானே! எங்களுக்கு முக்திக்குபாய மெப்படி? அது சொல்லத்தக்கதென்று சொன்னார்கள்.

இப்படிக் கேட்கப்பட்ட நாரதரானவர் அவர்களின் பொருட்டு சொல்லுகிறார்.

---

* ஸ்தாவரரூபமான பகவத்பக்தி யென்றால், மனதினால் செய்கிற பகவத்தியானம். ஜங்கமரூபமான பகவத்பக்தியென்றால், வாக்குக்காயங்களினால் பகவத் விஷயமாய்ச் செய்கிற ஸ்தோத்திர நமஸ்காராதிகள்.

நல்லகுலத்திற் பிறந்தவனும் நன்றாய் உபநயநம் முதலான நாற்பத்துநான்கு சம்ஸ்காரங்களை யுடையவனுமிருக்கிறவன் தனக்கு அபிமானமுள்ள ஒரு குருவிடம் தன்னுடைய சுவசாகாத்தியயனம் முதலான சகலவித்தைகளையும் அப்பியாசம்செய்து பனிரண்டுவருஷம் குருசுசுரூஷை முதலான பிரும்மசாரி விருதத்தையும் இருபத்தைந்து வருஷம் கிரகஸ்தாசிரமத்தையும் இருபத்தைந்து வருஷம் வானப்பிரஸ்தாசிரமத்தையும் அதததற்குள்ள நியமப்படி நிறைவேற்றி நான்குவித * பிரும்மசரியத்தையும் ஆறுவித † கிரகஸ்தாசிரமத்தையும் நான்குவித ‡ வானபிரஸ்தாசிரமத்தையும் செவ்வையாயநுஷ்டித்து, அதததற்குறிய சகல கருமத்தையும்செய்து, நான்குவித சாதனங்களையும் § அடைந்து, சமுசாரத்திலேயும் ஈஷணத்திரயங்களுடைய ¶ வாசனையிலேயும் மனோவாக்காயங்களுடைய கருமங்களுடன் ஆசையைவிட்டு வைரமற்றவனாய், சாந்தனாய், பொறுமை யுடையவனுயிருக்கிற எந்தச் சந்நியாசியானவன் பரம ஹம்ஸாசிரமத்தினால் சலனமற்றவனாய், சுவசுவரூபத்தியானத்துடன் தேகத்தை விடுகிறானோ அவன் முக்தனாகிறான், என்று உபநிஷத்.

முதலாவ துபதேசம் முற்றிற்று.

---

## உ-வது உபதேசம்.

சௌனகாதி (மகரிஷி)கள் பகவானாகிய நாரதனை (நோக்கி) ஓ பகவானே! சந்நியாசவிதியை எங்களுக்குச் சொல்லுமென்றார்கள். அவர்களைப்பார்த்து நாரதர் அதின் சுவரூபம் முழுதும் பிதாமகருடைய (பிரும்மாவினுடைய) வாக்கினால் அறிவது யுக்தமென்றுசொல்லி சத்திரயாகம் பூர்த்தியடைந்தபிறகு அந்த (சௌனகாதி) ரிஷிகளுடன்கூட (நாரதர்) சத்தியலோகஞ்சென்று பிர்ம்மநிஷ்டராயிருக்கிற பிரும்மாவைக் கிரமப்படி நமஸ்காரம்செய்து ஸ்தோத்திரஞ்செய்து அவர்களுடன் (சௌனகாதிரிஷிகளுடன்) கூட பிரும்மாவின் உத்திரவினாலே தகுந்தபடி யுட்கார்ந்து, நாரதர் பிரும்மாவைப்பார்த்துச் சொல்லுகிறார். (அதாவது) நீர் குரு, நீர் பிதா, சகல வித்தையினுடைய ரகஸியத்தையும் தெரிந்தவர், நீர் எல்லாம் தெரிந்தவர், ஆகையால் எனக்கிஷ்-

---

* காயத்ர பிரும்மசாரி, பிராஜாபத்தியப் பிரும்மசாரி, வைதிகப் பிரும்மசாரி, நைஷ்டிக பிரும்மசாரி.

† வார்த்தாவிருத்தி, சாலீனவிருத்தி, யாயாவரன், கோரசந்நியாஸி, இந்த நான்குவித கிரகஸ்தாசிரமம்தான் அமரத்தினாலறியக் கூடியதாகவிருக்கிறது.

‡ ஔதும்பரன், வைகானஸன், ஸம்பிரக்ஷாளி, பௌர்ணமன்.

§ நித்தியாநித்திய வஸ்துவிவேகம், இஹாமுத்திரார்த்தபலபோக விராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்துவம்.

¶ புத்திராசை, பெண்ணாசை, பொருளாசை.

மான ஒரு ரகஸியத்தைச் சொல்லவேண்டும். உம்மைத்தவிர வே
றே எவன் எனக்கிஷ்டமான ரகஸியத்தைச்சொல்ல சக்தனாயிருக்கி
றான். அதென்னவெனில், சந்நியாசத்தினுடைய சுவரூபக் கிரமத்தை
எங்களுக்குச்சொல்லும், என்று நாரதரால் பிரார்த்திக்கப்பட்ட பிரும்
மாவானவர் நான்குபக்கத்திலும் எல்லாவையும் பார்த்து ஒரு முகூர்த்
தம் தியானித்து சமுசார துக்க நிவிருத்தியின் பொருட்டு விசாரிக்கிற
தாக நிச்சயித்து நாரதரைப்பார்த்துச் சொல்லுகிறார்.

ஓ என் குமாரா! முன்னாலே புருஷ சூக்தோப நிஷத்படிக்கு
நிரதி சயாகாரத்தை யுடைத்தாயிருந்த விராட் புருஷனால் உபதே
சிக்கப்பட்ட ரகஸியமானது உனக்குச் சொல்லப்படுகிறது. அந்தக்
கிரமமானது அதிரகஸியமானது. நன்றாய் கவனத்தோடு கேட்கப்
படத்தக்கது. ஓ நாரதா! நல்ல குலத்தில் பிறந்தவனும் தாய் தகப்ப
னுக்குக் கீழ்ப்படிந்திருக்கிறவனுமானவன் (பாலியன்) விதிப்படி முத
லில் உபநயநமானபிறகு தகப்பனுக்கு அந்நியமானவனாயும், நல்ல சம்
பிரதாய முள்ளவனாயும், சிரத்தை யுள்ளவனாயும், நற்குலத்தில் பிற
ந்தவனாயும், சுரோத்திரியனாயும் (வேதமறிந்த பிராம்மணனாயும்), சாஸ்
திரத்தில் அபிமான முள்ளவனாயும், (நற்) குண முள்ளவனாயும், கபட
மற்றவனாயு மிருக்கிற சத்குருவையடைந்து அவனை நமஸ்கரித்து உப
யோகமானவனாயிலுள்ள சுசுரூஷையைச்செய்து தன் அபிப்பிராயத்
தை விக்ஞாபனம் (வணக்கத்துடன் தெரிவித்தல்) செய்து பனிரண்
டுவருஷம் சேவையுடன்கூட குருகுலவாசம்செய்து சகல வித்தியாப்
பியாசத்தையும் செய்து அவருடைய (குருவினுடைய) உத்தரவி
னாலே தன்குலத்திற்கு யோக்கியமானவளும் தனக்கிஷ்டமானவளுமா
கிய கன்னிகையை விவாகம் (கல்லியாணம்) செய்துகொண்டு பின்பு
இருபத்தைந்துவருஷம் கிரகஸ்தனுக்கடுத்த கருமத்தைச் செய்து
தெளர்ப்பிராம்மண்ணிய நிவர்த்தியை யடைந்து (யக்ஞாதிகளால் பிரா
ம்மண சிரேஷ்டத்துவத்தை யடைந்து) தன் வம்சவிருத்தி யாகவே
ண்டுமென்கிற ஆசையுடையவன் ஒரு புத்திரனை யடைந்து கிரகஸ்த
தருமத்திற்கு யோக்கியமான இருபத்தைந்து வருஷங்களைக்கழித்து,
இருபத்தைந்து வருஷங்கள்வரையில் மூன்று காலம்ஸ்நானஞ் செய்து
ஒருவேளை சதுர்விதகாலத்தில் (நாலாவது ஜாமத்தில்) ஆகாரம்செ
ய்து ஒருவனாக வனத்திலிருந்து பட்டணம் கிராமங்களுடைய முந்திய
(முன்போல்) சஞ்சாரத்தை விட்டு நிகாரம் (வெகுமானத்தில் விருப்பு)
அற்றவனாய் அந்த (வானப்பிரஸ்த) ஆசிரமத்திற்கு நியதமான கருமங்
களை நிறைவேற்றிக்கொண்டு கண்டதும் கேட்டதுமானவிஷயங்களில்
நிராசையடைந்து நாற்பது ஸம்ஸ்காரங்களை யுடையவனாய் எல்லா
வற்றிலும் விருப்பற்றவனாய் சித்தசுத்தியை யடைந்து ஆசை அசூயை
பொறாமை அகங்காரம் இவைகளை எரித்து சாதன சதுஷ்டய சம்

பன்ன னைவன் சந்நியாசத்திற்கு யோக்கிய னாகிறான், என்று உப நிஷத்.

இரண்டாவ துபதேசம் முற்றிற்று.

---

## ௩-வது. உபதேசம்.

பின்பு நாரதரானவர் பிதாமகனை (நோக்கி) எவனால் சந்நியாசாதி கார மடையப்பட்டு சந்நியாசம் செய்துகொள்ளத்தக்கதென்று கேட்டார். முதலில் சந்நியாசாதிகாரியை நிரூபித்து பின்பு சந்நியாசவிதி சொல்லப்படுகிறது. ஜாக்கிருதையாய்க் கேள் (என்று பிரும்மா சொல்லுகிறார்).

நபும்ஸகன், பதிதன் (ஜாதிகெட்டவன்), அங்கஹீனன், ஸ்திரீ லோலன், செவிடன், பாலன், ஊமை, பாஷண்டன் (வேததூஷகன், அல்லது நாஸ்திகன், அல்லது மதம்கெட்டவன்), சக்கிரீ (சக்கராங்கம் செய்து கொண்டவன்), லிங்கீ (லிங்கமுத்திரை, அல்லது தாரணை செய்துகொண்டவன்), வைகானஸன், சிவத்துவிஜன், கூலிக்கு அத்தியயனம் சொல்லுகிறவன், சொட்டைத்தலையன், அக்கினியில்லாதவன் (அக்கினிஹோத்திரம் முதலியவை செய்யாதவன்), இவர்கள் வைராக்கிய மடைந்திருந்தாலும் கூட சந்நியாசத்திற்கு அருகர்களல்லர். (அவர்கள்) சந்நியாசம் செய்துகொண்டாலும் மகாவாக்கியங்களை உபதேசம் பெற்றுக்கொள்ள அதிகாரிக ளல்லர். பூர்வ (முன் சந்நியாசத்திற்கு யோக்கியனென்று சொல்லப்பட்டிருக்கிற) பரமஹம்ஸனாகிய சந்நியாசிதான் அதிகாரி. (எவன்) தன்னால் பிறர் பய மடையாததுபோல் தானும் பிறரால் பயமடைகிறதில்லையோ (அவன்) பரிவிராட் என்று ஸ்மிருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. ஷண்டன், அங்கஹீனன், குருடன், பாலன், பாபி, பதிதன், பரத்துவாரீ (அந்நியன்வாசல் காப்பான்), வைகானஸன், சிவதுவிஜன், சக்கிரீ, லிங்கீ, பாஷண்டி, சிபிவிஷ்டன் (சொட்டைத்தலையன்), அநக்கினிகன், இரண்டு மூன்று தடவை சந்நியாசம் செய்துகொண்டவன், கூலிக்கு அத்தியயனம்சொல்லுகிறவன் இவர்கள் ஆதுரத்தினாலே தவிர, கிரம சந்நியாசத்திற்கு பாத்திரர்க ளல்லர். ஆதுரசந்நியாசத்திற்குக் காலமெது என்கிற விஷயத்தில் ஆரியாளுடைய சம்மதமெது வென்றாலோ, பிராணன் வெளிப்படுகிறதற்குச் சமீபகாலம்தான் ஆதுரமென்று பெயருடையது. மற்ற காலமானது முக்திமார்க்கத்தைக் கொடுக்கத்தக்க ஆதுரகால மன்று. ஆதுர சந்நியாசத்திலும் அந்தந்த மந்திர பூர்வமாய் மந்திராவிருத்தியைச் செய்தே வித்வானானவன் விதிப்படிக்குச் சந்நியாசம் செய்துகொள்ள வேண்டும். ஆதுர சந்நியாசத்திற்கும், கிரம சந்நியாசத்திற்கும், பிரேஷோச்சாரண (சந்நியாசம் வாங்குகையில் சொல்லவேண்டிய) மந்திரத்தில் பேதமில்லை. கருமமன்றி மந்திரமில்லை. கருமம் மந்திரத்தை அபேக்ஷி

க்கிறது. மந்திரமன்றியில் செய்வது கருமமாகாது. ஆகையால் மந்திரத்தை விடக்கூடாது. மந்திரத்தை விட்டுச்செய்த கருமம் சாம்பலில் செய்த ஹோமமாகும். விதியினால் சொல்லப்பட்டிருக்கிற கருமங்களுடைய சுருக்கத்தினாலே ஆதுர சந்நியாசமென்று சொல்லப்படுகிறது. ஆகையினாலே, ஓ முனியே! ஆதுர சந்நியாசத்தில் மந்திரத்தினுடைய ஆவிருத்தி சொல்லப்பட்டிருக்கிறது. ஆஹிதாக்கினியானவன் (அக்கினிஹோத்திரம் எப்போதும் செய்துகொண்டிருக்கிறவன்) வெறுப்படைந்து தேசாந்திரம்போனால் ஜலத்திலேயே பிராஜாபத்திய இஷ்டியை நிறைவேற்றி பிறகு சந்நியாசம் செய்துகொள்ளவேண்டும். சுருதி அநுஷ்டான மார்க்கத்தினால் (ஏற்பட்டிருக்கிற) கருமாநுஷ்டானத்தை மனசினாலேயாவது, விதிப்படிக்குள்ள மந்திராவிருத்தியினாலேயாவது, ஜலத்திலே வித்துவானானவன் பூர்த்திசெய்து பிறகு சந்நியாசம் வாங்கிக்கொள்ள வேண்டியது. இல்லாவிட்டால் பாதித்தியத்தையடைவான். எப்போது மனசில் சகல வஸ்துக்களிடத்திலும் விரக்தி யுண்டாகிறதோ அப்போது சந்நியாசத்தை யிச்சிக்கிறார்கள் (சந்நியாசத்திற்கு அது தகுந்தகாலமென்று பெரியோர்கள் நினைக்கிறார்கள்). அப்படி யில்லாவிட்டால் பதிதனாகிறான். வைராக்கிய மடைந்தவன் சந்நியாசம் வாங்கிக்கொள்ள வேண்டியது. வைராக்கியமில்லாதவன் வீட்டிலேயே யிருக்கவேண்டியது. ஆசையுட னிருக்கிற துவிஜாதமன் சந்நியாசம் வாங்கிக்கொண்டால் நரகமடைகிறான். எவனுடைய நாக்கு, உபஸ்தம், வயிறு, கை இவைகள் அடங்கியிருக்கின்றனவோ அப்படிப்பட்ட பிரும்மசாரியான பிராம்மணன் விவாகம் செய்துகொள்ளாமலே சந்நியாசம் வாங்கிக்கொள்ளலாம். சம்சாரத்தை நிஸ்ஸாரமா யறிந்து ஸாரத்தை (பிர்ம்மத்தை) அறிய விச்சையினாலே விவாகம் செய்துகொள்ளாமலே சிரேஷ்டமான வைராக்கியத்தை ஆசிரயித்து சந்நியாசி யாகிறார்கள். பிரவிருத்தி லக்ஷணம் கருமம். ஞானம் சந்நியாசலக்ஷணம். ஆகையால், ஞானத்தை முன்னிட்டுக்கொண்டு புத்திமானானவன் சந்நியாசஞ் செய்துகொள்ள வேண்டியது. சாசுவதமான பரபிர்ம்ம தத்துவம் எப்போது அறியப்பட்டதோ அப்போது ஒரு தெண்டத்தைத் தரித்துக்கொண்டவனாய் பூணூலையும் குடுமியையும் தியஜிக்கவேண்டியது. பர்மாத்துமாவிடத்தில் பிரீதியுள்ளவனாயும், அபரமாத்துமாவிடத்தில் (மாயாகாரியமான பிரபஞ்சத்தினிடத்தில்) விரக்தியுடையவனாயும், சகல ஆசைகளிலிருந்து விடுபட்டவனாயு மிருக்கிறவன் பிக்ஷான்னத்தை யுண்பதற்கு (சந்நியாசத்திற்கு)யோக்கியனாயிருக்கிறான். தான் பூஜிக்கப்பட்டாலும் நமஸ்கரிக்கப்பட்டாலும் எப்படிச் சந்தோஷப்படுகிறானோ, அடிக்கப்பட்டாலும் அப்படியிருக்கிறவன் பிக்ஷான்னத்தை யுண்பதற்கு யோக்கியனாயிருக்கிறான். இரண்டாவதற்றவும் நாசமற்றவுமான வாசுதேவனென்று பெயருள்ள

பிர்ம்மம் தானேயென்று எவனுக்கு எப்போது நிச்சயமான பாவனை யிருக்கிறதோ அப்போதவன் பிக்ஷான்னம் புஜிக்கிறவனாயிருக்கிறான். சாந்தி (இந்திரியங்களை யடக்குதல்), சமம் (மனதையடக்குதல்), சுத்தி (தேகமனச்சுத்தி), பொய்யின்மை, சந்தோஷம், நேர்மை, எழுமைத்தனம், டம்பமின்மை, இவைகள் எவனிடத்தி லிருக்கின்றனவோ அவன் கைவல்லியாசிரமத்தில் (சந்நியாசாச்சிரமத்தில்) இருக்கவேண்டியவன். சகல பூதங்களிடத்திலும் செய்கையினாலாவது, மனசினாலாவது, வாக்கினாலாவது, பாபசம்பந்தமான காரியம் எப்போது செய்கிறதில்லையோ அப்போது பிக்ஷான்னத்தை யுண்பவனாகிறான். சமாதான மடைந்த (சித்தத்தையடக்கின)வனாய், பத்துவிதமான தருமங்களை அநுஷ்டானஞ்செய்து விதிப்படி வேதாந்தங்களை சிரவணஞ்செய்து * இருணமற்றவனாய் சந்நியாசம் வாங்கிக்கொள்ளவேண்டியது. தைரியம், பொறுமை, வெளியிந்திரியங்களை யடக்குதல் களவாமை, மனச்சரீரசுத்தி, உள்ளிந்திரியங்களை யடக்குதல், வெட்கம், ஞானம், சத்தியம், கோபமின்மை இந்தப்பத்தும் தருமத்தினுடைய லக்ஷணம். இறந்தகாலவருங்கால போகங்களை நினைக்காமலும் அடைந்திருக்கிற (நிகழ்கால) போகத்தில் சந்தோஷமடையாமலும் இருக்கிறவன் சந்நியாசியாகலாம். உள்ளிருக்கிற இந்திரியங்களை உள்ளேயும், வெளிவிஷயங்களை (சப்த ஸ்பரிசாதிகளை) வெளியிலேயு மிருக்கும்படி செய்ய எவன் சக்தியுள்ளவனோ அவன் கைவல்லியாசிரமத்திலிருக்கலாம். பிராணன் போனபிறகு தேகமானது சுகதுக்கங்களை எப்படி யறிகிறதில்லையோ அப்படியே பிராணனோடிருக்கிறவன் சுகதுக்கங்களை யறியாதிருந்தால் அவன் கைவல்லியாசிரமத்தி லிருக்கலாம். பரமஹம்ஸனா யிருக்கிற எதியானவன் இரண்டு கௌபீனங்களையும் ஒரு கந்தல் துணியையும் ஒரு தெண்டத்தையும் ஸ்வீகரிக்கலாம். இதைவிட அதிகம் விதிக்கப்படவில்லை. ஆசையினால் இதைவிட அதிகமாய் சுவீகரித்தால் ரௌரவ நரகத்தை யடைந்து பசுபக்ஷியாதி யோனியில் பிறக்கிறான். பழசாய்ப் போனதும் அழுக்கற்றதுமாகிய துணிகளை தைத்து அதற்கு வருணம் கொடுத்து அந்தக்கந்தையை மேல்வஸ்திரமாகத் தரிக்கவேண்டியது. ஒரு வஸ்திரத்துடனாவது அல்லது வஸ்திரமன்றியிலாவ திருக்கலாம். ஏக (ஒன்றானபிர்ம்ம) திருஷ்டியாயும் விஷயங்களில் ஆசையற்றும் ஒருவனாகவே சஞ்சரிக்கவேண்டியது. வருஷாகாலத்தில் ஓரிடத்திலிருக்கலாம். புத்திரன் பெண்சாதிமுதலிய குடும்பத்தையும் வேதாங்கங்களையும், யக்கியத்தையும், பூணூலையும் சுத்தமாய்விட்டு எதியானவன்

* இருணமென்றால்: கடன், எப்படிப்பட்டதென்றால்:—தேவருணம், ரிஷிருணம், பிதுர் ருணம், இம்மூன்று. இவைகளை கிரகஸ்தன் தீர்க்கக்கடமைப்பட்டவன். எப்படியென்றால்; யக்கியத்தினாலே தேவருணத்தையும், பிரும்மசாரியவிருத்தத்தினாலே ரிஷிகளுடைய ருணத்தையும், புத்திரனையுண்டாக்குவதினாலே பிதுர் ருணத்தையும் தீர்க்கவேண்டும்.

கூடமாய் (மறைவாய்) சஞ்சரிக்கவேண்டியது. காமம் குரோதம் கருவம் ஆசை மோகம் முதலான தோஷங்களை விட்டுவிட்டு பரிவிராடானவன் தன்னுடையதென்று ஒன்று மில்லாதவனாக வாகவேண்டும். ஆசை துவேஷமற்றவனும் மண்கட்டி, கல்லு, தங்கம் இவைகளைச் சமமாகப் பார்க்கிறவனும் பிராணி ஹிம்சை செய்யாதவனும் சகலத்திலிருந்தும் விடுபட்டவனுயு மிருக்கிறவன் முனியாகிறான். டம்பாகங்காரத்திலிருந்து விடுபட்டவனும்,ஹிம்சை கோட்சொல்லுதல் இவைகளை விட்டவனுயு மிருக்கிற ஆத்மஞானத்தோடுகூடின எதியானவன் மோக்ஷத்தை யடைகிறான். இந்திரியங்களுடைய (விஷயங்களில்) பற்றுதலினாலே தோஷத்தை யடைகிறான். சந்தேகமில்லை. அவைகளை யடக்கினால் சித்தியை யடைகிறான். காம போகத்தினால் (காமத்தை யனுபவித்ததினால்) காமமானது ஒருக்காலும் அடங்குகிறதில்லை. ஹவிஸ் (நெய் முதலியன) னாலே அக்கினியானது விருத்தி யாகிறது போல அந்தக் காமமானது (அனுபவத்தினாலே) விருத்தியாகிறது. கேட்டு, தொட்டு, புஜித்து, பார்த்து, முகர்ந்து எந்தமனிதன் சந்தோஷத்தையும், விசனத்தையு மடைகிறதில்லையோ, அவன் ஜிதேந்திரியனென்று அறியப்படத்தக்கவன். எவனுடையவாக்கும், மனசும் சுத்தமாயும் எப்போதும் நன்றாயடங்கியு மிருக்கின்றனவோ அவன் வேதாந்தத்தினாலுண்டான பலன்முழுதையும் அடைகிறான். எந்தப்பிராம்மணன் விஷத்தைப்போல வெகுமானத்தினால் எப்போதும் பயப்படுகிறானோ, அமிருதத்தைப்போல் அவமானத்தை எப்போது மிச்சிக்கிறானோ அவன் அவமரியாதை செய்யப்பட்டாலும் சுகமாய் நித்திரைசெய்கிறான். சுகமாய் எழுந்திருக்கிறான். சுகமா யிந்தலோகத்தில் சஞ்சரிக்கிறான். அவனை அவமானம் செய்தவன் நசித்துப் போகிறான். கொரமான வார்த்தையைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். ஒருவனையும் அவமானம் செய்யக்கூடாது. இந்தத் தேகசம்பந்தத்தைக்கொண்டு ஒருவனையும் விரோதிக்கலாகாது. கோபிக்கிறவனைக் குறித்து பதில் கோபிக்கக்கூடாது. இழுக்கப்பட்டாலும் நல்வார்த்தை சொல்லவேண்டும். ஏழுதுவார்ங்களுக்கு (கண்-உ, காது-உ, மூக்கு-உ, வாய்-க, ஆக-எ) துன்பம் நேரிட்டாலும் பொய்சொல்லலாகாது. ஆத்மாவிடத்தில் சந்தோஷமுள்ளவனாய் அபேக்ஷை யற்றவனாய் (ஒருவனுக்கும்) அநுக்கிரகம் செய்தலற்றவனாய் சுகத்தை விரும்புகிறவன் ஆத்மசகாயத்தினாலேயே இந்தப் பிரபஞ்சத்தில் சஞ்சரிக்கவேண்டியது. இந்திரியங்களை யடக்குவதினாலேயும் ஆசைதுவேஷங்கள் நசித்துப் போவதினாலேயும் பூதங்களுக்கு ஹிம்சைசெய்யாததினாலேயும் மோக்ஷத்திற்கு அருகனாகிறான். எலும்புத்தூணும் நாம்பினால் கட்டப்பட்டதாயும் மாம்சம் ரக்தமிவைகளால் பூசப்பட்டதாயும் தோலினால் மூடப்பட்டதாயும் துர்க்கெந்தமுள்ளதாயும் மலமூத்திரங்கள்

நிறைந்ததாயும் கிழத்தனம் துக்கம் இவைகளால் சூழப்பட்டதாயும் ரோகத்திற்கிருப்பிடமாயும் அழுக்குள்ளதாயும் (பஞ்ச) பூதங்களுக் கிருப்பிடமாகியு மிருக்கிற இந்தச்சரீரத்தை (சரீரத்திலபிமானத்தை) விட்டுவிடவேண்டியது. மாம்சம், இரத்தம், சீழ், மலமூத்திரம், நரம்பு, கொழுப்பு, எலும்பு இவைகளுடைய கூட்டமாகிய தேகத்தில் மூடன் பிரீதியுள்ளவனாயிருந்தால் அவன் அப்படியே நரகத்திலும் (பிரீதியுள்ளவனாய்) இருப்பான். தேகமே நான் என்கிற இருப்பு எதுவோ அதுதான் "கால சூத்திர" மென்கிற நரகஸ்தானம். அது தான் "மகாவீசிவாகுரா" என்கிற நரகம். அதுதான் "அசிபத்திர வனசிரோணீ" என்கிற நரகம். (ஆகையால்) தேகமே யாத்மாவென் கிற இருப்பானது சகலமும் நாசமடைந்தாலும் சருவப்பிரயத்தினத் தினாலும் தள்ளத்தக்கது. நாய் மாம்ஸத்தை வைத்துக்கொண்டிருக் கிற புல்கஸி (தாழ்ந்தஜாதிஸ்திரீ)யை தொடக்கூடாததுபோல் தேக மே ஆத்மாவென்கிற இருப்பானது க்ஷேமத்தைக் கோறுகிறவனாலே தொடத்தகுந்ததல்ல. (மோக்ஷத்திற்கு அருகனாயிருக்கிறவன்) தனக் குப்பிரியமா யிருக்கிறவர்களிடத்தில் புண்ணியத்தையும் அப்பிரிய மானவர்களிடத்தில் பாபத்தையும் விட்டுவிட்டுத் தியானயோகத்தி னாலே சாசுவதமான பிர்ம்மத்தை யடைகிறான். இந்த விதியினாலே மெள்ள மெள்ள சகல சங்கங்களையும் விட்டு துவந்துவங்களினால் விடு பட்டவனாய் பிர்ம்மத்தினிடத்திலேயே யிருக்கிறான். சித்தியின்பொ ருட்டு சகாயமற்றவனாய் ஒருவனாகவே சஞ்சரிக்கவேண்டியது. ஒருவ னுடைய சித்தியை (ஒருவனாயிருப்பதினா லுண்டாகும் பிரயோஜனத் தை) அறிந்தவன் (அந்தச் சித்தியிலிருந்து) நழுவுகிறதில்லை. குறை வையடைகிறதுமில்லை. பிக்ஷாபாத்திரம், மரத்தினடிவாசம், கந்தை வஸ்திரம், சகாயமற்றிருத்தல், சகலவஸ்துவிலும் சமமாயிருக்கும் தன் மை இவைகள் முக்தனுடைய லக்ஷணம். சகலப்பிராணிகளுக்கும் நன் மையைக் கோறுகிறவனாயும், சாந்தனாயும், திருதெண்டி (மூன்று சிறிய மூங்கில் சேர்த்துக்கட்டிய தடியையுடையவன்) யாயும், கமண்டலுவை யுடையவனாயும், ஒன்றில் (பிர்ம்மத்தில்) ரமித்துக்கொண்டிருக்கிறவனா யு மிருக்கிறவன் சந்நியாசம் வாங்கிக்கொண்டு பிக்ஷைக்காக கிராமத் தில் பிரவேசிக்கலாம். இப்படிப்பட்ட ஒருவன் பிக்ஷு (சந்நியாசி) வா கிறான். இரண்டுபெயர் சேர்ந்தால் மிதுனமென்று சொல்லப்படுகிறது. மூன்றுபெயரானால் கிராமமென்று சொல்லப்படுகிறது. அதற்குமேல் ப்பட்டால் நகரமாகிறது (இரண்டு மூன்று நான்கு சந்நியாசிகள் சே ர்ந்திருக்கக்கூடாது. அப்படியிருந்தால் கிராமத்திலும் நகரத்திலும் வசித்ததுபோலாகும் என்பது கருத்து). நகரமாவது மிதுனமாவது கிராமமாவது செய்யலாகாது. இம்மூன்றும் செய்கிற எதியானவன் தன் தருமத்திலிருந்து நழுவிப்போகிறான். சேர்ந்திருப்பதினாலே

இராஜசம்பந்தம் முதலான்வார்த்தைகளும், பிக்ஷசம்பந்தமான வார்த்தைகளும், சிநேகம், கோட்சொல்லுதல், மாச்சரியம் இவைகளும் ஒருவருக்கொருவருண்டாகும். இதில் சந்தேகமில்லை. ஒன்றிக்காரனாகவும், ஒன்றிலுமாசையற்றவனாகவு மிருக்கவேண்டும். ஒருவனுடனும் பேசக்கூடாது. எதியானவன் எப்போதும் பிரதிவாக்கியத்திலும் நாராயணாவென்று உச்சரிக்க வேண்டும். ஒருவனாகவிருந்துகொண்டு மனோவாக்காய கருமங்களினாலே பிர்ம்மத்தை சிந்திக்கவேண்டும். இறப்பதற்காவது உயிர்வாழ்வதற்காவது சந்தோஷப்படக்கூடாது. ஆயுள் முடிகிறவரையில் காலத்தை எதிர்பார்த்திருக்கவேண்டியது. மரணத்திற்காக சந்தோஷப்படக்கூடாது. ஜீவித்திருப்பதற்காக சந்தோஷப்படக்கூடாது. கூலிக்காரன் கூலிக்காகக் குறித்த காலத்தை எதிர்பார்த்திருக்கிறதுபோல இருக்கவேண்டியது. ஊமையாயும், நபும்ஸகனாயும், முடவனாயும், குருடனாயும், செவிடனாயும், ஜடனாயு மிருக்கிற எதியானவன் இந்த ஆறுகளினாலே (இந்த ஆறுவித குணங்களை யனுசரிப்பதினாலே சமுசாரத்திலிருந்து) விடுபடுகிறான். சந்தேகமில்லை. உண்கிறவனானாலும் இது நன்றாயிருக்கிறது இது நன்றாயில்லை என்கிற விஷயத்தில் எவன் அபிமானம் வைக்கிறதில்லையோ, ஹிதமாயும் சத்தியமாயும் மிதமாயும் எவன் பேசுகிறானோ, அவனை ஊமையென்று சொல்லுகிறார்கள். இப்போது பிறந்த பெண்ணையும் நூறுவயதுள்ளவளையும் பார்த்து எப்படி விகாரமடைகிறதில்லையோ, அப்படி பதினாறுவயதுள்ளவளைபார்த்தாலும் விகாரமடையாதவனெவனோ, அவன்தான் நபும்ஸகன். பிக்ஷைக்காகவும் மலஜலம் விடுகிறதற்காகவும் எவனுடைய சஞ்சாரம் ஒருயோஜனை தூரத்திற்கு அதிகமில்லையோ அவன் முடவனே. நின்றாலும் நடந்தாலும் எவனுடைய பார்வை நான்கு நுகத்தடிதூரம் பூமியைவிட்டுப் போகிறதில்லையோ அந்தப்பரிவிராட் குருடனென்று சொல்லப் படுகிறான். ஹிதம் அஹிதம் மனசுக்குச் சந்தோஷம் விசனம் இவைகளை யுண்டு பண்ணப்பட்டவார்த்தையைக் கேட்டாலும் கேட்காதவன்போலிருக்கிறவன் செவிடனென்று சொல்லப்படுகிறான். விஷயங்கள் சமீபத்திலிருந்தாலும் அதில் கலங்காத இந்திரியங்களை யுடையவனாய் தூங்குகிறவனைப்போல் எப்போதுமிருக்கிற சமர்த்தனாகிய சந்நியாசி ஜடனென்று சொல்லப்படுகிறான். நடனம் முதலிய காக்ஷி, சூதாடல், ரம்மியமானஸ்திரீ, புஜிக்கத்தக்கவஸ்து, அனுபவிக்கத்தக்க வஸ்து, தூரஸ்திரீ இவ்வாறையும் ஒருக்காலும் பார்க்கக்கூடாது. பிறரைக் குறித்து ஆசை, துவேஷம், கருவம், கபடம், துரோகம், மோகம் இவ்வாறையும் எதியானவன் எப்போதும் மனதில்கூடச் சிந்திக்கக்கூடாது. கட்டில், வெள்ளைவஸ்திரம், ஸ்திரீகளுடையகதை, ஆசை, பகல் நித்திரை, வாகனங்கள் இவ்வாறும் எதிகளுக்குப் பாபகரமானவைகள்.

ஆத்மசிந்தை செய்கிற (எதியான)வன் தூரயாத்திரையைப் பிரயத்தினத்தினால் விலக்கத்தக்கது. முக்திக்கேதுவான உபநிஷத்தாகிய வித்தையை எப்போதும் அப்பியசிக்கவேண்டியது. எதியானவன் நித்தியம் ஸ்நானம் செய்யவேண்டியதில்லை. உபவாசம் செய்யவேண்டியதில்லை. அத்தியயனம் செய்கிறவனாயிருக்கவேண்டியதில்லை. வியாக்கியானம் செய்கிறவனாயிருக்கவேண்டியதில்லை. பாபமற்றதும், மோசமற்றதும், கபடமற்றதுமான நடத்தையை நித்தியம் ஆசரிக்கவேண்டியது. ஆமை தன்அவயவங்களை உள்ளுக்கிழுத்துக்கொள்ளுவதுபோல இந்திரியங்களை யடக்கிக்கொண்டு நசித்துப்போன இந்திரியமனோவிருத்தியுள்ளவனாய், ஆசையற்றவனாய், தனக்கு வேண்டுமென்று எந்த வஸ்துவையும் வைத்துக்கொள்ளாதவனாய், துவந்துவ மற்றவனாய், நமஸ்காரமற்றவனாய், பிதுர்தேவதா ஆகுதியற்றவனாய், மமதையற்றவனாய், அகங்காரமற்றவனாய், அபேக்ஷையற்றவனாய், சுகானுபவம் வேண்டுமென்கிற விருப்பற்றவனாய், ஜனங்களில்லாதவிடத்தில் வாசம் செய்கிறவனாய் இருக்கிறவனெவனோ அவன் (பெந்தத்திலிருந்து) விடுபடுகிறான். சந்தேகமில்லை.

ஜாக்கிருதையுள்ளவனாயும் கருமபக்திஞானமுடையவனாயும் சுவதந்தரனாயு மிருக்கிற பிரும்மசாரியாவது கிரகஸ்தனாவது வானபிரஸ்தனாவது முக்கியவிருத்தியை (தானெந்தாசிரமத்திற்குத் தகுந்தவனென்பதை) யறிந்தவனாய் (தன்னாசிரமத்தில்) வைராக்கியம் (வெறுப்பு) அடைந்து பிரும்ம சரியத்தை முடித்து கிரகஸ்தனாகவாகலாம். கிரகஸ்தாசிரமத்திலிருந்து வானபிரஸ்தாசிரமத்தில் பிரவேசித்து சந்நியாசம் வாங்கிக்கொள்ளலாம். அல்லது பிரும்மசரியாசிரமத்தி லிருந்தேயாவது கிரகஸ்தனாகவிருந்தாவது வானபிரஸ்தனாகவிருந்தாவது சந்நியாசம் வாங்கிக்கொள்ளலாம். மேலும் விருதமில்லாதவனாவது விருதமுள்ளவனாவது ஸ்நாதகனாவது * அஸ்நாதகனாவது நின்றுபோன அக்கினியையுடையவனாவது அக்கினியில்லாதவனாவது எந்ததினத்தில் வைராக்கியமுண்டாகிறதோ அந்ததினத்திலேயே சந்நியாசம் செய்துகொள்ளலாம். அந்தவிஷயத்தில் (இப்படிப்பட்ட சந்நியாசவிஷயத்தில்) பிராஜாபத்திய சம்பந்தமான இஷ்டி (யக்ஞம்) யையே சிலர் செய்கிறார்கள். அல்லது அதைச்செய்யாமல் ஆக்கினேயயிஷ்டியையாவது செய்யலாம்.

---

* மூன்றுவகை ஸ்நாதகர்கள். அவர்களாவெனில், வித்தியாஸ்நாதகன், விருதஸ்நாதகன், உபயஸ்நாதகன். பிரும்மசாரி ஆசிரமத்திலிருந்து வேதாத்தியயனத்தைப் பூர்த்திசெய்து நியமமான விருதங்களை நிறைவேற்றாதவன் வித்தியாஸ்நாதகன். நியமமான விருதங்களைப் பூர்த்திசெய்து வேதாத்தியயனத்தைப் பூர்த்திசெய்யாதவன் விருதஸ்நாதகன். மேல்கண்ட இரண்டையும் பூர்த்தியாய் நிறைவேற்றினவன் உபயஸ்நாதகன். மனுஸ்மிருதி ௩-வது அத்தியாயம் ௨-வது சுலோகத்தையும், அதற்கு குல்லூகபட்டர் செய்திருக்கிற வியாக்கியானத்தையும் பார்க்க.

அக்கினியேப் பிராணனல்லவா? இந்த இஷ்டியினாலே பிராணத்திற்கு வீரியமுண்டாக்கிறான். ஆகையினாலே, இதினாலேயே மூன்றுதாது சம்பந்தமான இஷ்டியையே செய்யவேண்டும். மூன்றுதாதுக்கள் சத்துவ ரஜஸ்தமஸ்களே. "அயம் தே யோநிர் ருத்வியோ யதோ ஜாதோ அரோசதா: தம் ஜாநந்நக்ந ஆரோஹாதா நோ வர்த்தயா ரயிம்॥" என்கிற இந்தமந்திரத்தினாலே அக்கினியை கிரகிக்கவேண்டியது. "ஏஷ வா அக்நேர் யோநிர் ய: ப்ராண: ப்ராணம் கச்ச ஸ்வாம் யோநிம் கச்ச ஸ்வாஹா"॥ என்று இப்படியே சொன்னார். (சுருதியில் சொல்லியிருக்கிறார் என்று தாத்பரியம்). ஆகவநீயத்திலே யிருந்து அக்கினியைக் கொண்டுவந்து முன்போல் (முன்சொல்லியிருக்கிற மந்திரங்களினால்) கிரகிக்கவேணுடியது. (ஆகவநீய) அக்கினிகிடைக்காவிட்டால் ஜலத்தில் ஹோமம் செய்யவேண்டியது. "ஆபோ வை ஸர்வா தேவதா: ஸர்வாப்யோ தேவதாப்யோ ஜுஹோமி ஸ்வாஹா" என்று ஹோமம் செய்து அந்த ஜலத்தை எடுத்து பிராசனம் (குடித்தல்) செய்யவேண்டியது. "ஸாஜ்யம் ஹவிரநாமயம் மோக்ஷதம்" என்று மந்திரத்தைச்சொல்லி சிகை (குடுமி) யக்ஞோபவீதம் (பூணூல்) தகப்பன் புத்திரன் களத்திரம் கருமம் அத்தியயநம் மற்றமந்திரங்கள் இவைகளை விட்டுவிட்டு சந்நியாசி யாகிறான். ஆத்மவித்தானவன் மூன்றுவிதமான மோக்ஷமந்திரங்களினாலே அந்த பிர்ம்மத்தை உபாசிக்க வேண்டியதென்று (சுருதி) சொல்லுகிறது.

மறுபடி நாரதர் பிரும்மாவை நோக்கி யக்கியோபவீதமில்லாதவன் எப்படி பிராம்மணனாகிறானென்று கேட்டார். அதற்கு பிதாமகர் சொல்லுகிறார். ஞானியானவன் குடுமியுடன் க்ஷவரம் செய்துகொண்டு வெளிப்பூணூலை எடுத்துவிடவேண்டியது. நாசமற்றதாயும் சிரேஷ்டமாயு மிருக்கிற பிர்ம்மமெதுவோ அதை சூத்திரமாக (பூணூலாக) தரித்துக் கொள்ளவேண்டும். சூசிப்பிக்கிற (குறித்துக்காட்டுகிற) தினாலே சூத்திரமென்று சொல்லுகிறார்கள். சூத்திரமென்பது பரமபதம் (உத்தமமான ஸ்தானமாகிய பிர்ம்மம்). எவனால் அந்த சூத்திரமானது அறியப்படுகிறதோ அவன் பிர்ம்மணன். (அவன்) வேதத்தைக் (வேதமாகிய சமுத்திரத்தை) கரைகண்டவன். சூத்திரத்தில் (கயிற்றில்) மணிகள் கோர்க்கப்பட்டிருப்பதுபோல இந்தப்பிரபஞ்சமானது எதினால் கோர்க்கப்பட்டிருக்கிறதோ அந்த (பிர்ம்ம) சூத்திரத்தை, யோகத்தையும் தத்துவத்தையும் அறிந்த யோகியானவன் தரிக்கவேண்டியது. உத்தமமான யோகத்திலிருக்கிற வித்துவான் வெளிச்சூத்திரத்தைத் தள்ளிவிடவேண்டியது. இந்தப் பிர்ம்மபாவமாகிய இந்த சூத்திரத்தைத் தரித்தவன்தான் சேதனன் (ஞானி). இந்த சூத்திரத்தைத் தரிக்கிறதினால் அது உச்சிஷ்டம் (தள்ளிவிடத் தக்கது) ஆகிறதுமில்லை. அசுசியாகிறது மில்லை. ஞானயக்கியோபவீதர்களாயிருக்கிற எவர்க

ளுக்குச் சூத்திரம் அந்தர்கதமாய் (உள்ளுக்குள்ளாக) இருக்கிறதோ அவர்கள்தான் சூத்திரத்தை யறிந்தவர்கள். அவர்கள்தான் யக்ஞோபவீதத்தையுடையவர்கள். ஞானத்தை குடுமியாயுடையவர்கள் ஞானநிஷ்டையை யுடையவர்கள் ஞானயக்கியோப வீதத்தை யுடையவர்கள் இவர்களுக்கு ஞானமே சிரேஷ்டமானது. ஞானமே பரிசுத்தம் பண்ணத்தகுந்ததென்று சொல்லப்படுகிறது. அக்கினிக்கொழுந்துபோல எவனுக்கு ஞானமயமான குடுமியிருக்கிறதோ அந்த வித்துவான்தான் (சிகி) குடுமியுள்ளவனென்று சொல்லப்படுகிறான். மயிர்களையுடைய மற்றவர்கள் சிகிகளல்ல. வைதீக சம்பந்தமான கருமத்தில் அதிகாரமுள்ள பிராம்மணாதிகள் யாரோ அவர்களால் கிரியைக்கு அங்கமாக இந்த (பிராகிருத) சூத்திரம் தரிக்கத்தக்கது. அது வைதிகமானது. ஞானமயமான சிகையும் தன்மயமான உபவீதமும் எவனுக்கிருக்கின்றனவோ அவனுக்குத்தான் சகலப் பிராம்மண்ணியமுமென்று பிர்ம்மவித்துக்கள் அறிகிறார்கள். இதையறிந்து பிராம்மணனானவன் சந்நியாசம் பெற்றுக்கொண்டு (அப்படி) சந்நியாசியானவன் சரீரவருத்தத்தைப் பொறுக்கமாட்டாதவனானால் ஒருவஸ்திரத்தை யுடையவனையும் மொட்டத்தலையனையும் தனக்கு வேண்டுமென்று ஒருவஸ்துவையும் வைத்துக்கொள்ளாதவனையும் அல்லது விதிப்படியானால் பிறந்த மேனியாயும் (அவதூதனையும்) தன்னுடைய புத்திரமித்திர களத்திர ஆப்தபந்துக்கள் முதலியவர்களையும் வேதாத்தி யயனத்தையும் சகல கருமங்களையும் இந்த சகலமான பிரும்மாண்டத்தை (பிரும்மாண்டத்தில் பற்றுதலை)யும் கோவணத்தையும் தெண்டத்தையும் போர்வையையும் விட்டு இருமைகளை சகித்துக்கொண்டவனாய். சீதமில்லாதவனாய் உஷ்ணமில்லாதவனாய் சுகமில்லாதவனாய் துக்கமில்லாதவனாய் தூக்கமில்லாதனாய் மானவமான மில்லாதனாய் ஷடூர்மி யற்றவனாய் அகங்கார மற்றவனாய் மாச்சரியம், கருவம், டம்பம், பொறாமை, பரநிந்தை, இச்சை, துவேஷம், சுகதுக்கம், காமம், குரோதம், லோபம், மோகம் முதலியவைகளை விட்டவனாய் தன் சரீரத்தைப் பிணத்தைப்போல நினைத்து தனக்கன்னியமான உள்ளும் வெளியுமாயிருக்கிற எல்லாவற்றையும் நினைக்காதவனாய் ஒருவருக்கும் நமஸ்காரம் செய்யாதவனாய் தேவபிதுர் ஆராதனை யற்றவனாய் நிந்தாஸ்துதி யற்றவனாய் எதேச்சையாய் சஞ்சரிக்கவேண்டியது. விரும்பாமல் கிடைத்ததில் திருப்தியடைந் திருக்கவேண்டியது. தங்கம் முதலியவைகளை வாங்கக்கூடாது. (விக்கிரகாதி) ஆவாகனமுமில்லை. விஸர்ஜனமுமில்லை. மந்திரமுமில்லை. அமந்திரமுமில்லை. தியானமுமில்லை. உபாசனையுமில்லை. இலக்ஷியமுமில்லை. அலக்ஷியமுமில்லை. வேறென்பதுமில்லை. வேறல்லவென்பதுமில்லை. வேறேயிட மில்லாதவனையும் வாசஸ்தல மில்லாதவனையும் ஸ்திரபுத்தி யுள்ளவனையும் சூனியமானவீடு, மரத்தடி,

தேவாலயம், பில்லுக்குப்பல், குசவன்சாலை, அக்கினிஹோத்திரசாலை, எக்கியசாலை, நதி, தடாகம், மணல்திட்டு, நிலவறை, குகை, அருவி, எக்கியத்திற்குச் சித்தமாயிருக்கிறபூமி, இவைகளிலாவது வனத்திலாவது சுவேதகேது, ரிபு, நிதாகர், ஜடபரதர், ரிஷபர், தூர்வாசர், சம்வர்த்தகர், ஸநத்ஸுஜாதர், ஜனகர், வடசித்தர், சுகர், வாமதேவர், தெத்தாத்திரேயர், ரைவதகர், கோரக்ஷர், இவர்களாகிய அவதூதரைப்போல் இன்னாரென்று அடையாளம் தெரியத் தகாதவனாயும் இன்ன ஆசார முடையவனென்று அறியக் கூடாதவனாயும் பாலனைப் போலவும் பைத்தியக்காரனைப் போலவும் பிசாசுபோலவும் பைத்தியக்கார னல்லாதவனானாலும் பைத்தியக் காரனைப்போல் நடக்கிறவனாய் திருதெண்டத்தையும் சிக்கியத்தையும் (கயிற்றினால் செய்யப்பட்ட ஒருவிதமானவை) பாத்திரம் கமண்டலு அரைஞாண் கோவணம் தடி வஸ்திரம் இவையெல்லாவற்றையும் ஜலத்தி லெறிந்துவிட்டு பின்பு பிறந்த மேனியாய் சஞ்சரிக்கவேண்டியது. ஆத்மவிசாரம் செய்யவேண்டியது. எப்படிப் பிறந்தமேனியை யடைந்தானோ அப்படியே இருமையற்றவனாய் ஒன்றையும் கிரகிக்காதவனாய் வாஸ்தவமான பிர்ம்மமார்க்கத்தில் செவ்வையா யமைந்தவனாய் மனச்சுத்தியுடையவனாய்ப் பிராண சம்ரக்ஷணைக்காக நியமமான காலத்தில் கைய்யே பாத்திரமாக் அல்லது வேறு பாத்திரத்தில் கேட்காமலே கிடைக்கு மாகாரத்தைப் புஜித்துக்கொண்டும் லாபா லாபங்களில் சமமாயிருந்துகொண்டும் என்னுடைய தென்கிற தில்லாதவனாய் பிர்ம்மத்தைத் தியானம்செய்துக்கொண்டவனாய் ஆத்ம நிஷ்டையையுடையவனாய் சுபாசுப கருமங்களை வேருட னறுத்தவனாய் சகலத்தையும்விட்டு பூர்ணாநந்த யேகக் கியான முடையவனாய் அந்தப் பிர்ம்மம் "நானே" என்று பிர்ம்மப் பிரணவத்தை ஸ்மரித்துக்கொண்டு பிரமரகீட ஞாயமாக * மூன்று † சரீரங்களையும் விட்டு சந்நியாசத்தோடு எவன் தேகத்தை விடுகிறானோ அவன் செய்யவேண்டியதெல்லாம் செய்தவனாகிறான், என்று உபநிஷத்.

மூன்றாவ துபதேச முற்றிற்று.

---

* பிரமரகீடஞாயமென்றால், குளவி அல்லது வண்டானது பச்சைவர்ணமுள்ள ஒரு புழுவைப் பிடித்துவந்து ஒரு துளைக்குள்வைத்து அந்தப்புழுவைத் தன் கூர்மையான மூக்கினால் கொட்டுகிறது. இப்படி பிரதிதினம் சிலகாலம் வரையில் கொட்டிக் கொண் டிருக்கிறது. அந்தப் புழு வண்டுகொட்டுவதைச் சகிக்கமாட்டாமல் வருத்தமடைந்து இடைவிட்டபோதெல்லாம் வண்டுவந்து கொட்டப்போகிறதே யென்ற பயத்தினாலேயே எப்போதும் நினைத்துக்கொண் டிருக்கிறது. இப்படிச் சிலகாலமிருக்கையில் அந்தப்புழு வண்டாகவாய் விடுகிறது. அப்படிப்போல் ஜீவனானவன்தான் பிரம்மமென்றே எப்போதும் நினைப்புள்ளவனானால் பிர்ம்மமாய் விடுகிறான்.

† ஸ்தூல, சூக்ஷ்ம, காரண, தேகங்கள்தான் மூன்று சரீரங்கள்.

## ச - வது. உபதேசம்.

உலகங்களை (உலகவியாபாரங்களை) யும் வேதங்களையும் விஷயங்களையும் இந்திரிய (வியாபார) ங்களையும்விட்டு ஆத்மாவினிடத்திலே (இதர வஸ்துக்களைப் பாராமல் ஆத்மதிருஷ்டியிலே) யே எவனிருக்கிருனே அவன் சிரேஷ்டமான கேதியை (மோக்ஷத்தை) யடைகிருன். நாம கோத்திரம் முதலிய ஏற்பாட்டையும் தேசத்தையும் காலத்தையும் தான் கேட்டிருக்கிற வேதம் முதலியவைகளையும் குலத்தையும் வயதையும் சரித்திரத்தையும், விருதத்தையும், நடத்தையையும் நல்ல எதியானவன் பிரசித்தப்படுத்தலாகாது. ஸ்திரீயுடன் பேசக்கூடாது. முன்பார்த்த யாதொரு ஸ்திரீகளுடைய ஞாபகமும் கூடாது. ஸ்திரீகளைப்பற்றிய கதையை விட்டுவிட வேண்டியது. சித்திரத்திலிருக்கிற ஸ்திரீசுரூபத்தைக்கூடப் பார்க்க லாகாது. ஸ்திரீகளுடைய (விஷயமான) இன்னுன்கையும் மோகத்தினுல் ஆசரிக்கிற எதிக்குச் சித்தமானது அவசியம் விகாரத்தை யடைகிறது. அந்த விகாரத்தினுல் நாசமடைகிருன். ஆசை குரோதம் பொய் வஞ்சனை லோபம் மோகம் பிரியாப்பிரியம் சிற்பவேலை உபந்நியாசம் யுக்தி காமம் ராகம் யாசித்தல் அகங்காரம் மமதை வைத்தியம் தருமம் செய்யவேண்டுமென்கிற பிடிவாதம் பிராயச்சித்தம் தேசசஞ்சாரம் மந்திரௌஷதங்களினு லடையும் சித்தி இவைகள் (எதிக்கு) தடுக்கப்பட்டிருக்கின்றன அப்படித் தடுக்கப்பட்டிருக்கிற இந்தக் காரியங்களை அநுஷ்டிக்கிற (எதியான) வன் அதோ (தாழ்ந்த) கெதியை யடைகிருன். மோக்ஷத்தையே சிரேஷ்டமான ஸ்தானமாகவுடைய முனியானவன் தனக்கு ஒருவன் சுகிருத்தாக (அதிக சிநேகிதனுக) விருந்தாலும் அவனை "வா, போ, இரு, நல் வரவா" என்ற மரியாதையான வார்த்தைகளையும் சொல்லக்கூடாது. பிரதிக்கிரகம் (தானம் முதலியவைவாங்குதல்) கூடாது. அந்நியனுக்கு (தானம் முதலியவை) கொடுப்பிவிக்கவும் கூடாது. சந்நியாசியானவன் சுவப்னத்திலும் ஒருபோதும் (ஒருவனையும்) ஏவக்கூடாது. பெண்ஜாதி, சகோதிரன், பிள்ளைமுதலான பந்துக்களுடைய சுபாசுபத்தைக் கண்டாலும் கேட்டாலும் அதினுல் சலிக்கக் கூடாது. எதியானவன் சந்தோஷ விசனங்களை விட்டுவிடவேண்டும். பிறருக்குத் துன்பம் செய்யாமை, பொய்யின்மை, களவாமை, பிரும்மசரியம், பொருளீட்டாமை, கருவமின்மை, எளிமைத்தன மின்மை, பிரசாதம் (மனத்தெளிவு), மன உற்றி, நேர்மை, பற்றின்மை, குருசுசுருஷை, சிரத்தை, பொருமை, மனதையடக்கல், இந்திரியங்களை யடக்கல், அசட்டை, ஸ்திரபுத்தி, மதுரமானவார்த்தை, சகித்தல், கருணை, அப்படியே லெச்சை, ஞானம், விக்கியானம் (பகுத்தறிவு), யோகம், மிதாகாரம், தைரியம், இவைகள் மனதையடக்கிய எதிகட்கு சுவதருமமென்று பிரசித்தமாயிருக்கிறது. இரு

மையற்றவனும் எப்போதும் சுத்த சத்துவகுணத்தை யாசிரயித்தவனும் சகலத்தையும் சமமாய் (பிரும்ம சுவரூபமாய்) பார்க்கிறவனுமிருக்கிற சந்நியாசாசிரமத்தையுடைய பரம ஹம்ஸனாயிருக்கிற எதியானவன் சாக்ஷாத் நாராயணனே. (சந்நியாசியானவன்) கிராமத்தில் ஒருநாள் வசிக்கலாம். நகரத்தில் ஐந்துநாள் வசிக்கலாம். வருஷாகாலத்தில் (கிராமத்தில் அல்லது நகரத்தில்) நான்குமாதம் வசிக்கலாம். மற்ற (காடு வனம் மலை முதலிய) விடங்களில் மற்ற நாள்களில் (மேலாக் குறிக்கப்பட்ட நாள்கள்தவிர மற்ற நாள்களில்) வசிக்கவேண்டும். சந்நியாசியானவன் கிராமத்தி லிரண்டுநாள் வசிக்கக்கூடாது. வசித்தால் ஆசை முதலியவை சம்பவிக்கும். அதினா லவன் நரகத்திற்குப் பாத்திரனாகிறான். கிராமத்தின் கடைசியில் ஜனங்களில்லாத விடத்தில் மனதை யடைக்கினவனாய் இருப்பிட மில்லாதவனாய் பூமியில் புழுப்போல (புழுஊர்ந்து போவதினால் ஜந்துக்களுக்குத் துன்பமில்லாததுபோல) சஞ்சரிக்கவேண்டியது. வருஷாகாலத்தி லோரிடத்திலிருக்கலாம். ஒரு வஸ்திர முடையவனாகவாவது வஸ்திர மில்லாதவனாகவாவது ஒரே (பிரம்ம மொன்றிலேயே) திருஷ்டி யுடையவனாய். (விஷய) ஆசையற்றவனாய் சத்துக்களுடைய நடக்கையை தூஷிக்காதவனாய் தியானத்தோடு கூடினவனாய் பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. சந்நியாசியாகிற யோகியானவன் சுவதருமத்தை (சந்நியாசதருமத்தை) பரிபாலனஞ் செய்துகொண்டு பரிசுத்தமான தேசத்தில் பூமியைப் பார்த்துக்கொண்டு சஞ்சரிக்கவேண்டியது. இராத்திரியிலும் மத்தியானத்திலும் இருசந்திகளிலும் சூனியத்திலும் (பொட்டலான ஸ்தலத்திலும்) வருத்தப்பட்டுப் போகத்தக்க விடத்திலும் பிராணிகளுக்குத் துன்பமுண்டாகத்தக்க விடத்திலும் (எதி) சஞ்சரிக்கக்கூடாது. கிராமத்தில் ஒரு நாளும் பட்டணத்தில் * மூன்றுநாளும் புர † த்தி லிரண்டுநாளும் நகர ‡ த்தில் ஐந்து நாளும் வசிக்கலாம். பூர்ணமாய் ஜலங்களினால் சூழப்பட்டிருக்கிற ஒரு ஸ்தலத்தில் வருஷாகாலத்தி லிருக்கலாம். சந்நியாசியானவன் சகலப் பிராணிகளையும் தன்னைப்போல் (ஆத்ம சுவரூபமாக) பார்த்துக்கொண்டு குருடனைப்போலவும் கூனனைப் போலவும் செவிடனைப் போலவும்

* பட்டணமென்றால், அநேக பெரியவீடுகளும் அநேக ஜனங்களு முள்ளதாயும் கிராமத்தைவிடப் பெரிதாயும் நகரத்தைவிட சிறியதாயு முள்ளது. கும்பகோணபட்டணம், நாகபட்டணம், போலொத்தது.

† புரமென்றால், பெரியவீடுகளும் வெகுஜனங்களும் வாசம்செய்வதாயும் அரண் செய்யப்பட்டிருக்கிற கோட்டையுள்ளதாயும், நீளத்தில் ஒருகோல [illegible]ரத்திற்குக் குறையாததாயு மிருக்கிறது.

‡ நகரமென்றால், அநேக மெத்தைவீடுக ளுள்ளதாயும், பட்டணம் புரத்தைவிடப் பெரிதாயும், இராஜதானியாயு மிருக்கிறது. சென்னைநகர், கல்கத்தா[illegible], தஞ்சை நகரம்போ லொத்தது.

பைத்தியக்காரனைப் போலவும் ஊமையைப் போலவும் பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. பெகூதகனும் * வானப்பிரஸ்தனும் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்யவேண்டியது. ஹம்ஸன் விஷயத்தில் ஓரேதடவை ஸ்நானம் சொல்லப்பட்டிருக்கிறது. பரமஹம்ஸனுக்கு (ஸ்நானம்) இல்லை. ஒரு தெண்டமுடையவனுக்கு மௌநம், யோகாசனம், யோகம், பொறுமை, ஒன்றியாயிருக்கிற சுவபாவம், ஒன்றிலும் ஆசையற்றிருத்தல், (சகலத்திலும்) சமமாயிருக்குதல் இந்த ஏழும் வேண்டும். ஸ்நானம் முதலானது விதிக்கப்படாததினாலே பரமஹம்ஸனானவன் சகலசித்த விருத்திகளுடைய தியாகம் (விடுதல்) மாத்திரம் செய்யவேண்டியது. தோல், மாம்சம், நரம்பு, கொழுப்பு, ஊண், எலும்பு, மலம், மூத்திரம் இவைகளுடைய கூட்டங்களாகிய நாற்றங்களையுடைய தேகத்தில் சந்தோஷமடைகிறவர்களுக்கும் புழுக்களுக்கும் பேதமென்ன? சகலமான சிலேஷ்மம் முதலான கூட்டமாகிய சரீரமெங்கே? தேகவாசனை, காந்தி, மனோக்கியமான குணங்கள் எங்கே? (இவைகள் நசித்துப்போகிறதென்பது கருத்து). மாம்சம், உதிரம், நாற்றமுள்ள மலமூத்திரம், நரம்பு, கொழுப்பு, எலும்பு, இந்தக் கூட்டங்களடங்கிய தேகத்தில் பிரீதியாயிருக்கிறமூடன் நரகத்திலும் பிரீதியாயிருப்பான். வாக்கினால் சொல்லக்கூடாத ஸ்திரீகளுடைய (குகிய) ஸ்தானத்திற்கும் கசிவுள்ள குழாயான விரணத்திற்கும் பேதமில்லா திருந்தாலும் மனோ பேதத்தினால் (மோகமடைகிறார்கள். அப்படிப்பட்ட) ஜனங்கள் சுவுபிராணஉவுபெத = பிராண னில்லாதவர்களென்று சொல்லப் படுகிறார்கள் (ஜடசுவரூபிகளென்று சொல்லப் படுகிறார்கள்). இரண்டாகத் துண்டிக்கப்பட்டிருக்கிறதும், அபான வாயுவினால் அசங்கியத்தை யடைந்திருக்கிறதுமானதோல் துண்டை இரமிக்கிறவர்களாரோ அவர்களின் பொருட்டு நமஸ்காரம். இதைவிட துன்மார்க்கமென்னவிருக்கிறது.

ஞானிக்குச் செய்யவேண்டியதாக வொன்றுமில்லை. அடையாளமுமில்லை. மமதை யற்றவனாய் பயமற்றவனாய் சாந்தமுடையவனாய் இருமையற்றவனாய் இலையில் புஜிக்காதவனாய் இருக்கிற முனியானவன் கோவணமுடையவனாயாவது வஸ்திரமற்றவனாயாவது தியானத்திலேயே யிருக்கவேண்டியது. இப்படித் தியானத்திலேயே யிருக்கிற யோகியானவன் பிரம்ம மாகிறதற்கு யோக்கியனாகிறான். இவ்விடத்தில் அடையாளம் (இந்தஉலகத்திலிருக்கையில் இவன் சந்நியாசி, இவன்யோகி இவன் கிரகஸ்தன், இவன் பிரும்மசாரி, இவன் யோக்கியன், இவன் அயோக்கியன், என்பவைகளைக் கண்டுகொள்ள பல குறிகள்) இருந்தபோதிலும் இந்த அடையாளங்கள் மோக்ஷத்தின்

* பெகூதகன் முதலிய சந்நியாசிகளின் விபாகம், பிக்ஷுகோப நிஷத்திலும் காண்க.

பொருட்டு உபயோகமற்றவை. மோக்ஷத்திற்குக் காரணம் ஞானமே. எவனை சத்தென்றும் அசத்தென்றும் வேதசாஸ்திரம் தெரிந்தவனென்றும் தெரியாதவனென்றும் நன்னடக்கை யுள்ளவனென்றும் துர்நடக்கை யுள்ளவனென்றும் ஒருவன் அறியவில்லையோ அவன் பிராம்மணன் (அப்படி அறியும்படியான அடையாள மில்லாதவன் பிராம்மணன். அதாவது, பிர்மவித்துக்கள் தாங்களிப்படிப்பட்டவர்க ளென்பதை பிறர் அறியும்படி காட்டமாட்டார்களென்பது கருத்து). ஆகையினால் அடையாளமில்லாதவனாயும் (பிர்ம்ம) தருமம் தெரிந்தவனாயும் பிர்ம்ம சுவரூபத்தைப் பின்பற்றினவனாயும் இரகசியமான தருமத்தை யாசிரயித்தவனாயுமிருக்கிற வித்துவானானவன் தன்னுடைய சரித்திரம் தெரியா திருக்கும்படியாய்ச் சஞ்சரிக்கவேண்டியது. வருணாசிரமமற்றவனாயும் சகலமானப் பிராணிகளுக்கும் (இன்னான் இன்னவிதமான நிலையுள்ளவனென்று தெரிந்துகொள்ளக்கூடாமல்) சந்தேகப்படத்தக்கவனாயும் குருடனைப்போலவும் ஜடனைப்போலவும் ஊமையைப் போலவும் பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. சாந்தமான மனதையுடைய அவனைப்பார்த்து தேவதைகள் ஆசைப்படுகிறார்கள். அடையாளமில்லாததே கைவல்யமென்று (மோக்ஷமென்று) வேதத்தினுடைய விதி.

பின்னும் நாரதரானவர் சந்நியாசவிதியை எங்களுக்குச் சொல்லுமென்று பிதாமகரைக் கேட்டார். அப்படியே அங்கீகாரம் செய்து சொன்னார்.

ஆதுர சந்நியாசம் அல்லது கிரம சந்நியாசம் பெற்றுக்கொள்ள வேண்டியதற்காக முன்னாடி கிருச்சிரப் பிராயச்சித்தம் செய்துகொண்டு பிறகு அஷ்டசிராத்தம் செய்யவேண்டியது. முதலில் தேவ சிராத்தத்தில் சத்தியவஸு என்கிற பெயரையுடைய விசுவே தேவர்களையும் பிரும்மவிஷ்ணு மகேசுவரர்களையும், ருஷி சிராத்தத்தில் தேவருஷி இராஜருஷி மனுஷிய ருஷிகளையும், திவ்விய சிராத்தத்தில் வசு ருத்திராதித்திய ரூபத்தை யுடையவர்களையும், மனுஷிய சிராத்தத்தில் ஸநகஸநந்தன ஸநத்குமார ஸநத்ஸுஜாதர்களையும், பூதச் சிராத்தத்தில் பிரதிவியாதி பஞ்சமகா பூதங்கள் கண்முதலிய இந்திரியங்கள் சதுர்வித பூதக் கூட்டங்கள் இவைகளையும், பிதுர் சிராத்தத்தில் பிதா பிதாமகப் பிரபிதாமகர்களையும், மாதிரு சிராத்தத்தில் மாதா பிதாமஹி பிரபிதா மஹிகளையும், ஆத்ம சிராத்தத்தில் தன்னையும் தன் தகப்பன் பாட்டன் இவர்களையும், தகப்பன் ஜீவித்திருந்தால் தன்னையும், பிதாமகன் பிரபிதாமகனையும் (மேல்கண்ட) எல்லா சிராத்தத்திலும் (அந்தந்த பிதுர்க்களுடைய உத்தேசமாய்) இரண்டிரண்டு பிராம்மணர்களை பூஜிக்கவேண்டியது. ஒரு யக்கியபக்ஷத்திலாவது எட்டு யக்கியபக்ஷத்திலாவது தன்னுடைய சாகைக்குச் சேர்ந்த மந்தி

ரங்களினாலே அஷ்ட சிராத்தங்களை எட்டுநாள்களிலாவது ஒரேநாளி லாவது பிதுர் யாகத்திற்குச் சொல்லியிருக்கிற விதிப்படிக்குப் பிரா ம்மணர்களைப் பூஜித்து போஜனம் வரையில் நிறைவேற்றிப் பிண்டப் பிரதானத்தைச்செய்து தக்ஷிணையோடு கூடிய தாம்பூலங்களினாலே சந்தோஷப்படுத்தி பிராம்மணர்களை யனுப்பிவிட்டு மிச்சகரும சித் தியின் பொருட்டு ஏழு தலைமயிர்களைப் பிடிங்கிவிட்டு மிச்சகருமம் நிறைவேறும்பொருட்டுப் பிராம்மணனானவன் ஏழு அல்லது எட்டு மயிர்களைச் சேர்த்துப்பிடித்து க்ஷவரம் செய்வித்துக்கொள்ள வேண் டியது. கக்ஷம் உபஸ்தம்தவிர மற்ற தலைமயிர்களையும் மீசைதாடி நகங்களையும் க்ஷவரம் செய்வித்துக்கொள்ள வேண்டியது. க்ஷவர மானபிறகு ஸ்நானம்செய்து ஸாயம் சந்தியாவந்தனத்தை நிறைவே ற்றி ஆயிரம் காயத்திரிஜபித்து பிர்ம்மயக்கியம்செய்து தன்னுடைய ஸ்வாதீனமாயிருக்கிற அக்கினியை ஸ்தாபித்து தன்னுடைய சாகைப் பிரகாரம் முடிவுசெய்துகொண்டு அதில் சொல்லியிருக்கிற ப்பிரகா ரம் ஆஜ்ஜியாஹுதி (நெய்யினால் அக்கினியில் ஹோமம்) யை ஆஜ்ஜிய பாகம்வரையில் ஹோமம்செய்து ஹோமவிதியை முடித்து ஆத்மா முதலியவைகளினாலே (ஆத்மாவென்று துடங்குகிற மந்திரங்களினா லே) மூன்றுதடவை சத்துமாவை (நெல்லுமுதலிய தானியத்தைப் பொ ரித்து அல்லது அரிசியைவறுத்துப் பொடிசெய்தமாவை) பக்ஷித்து ஆசமனஞ் செய்து அக்கினியை சம்ரக்ஷித்து (அக்கினியை வளர்த்தி) தான் அக்கினிக்கு வடபுறம் கிருஷ்ணாஜன (மான்தோல்) த்தின்பேரில் உட்கார்ந்து புராண சிரவணம் செய்துகொண்டு தூங்காமலிருந்து நான் காவது ஜாமக்கடைசியில் ஸ்நானம்செய்து அந்த அக்கினியில் ஹவி ஸை பக்குவம்செய்து புருஷ சூக்தத்தினாலே அன்னத்தை (ஹவிஸை) பதினாறு ஆகுதியாக ஹோமம்செய்து (பிறகு) விரஜாஹோமம்செய்து ஆசமனம்செய்து தக்ஷிணையுடன் வஸ்திரம் சுவர்ணபாத்திரம் பசுக் கள் இவைகளைக் கொடுத்து முடிவுசெய்து பிரும்மாவை உத்வாஸனம் செய்து (ஆவாஹநம் செய்திருக்கிற பிரும்மாவைக் கிளப்பிவிடுகிறது) "ஸம்ஸாரவிம்ஷத்ர ஸ்தஸ்ம ஸர்வம் ப்ரஹ்மாஹமஸ்மீதி। ஸம்ஸ்ரயத்ஸ்ருஷ்டிஸ்வா யத்ஷாவயிதநவ। ஜயைநவவாக்ருயத்ஷம் தக்ஷநோதத்வேதி। யாதே அக்நே யஜ்ஞியா தநூஸ்தயேஹ்யாரோஹாத்மாத்மாநமச்சா வஸூநி க்ருண்வந் அஸ்மே நர்யா புரூணி யஜ்ஞோ பூத்வா யஜ்ஞமாஸீத ஸ்வாம் யோநிம் ஜாத வேதோ புவ ஆஜாயமாந: ஸக்ஷய ஏஹி" ॥ என்கிற இந்த மந்திரத்தி னாலே அக்கினியை ஆத்மாவில் (தனக்குள்) கிரகித்துக்கொண்டு அக்கி னியைத் தியானம்செய்து பிரதக்ஷண நமஸ்காரம்செய்து உத்வாஸ னம்செய்து காலை ஸந்தியாவந்தனம்செய்து ஆயிரம் காயத்திரிசெய்து சூரியோபஸ்தானம்செய்து தொப்புள்வரை ஜலத்திலிறங்கி அஷ்ட திக் பாலர்களுக்கு அர்க்கியம்கொடுத்து காயத்திரியை உத்வாஸன

ம்செய்து சாவித்திரியை வியாகிருதியில் பிரவேசிப்பித்து "ஐஹம்வரு
க்ஷவஸ்ரெஸிவாகிதீஃ வ்ருக்ஷம்ரிரெஸிவ । ஊர்த்வவிரெதா வாஜிநீவ
ஸ்வம்ருதமஸ்மி த்ரவிணம் ஸவர்சஸம் । ஸுமேதயாம்ருதொக்ஷிதஃ । இதி
த்ரிஸங்கொ வேதாநுவசநம் । யஶ்சந்தஸாம்ருஷபொ விஶ்வரூபஃ । ஸம்
ஷொமெஹ்ரொயம்ருதாத்ஸம்பபூவ । ஸமெம்ரெத்ரமேதயாஸ்ப்ருணொது ।
அம்ருதஸ்யதெவதாரணொபூயாஸம் । ஶரீரம் மெவிசர்ஷணம் । ஜிஹ்வா
மெமதுமத்தமா । கர்ணாப்யாம்பூரிவிஶ்ருவம் । ப்ரஹ்மணஃகொஶொஸி
மெதயாபிஹிதஃ । ஶ்ருதம்மெகொபாய । தாரேஷணாயாஶ்ச யநெஷ
ணாயாஶ்ச லொகேஷணாயாஶ்ச வ்யுத்திதொஹம் । ஓம்பூஃஸந்யஸ்தம்
மயா । ஓம்புவஃ ஸந்யஸ்தம்மயா । ஓம்ஸுவஃ ஸந்யஸ்தம்மயா ஓம்பூ
ர்புவஸ்ஸுவ ஸ்ஸந்யஸ்தம்மயா" ॥ என்று மந்திர, மத்தியம, தார
(முறையே குறைந்தமத்தியம உரற்ற) துவனிகளினலே (முறையே)
மனதினலும் வாக்கினலும் உச்சரித்து "அபயம் ஸர்வபூதேப்
யொ மத்தஸ்ஸ்வாஹா" ॥ என்கிற மந்திரத்தினலே ஜலத்தை
ஆசமனஞ்செய்து இரண்டு கைகளினலும் ஜலமெடுத்து கிழக்குத்திக்
கில்விட்டு ஓம்ஸ்வாஹா - என்றுசொல்லி குடுமியைப் பிடுங்கியெறிந்து
"யஜ்ஞோபவீதம்பரமம்பவித்ரம் ப்ரஜாபதெர்யத்ஸஹஜம்புரஸ்தாத் ।
ஆயுஷ்யமக்ர்யம் ப்ரதிமுஞ்சஶுப்ரம் யஜ்ஞோபவீதம் பலமஸ்துதேஜஃ ।
யஜ்ஞோபவீத பஹிர்நநிவஸெத்த்வம்தஃ ப்ரவிஶ்யமத்யெ ஹ்யஜஸ்ரம்பர
மம்பவித்ரம் யஶொபலம்ஜ்ஞாநம் மெவாஸ்யம்மெயாம்ப்ரயச்ச"॥ என்று
மந்திரத்தைச்சொல்லி பூணூலையறுத்துக் கையில் ஜலத்துடன்சேர்
த்து "ஓம்பூஃ சமுத்திரம்போய்ச் சேரு" என்றுசொல்லி ஜலத்தில்
ஹோமம்செய்யவேண்டியது. "ஓம்பூஃஸந்யஸ்தம்மயா। ஓம்புவஃஸந்ய
ஸ்தம்மயா । ஓம்ஸுவஃஸந்யஸ்தம்மயா" ॥ என்று மூன்றுதடவை சொல்லி
மூன்றுதடவை மந்திரித்து அந்தஜலத்தை சாப்பிட்டு ஆசமனம்
செய்து "ஓம்பூஃ ஸ்வாஹா" என்றுசொல்லி வஸ்திரத்தையும் அரைஞா
ணையும் ஜலத்தில் எறிந்துவிட்டு சர்வகருமத்தையும் விட்டவனென்று
நினைத்துக்கொண்டு பிறந்தமேனியாய் தன்னுடைய சுவரூபானு சந்தா
னத்துடன் கையைத் தூக்கிக்கொண்டு முன்போல் வடக்கே போக
வேண்டியது. வித்துவத்சந்நியாசி (வேதசாஸ்திரங்களை யறிந்த சந்நி
யாசி) யானல் குருவிடத்திலிருந்து பிரணவமகா வாக்கியோபதேசத்
தை யடைந்து இஷ்டப்படி சஞ்சரித்துக்கொண்டு தன்னைக்காட்டிலும்
அந்நிய னொருவனுமில்லையென்று பாவனைசெய்துகொண்டு பலம் (பழ
ங்கள்) பத்திரம் (தழைகள்) ஜலம் இதுகளை ஆகாரமா யுடையவனய்
மலைவனம் கோவில் இவைகளில் சஞ்சரிக்கவேண்டியது. சந்நியாசம்
செய்துகொண்டு திகம்பரனய் எங்கும் சஞ்சரிக்கப்பட்டவனய் எப்

போதும் ஆத்மாநந்தானுபவம் நிறைந்த ஹிருதயமுடையவனும் கருமத்திலிருந்து விலகின லாபமுடையவனும் பலம் இரஸம் பட்டை பத்திரம் வேர் ஜலம் இவைகளினாலே பிராணனைக் காப்பாற்றுகிறவனுயிருக்கிற மோக்ஷயிச்சை யுள்ளவன் பருவதகுகைகளில் பிரணவத்தை ஸ்மரித்துக்கொண்டு தேகத்தை விட்டுவிடவேண்டியது. விவிஷா—ஞானத்தைஅறிய இச்சையுள்ள, சந்நியாசியானால் நூறடிநடந்து பின்பு ஆசாரியர் முதலிய பிராம்மணர்களாலே (ஹெஹாஹா) ஓ! மகா பாகா! நில்லு நில்லு தெண்டத்தையும் வஸ்திரத்தையும் கமண்டலுவையும் தரித்துக்கொள் பிரணவ மகாவாக்கியத்தினுடைய அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளுவதற்காக குருவினிடத்திற்குவா என்று சொல்லப்பட்டவனும் ஆசாரியர்களால் கொடுக்கப்பட்ட தெண்டத்தையும் அரைஞாணையும் கோவணத்தையும் ஒரு காஷாயத் துணியையும் கமண்டலுவையும் கிரகிக்கவேண்டியது. காலடிமுதல் தலைவரை உயரமுள்ளதும் காயம் படாததும் சமமானதும் சௌம்யமானதும் கறுப்புமுதலிய தில்லாததும் லக்ஷணத்தோடு கூடியதுமான ஒருமூங்கில் தெண்டத்தை, ஆசமனம்செய்து "ஸவாஊமொவாயொஜ ஸவா யொவீஂஜ்ஜஸ்ர்வஜெராஸிவாத்ரு ஜெஹவயதூவஂ சநிவாரய"॥ என்று மந்திரத்தைச்சொல்லி தெண்டத்தைக் கிரகிக்கவேண்டியது. "ஜமஜீவநஂஜீவநாயாா ஸ ஏதஂஸோதெஊஂத்ருயஸவஷா ஸவஸள" ॥ என்று மந்திரத்தைப் பிரணவபூர்வகமாய்ச்சொல்லி கமண்டலுவை கிரகிக்கவேண்டியது. "களவீநாயாாஂ கூடிஸஏத்ருஜொதி। மஹொரூாடிநஂ களவீநஜொதி। ஸீதவாதொஷத்ராண கஸஂஷெ ஹெகக்ஷணஂ வஸ்ருஜொதி"॥ இந்தப்படிக்கு (வாக்கியங்களைச் சொல்லி) அரைஞாண் கௌபீநம் வஸ்திரம் இவைகளை ஆசமன பூர்வகமாக கிரகித்துக்கொண்டு யோகபட்டாபிஷேகம் செய்யப்பட்டவனும் "நான் கிருதார்த்தனுனேன்" என்று நினைத்து தன்னுடைய ஆசிரம ஆசாரத்திலேயே நிலையுள்ளவனுக வேண்டியது, என்று உபநிஷத்.

நான்காவ துபதேசம் முற்றிற்று.

---

## ரு-வது. உபதேசம்.

பின்பு பிதாமகனை நாரதர் ஓ! பகவானே! சந்நியாசமானது சகல கருமங்களுடைய நிவிருத்தியாகிறதென்று நீரோ சொன்னீர். மறுபடியும் தன்னுடைய ஆசிரமாசாரபரனுக விருக்கவேண்டு மென்றும் சொன்னீர். (இது ஒன்றுக்கொன்று விரோதமாய்க்காணுகிறதே) என்றுகேட்டார். அதின்பின்பு பிதாமகர் சொல்லுகிறார்.

தேகத்தையுடைய ஜீவனுக்கு ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி துரியாவஸ்தைகளுண்டு. அவைகளுக்கு அதீனனாயிருக்கிற (உட்பட்

டிருக்கிற) கருமஞான வைராக்கிய பிரவர்த்தகர்களான புருஷர்களாகிய பிராணிகள் அதற்கனுகூலமான ஆசாரங்களை யுடையவர்களாகவிருக்கிறார்கள் (என்றார்). (நாரதர்) ஓ! பகவானே! அப்படியானால் சந்நியாசங்கள் எத்தனைபேதங்கள்? அநுஷ்டானபேதங்க ளெப்படிப் பட்டன? இவைகளை யுண்மையாக எங்களுக்குச் சொல்லவேண்டியது (என்று கேட்டார்). அப்படியே யாகட்டுமென்று அங்கீகாரம் செய்துகொண்டு அவரை (நாரதரை)க் குறித்துப் பிதாமகரால் சந்நியாசபேதங்களுடன் ஆசாரபேதம் சொல்லப்பட்டது. எப்படி யென்றால்:—

வாஸ்தவமாக சந்நியாசம் ஒன்றேதான். அக்கியானத்தினாலேயும் அசக்தியினாலேயும் கருமலோபத்தினாலேயும் மூன்றுவிதமாகவாய், (அதிலிருந்து) வைராக்கியசந்நியாசம், ஞானசந்நியாசம், ஞானவைராக்கிய சந்நியாசம், கருமசந்நியாசம், என நான்குவிதமாயிற்று. அதெப்படி யென்றால், துஷ்டமதன பாவத்திலிருந்து (காமக்குரோதம் முதலான பாவனையிலிருந்து) பூர்வபுண்ணிய கருமவசத்தினாலே விஷயவைராக்கியமடைந்து சந்நியாசம் வாங்கிக்கொள்ளுகிறவன் வைராக்கிய சந்நியாசி. சாஸ்திர ஞானத்தினாலேயும் பாபபுண்ணிய லோகாநுபவத்தைக் கேட்டிருப்பதினாலேயும் பிரபஞ்சத்தில் உபரதியையடைந்து (இந்திரியங்கள் விஷயங்களைப் பற்றாமல் அடக்கி), குரோதம், ஈருஷை (பிறருடையசெல்வத்தில் பொறாமை), அசூயை (பிறருடையபெருமை அல்லது சந்தோஷத்தைப்பார்த்துப் பொறாமை), அகங்காரம், அபிமான சுவரூபமான சகலசமுசாரம், இவைகளை விட்டும் பெண்ணாசை பொன்னாசை (பொருளாசை) மண்ணாசை இந்த சுவரூபமான தேகவாசனை சாஸ்திரவாசனை உலகவாசனை இவைகளை விட்டும் பிரகிருதி சம்பந்தமான இந்தப் பிரபஞ்சம் முழுதையும் வாந்திசெய்த அன்னம்போல் தள்ளத்தக்கதென்று நினைத்து சாதன சதுஷ்டய சம்பன்னனாய் * எவன் சந்நியாசம் பெற்றுக்கொள்ளுகிறானோ அவனே ஞானசந்நியாஸி. கிரமமாய் எல்லாவற்றையும் அப்பியாசம் செய்து எல்லாவற்றையும் அனுபவித்து ஞானவைராக்கியங்களினாலேயும் சுவரூபாநுசந்தானத்தினாலேயும் தேகம் மாத்திரம் மிஞ்சினவனாய் சந்நியாசம் வாங்கிக்கொண்டு பிறந்தமேனியாயாகிறவன் ஞானவைராக்கிய சந்நியாசி. பிரும்மசாரி விருதத்தை முடித்து கிரகஸ்த

---

* நித்தியா நித்திய வஸ்துவிவேகம். இஹா முத்திரார்த்த பலபோகவிராகம். சமாதிஷட்க சம்பத்தி. முமுக்ஷுத்துவம். இவைகள் தான் சாதன சதுஷ்டயம். முதலாவதானது, அழியாதவஸ்து எது, அழிகிறவஸ்து எதுவென்று அறிகிறது. இரண்டாவதானது, இந்தலோகத்திலாவது பரலோகத்திலாவது உண்டாகும் சுகானுபவத்தை வெறுத்தல். மூன்றாவதானது, சமம் தமம் உபரதி திதிக்ஷை சமாதி சிரத்தை இந்த ஆறும். நான்காவதானது, மோக்ஷம் அடையும் வகையைப் பிடிவாதமாய் விசாரித்து அதுவிஷயமாய் முயற்சி செய்வது.

ஞய் வானபிரஸ்தாசிரமத்தை யடைந்து வைராக்கியமில்லாமல் போனபோதிலும் ஆசிரம கிரமானுசாரமாய் எவன் சந்நியாசம் வாங்கிக் கொள்ளுகிறானே அவன் கருமசந்நியாசி. பிரும்மசாரி விருதத்திலேயே யிருந்து சந்நியாசம் பெற்றுக்கொண்டு பிறந்தமேனியா யிருப்பவன் வைராக்கிய சந்நியாசி. (மற்றொரு விபாகமாவது), வித்வத்சந்நியாசி, ஞானசந்நியாசி, விவிதிஷா(சாஸ்திரவிசாரணையி லிச்சையுள்ள) சந்நியாசி, கருமசந்நியாசி என நான்குவிதம். கருமசந்நியாசத்தில் நிமித்தசந்நியாசம் அநிமித்தசந்நியாசமென இரண்டுவிதம். ஆதுர (மனோவியாதி அல்லது தேகவியாதியுள்ளவன் அல்லது துன்பமடைந்தவன் வாங்கிக்கொள்ளும்) சந்நியாசம் (தான்) நிமித்தசந்நியாசம். கிரம சந்நியாசம் தான் அநிமித்தசந்நியாசம். ஆதுர சந்நியாசமானது சகல கருமக்குறைவுள்ளது. பிராணன் போகிறகாலத்தில் வாங்கிக்கொள்ளும் சந்நியாசமானது நிமித்தசந்நியாசம். தேக பலமுள்ளவனாக விருந்து உற்பத்தியாயிருக்கிற சகலமும் நசிக்கத்தக்க தென்றும் தேகம் முதலியவை யெல்லாம் தள்ளத்தக்க தென்றும் சர்வாத்மாவாயிருக்கிறவர், பரிசுத்தமான ஆகாசத்தில் பிரகாசிக்கிறவர், சகலமான வஸ்துக்களையும் வசிக்கச்செய்கிறவர், வாயு சுவரூபமாக அந்த ரிக்ஷத்தில் சஞ்சரிக்கிறவர், அக்கினி சுவரூபமாய் யக்கியவேதி (யக்கியசாலையில் அக்கினி வளர்க்கிற இடம்) யி லிருக்கிறவர், சந்திரனாக விருக்கிறவர் (அல்லது யக்கியத்தில் சோமரஸத்துடனிருக்கிற பாத்திரத்திலிருக்கிறவர் அல்லது யக்கிய கிரகத்தில் அதிதி சுவரூபமானப் பிராம்மணனாய் வந்திருக்கிறவர்), மனிதர்களிலிருக்கிறவர், சிரேஷ்டர்களாகிய தேவதைகளிலிருக்கிறவர், சத்தியத்திலிருக்கிறவர் (அல்லது யக்கியத்திலிருக்கிறவர்), ஆகாசத்திலிருக்கிறவர், ஜலத்தில் சங்கம் முத்துச்சிப்பி மச்சம் முதலிய சுவரூபமா யுண்டாகிறவர், பூமியில் தான்னியம் முதலிய சுவரூபமா யுண்டாகிறவர், யக்கியாங்க சுவரூபமாயுண்டாகிறவர், பருவதங்களிலிருந்து நதி முதலிய சுவரூபமாயுண்டாகிறவர், சத்திய சுவரூபமாயிருக்கிறவர், மகா பெரியவர், (ஆகிய) பிர்ம்மத்தைத்தவிர மற்றதெல்லாம் நசுவரமென்றும் நிச்சயித்துக் கிரமமாக சந்நியாசம் எவன் வாங்கிக்கொள்ளுகிறானே அப்படிப்பட்ட சந்நியாசம் (தான்) அநிமித்தசந்நியாசம். குடீசகன், பகூதகன், ஹம்ஸன் பரமஹம்ஸன், துரியாதீதன், அவதூதன் என சந்நியாசம் ஆறுவிதம். குடுமி பூணூல் தெண்டு கமண்டலு கௌபீநம் கந்தைத்துணி இவைகளையுடையவனாயும், தந்தை தாய் குரு இவர்களை ஆராதனை செய்கிறவனாயும், ஸ்தாலி கொத்து சிக்கம் முதலானவைகளை யுடையவனாயும் மந்திரத்தை யுருச்செய்கிறவனாயும், ஓரேயிடத்தில் அன்னத்தைப் புஜிக்கிறவனாயும் வெள்ளைமண்ணை (கோபிச்சந்தனம் அல்லது நாமக்கட்டி) ஊர்த்துவ புண்டரமாய்த் தரிக்கிறவனாயும் மூன்று தெண்டமுடையவ

னாயு மிருக்கிறவன் குடீசகன். குடுமி கந்தைத்துணி முதலியவைகளை வைத்துக்கொண்டவனாயும் மூன்று புண்டரம் தரித்தவனாயும் குடீசகனைப்போல் மற்றவைகளைச் சமமாயுடையவனாயும் பிக்ஷையெடுப்பதினால் எட்டுக்கவளம் புஜிக்கிறவனாயு மிருக்கிறவன் பெகூதகன். ஜடையைத் தரித்தவனாயும் திருபுண்டர ஊர்த்துவ புண்டரதாரியாயும் (இவ்வளவு கவளமென்கிற) நிஷ்கரிஷையற்ற பிக்ஷான்னத்தைப் புஜிக்கிறவனாயும் கௌபீன கண்டதுண்ட தாரியாயு மிருக்கிறவன் ஹம்ஸன். குடுமி பூணூ லில்லாதவனாயும் ஒருநாளில் ஐந்துவீட்டில் கையினால் பிக்ஷைவாங்கி சாப்பிடுகிறவனாயும் ஒரு கோவணமுடையவனாயும் ஒரு காவிவஸ்திரமும் ஒரு மூங்கில்தடியும் தரித்திருக்கிறவனாயும் அல்லது ஒரு காவிவஸ்திரமாத்திரமாவது உடையவனாயும் விபூதி பூசிக்கொள்ளுகிறவனாயும் சகலத்தையும் விட்டவனாயு மிருக்கிறவன்தான் பரம ஹம்ஸன். மொ௳-வ௳—பசுவைப்போல் வாயினால் சாப்பிடுகிறவனாய் பழங்களைப் புஜிக்கலாம். அங்நாகாரியானால் மூன்றுவீட்டில் பிச்சையெடுத்துண்ணலாம். தேகமாத்திரமா யிருக்கிற திகம்பரன் பிணத்தைப்போல் சரீரவிருத்தியுள்ளவன். இப்படிப்பட்டவன் துரியாதீதன். நியமமற்றவனாயும், வியபசாரத்தினால் பழிப்புள்ளவன் ஜாதிகெட்டவன் இவர்களைத்தவிர மற்ற ஜாதியார்களிடத்திலிருந்து மலைப்பாம்பு விருத்தியை யனுசரித்து (மலைப்பாம்பானது கிடந்தவிடத்திலேயே யிருந்து தன் வாய்க்கிட்டவரும் ஜந்துக்களைப் புஜிப்பதுபோல் தனக்கு யாராவது கொண்டுவந்து கொடுத்தால்மட்டும்) ஆகாரம் பெற்று (ஆத்ம) சுவரூபானு சந்தானம் செய்துகொண்டிருக்கிறவனாயு முள்ளவன் அவதூதன். ஆதுரன் ஜீவித்தால் (மரணகாலத்தில் சந்நியாசம் வாங்கிக்கொண்டவன் மரணமடையாமல் பிழைப்பானாகில்) கிரமசந்நியாசம் செய்துகொள்ள வேண்டியவனாகிறான். குடீசகன், பெகூதகன், ஹம்ஸன் இவர்களுக்குச் சந்நியாசவிதியானது பிரும்மசரியம் முதல் சந்நியாசம்வரையிலுள்ள ஆசிரமத்தைப்போல் (தான்). பரமஹம்ஸன் முதலுள்ள மூவருக்கும் அரைஞாணில்லை. கௌபீனமில்லை. வஸ்திரமில்லை. கமண்டுலுவில்லை. தண்டமில்லை. எல்லா ஜாதி ஜனங்களிடத்திலும் பிச்சைவாங்குவது, பிறந்தமேனியா யிருப்பது இவைதான் விதி. சந்நியாசகாலத்திலே புத்தி தெளிகிறவரையில் அத்தியயனம்செய்து அதற்குப்பிறகு அரைஞாண், கௌபீனம். தெண்டம், வஸ்திரம், க்மண்டுலு, எல்லாவற்றையும் ஜலத்தில் எறிந்துவிட்டுப் பிறந்தமேனியாய் சஞ்சரிக்கவேண்டியது. அற்பமாவது கந்தை (துணி) கூட இல்லாமலிருக்கவேண்டியது. பிரணவத்தைக்காட்டிலும் வேறொன்றையும் அத்தியயனம் செய்யவேண்டியதில்லை. சொல்லவேண்டியது மில்லை. கேட்கவேண்டியதுமில்லை. தர்க்கம் படிக்கவேண்டியதுமில்லை. வியாகரணம் படிக்கவேண்டியதுமில்லை. அநேக

சப்தங்களை யுச்சரிக்கக்கூடாது. வாக்குக்கு வருத்தமாகும். வாக்கி னுல் பிராணிகளுடன் சம்பாஷணை செய்யக்கூடாது. அந்நியபாஷை (சமஸ்கிருதம் தவிர மற்றபாஷை) பேசக்கூடாது. சூத்திரன் ஸ்திரீ பதிதன் தூரஸ்திரீ இவர்களுடன் பேசக்கூடாது. எதிக்கு தேவபூஜை யில்லை. உத்ஸவதெரிசனமில்லை. தீர்த்தயாத்திரையை நிவர்த்திக்கவே ண்டியது. பின்னும் எதிகளுடைய விசேஷங்களாவன—குடீசகனுக்கு ஓரேவீட்டில் பிக்ஷைவாங்குவது. பகூதகனுக்கு எட்டுவீட்டில் எட் டுக் கவளம். ஹம்சனுக்கு பிக்ஷையில் நியமமில்லை. பரஹம்ஸனுக்கு ஐந்துவீட்டில் கையே பாத்திரமாக பிக்ஷைவாங்குவது. துரியாதீதனு க்கு வாயினுல் பசுவைப்போல பலங்களை ஆகாரம்செய்வது. அவதூத னுக்கு சகலவருணங்களிலேயும் அஜகரவிருத்தியினலாகாரம். எதியா னவன் அநேகநாள் ஓரேவிடத்தில் வசிக்கக்கூடாது. ஒருவனுக்கும் நம ஸ்காரம் செய்யக்கூடாது. துரியாதீதன் அவதூதன் இவர்களுக்குள்ளே ஒருவன் கனிஷ்டனுனலும் (ஆத்ம) சுவரூபம்தெரிந்த ஜேஷ்டனுயிருக் கிறவனுக்கு நமஸ்காரம் செய்யக்கூடாது. கைகளினலே நீந்தி நதியை த் தாண்டக்கூடாது. மரமேறக்கூடாது. வாகனங்களிலேறக்கூடாது. (எதையாவது) கிரயவிக்கிரயம் செய்யக்கூடாது. பரிவர்த்தனை செய் துகொள்ளக் கூடாது. டாம்பிகம் கூடாது. எதிக்குச் செய்யவேண் டிய தொன்றுமில்லை, இருந்தால் (செய்யவேண்டியதாக ஏதாவது வை த்துக்கொண்டால்) கெட்டுப்போவான். ஆகையினலே, மனனம் முத லியவைகளில் சந்நியாசிக்கு அதிகாரம். ஆதுர குடீசகர்களுக்கு (அ டையுமிடம்) பூலோகம் புவர்லோகம். பகூதகனுக்கு சுவர்க்கலோ கம். ஹம்சனுக்குத் தபோலோகம். பரமஹம்ஸனுக்குச் சத்தியலோ கம். துரியாதீதன் அவதூதன் இவர்களுக்கு (ஆத்ம) சுவரூபானு சந் தானத்தினுல் பிரமரகீடனுயம்போல் ஆத்மாவிடத்திலேயே கைவல் லியம் (தேகம் போனவுடனே தன் ஆத்ம சுவரூபத்தை யடைகிரு னென்பது கருத்து). எவன் (மரண) அந்தியகாலத்தில் எந்தெந்த ரூபத்தை நினைத்துக்கொண்டு தேகத்தை விடுகிருனே (அவன் எப் போதும் அந்தந்த ரூபத்தின் நினைப்போடு கூடினவனுய்) அந்தந்த ரூப த்தை யடைகிருனேதவிர வேறில்லை யென்பது சுருதியின் ஆக்ஞை. அதை இவ்விதமாகத் தெரிந்து சுவரூபானு சந்தானத்தைத் தவிர வேறொன்றையும் அனுசரிக்காதவனுக வாகவேண்டும். அந்நியதாசா ரத்தினுல் (ஆத்ம சுவரூபானு சந்தானத்தைத்தவிர வேறு ஆசாரத்தி னுலே) அந்தந்த (எந்தெந்த தேவதைகளை ஆசரித்தானே அந்தந்த தேவதைகளுடைய) லோகத்தை யடைகிருன். ஞான வைராக்கிய மடைந்திருக்கிறவனுக்கு வேறே ஆசாரமென்ப தில்லாததினுலே தன் னிடத்திலேயே முக்தி. (ஆத்மானு சந்தானமில்லாத) அந்த ஆசார முடைய தேகியான (ஜீவனுன) ஒருவனே ஜாகிரதவஸ்தையில் (இரு

க்கும்போது) விசுவனென்றும் சுவப்ன வஸ்தையில் தைஜஸனென்றும் சுஷுப்தியவஸ்தையில் பிராக்கியனென்றும் சொல்லப்படுகிறன். அவஸ்தாபேதத்தினுல் அவஸ்தைக் கெஜமானனுடைய பேதமும் சொல்லப்படுகிறது. இந்த அவஸ்தைகளில் (ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் பத்து, மனசு, புத்தி, அகங்காரம், சித்தம், நான்கு) பதினான்கு கரணங்களுக்கு வெளிவிருத்தி உள்விருத்தி இவைகள் உபாதான காரணம். மனது புத்தி அகங்காரம் சித்தமென விருத்திகள் நான்கு. அந்தந்த விருத்தி வியாபார பேதத்தினுல் தனித்தனி ஆசாரபேதம் சொல்லப்படுகிறது. (அறிவு) கண்களி லிருக்கையில் ஜாக்கிருதவஸ்தை யென்றும் கழுத்திலிருக்கையில் ஸ்வப்நாவஸ்தை யென்றும் ஹிருதயத்தி லிருக்கையில் சுஷுப்தியென்றும் தலையுச்சியி லிருக்கையில் துரீயமென்றும் துரீயத்தை அக்ஷரமென்றும் (நாசமற்றதென்றும்) அறிந்து ஜாக்கிரதவஸ்தையில் சுஷுப்திய வஸ்தையை யடைந்தவனைப்போல எதெது கேட்கப்பட்டதோ, எதெதுபார்க்கப்பட்டதோ, அவைகளையெல்லாம் அறியாதவனைப்போ லிருக்கிறவனுக்கு சுவப்நாவஸ்தையிலும், அப்படிப்பட்ட (சுஷுப்தி) அவஸ்தையேயாகிறது. அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறன். அவனுக்கே முக்தியென்று சகல சுருதியும் வெளியிடுகிறது. சந்நியாசிக்கு இகபர (இந்தலோக சுவர்காதி பரலோக) விருப்பமிருக்கக்கூடாது. விருப்பமிருந்தால் அதற்கு அனுசாரமாய் நடக்கிறவனுகிறன். சுவரூபானு சந்தானத்திற்கு அந்நியமான சாஸ்திராப் பியாசங்களினுலே குங்குமம் சுமந்த ஒட்டகைக்கொப்பாய் வியர்த்தமாகிறன். (எதிக்கு) யோகசாஸ்திரப்பிரவிருத்தியு மில்லை. சாங்கியசாஸ்திர (ஞானசாஸ்திர) அப்பியாசமுமில்லை. மந்திர தந்திர வியாபாரமுமில்லை. எதிக்கு இதரசாஸ்திர பிரவிருத்தியிருந்தால் பிணத்திற்கு அலங்காரம் செய்ததுபோலிருக்கிறது. சக்கிலியனைப்போல் (எதியானவன்) கருமத்திற்கும் வித்தைக்கும் புறம்பானவனுகவும் வந்தனத்திற்கும் நாமஸங்கீர்த்தனத்திற்கும் தகாதவனுகவுமாகிறன். அவன் (கருமம் செய்தால்) செய்கிற கருமத்திற்குத் தக்கபடி பலனை யனுபவிக்கிறன். ஆகையால் விளக்கெண்ணெய் மோதைப்போல (மோதை நீக்கிவிடுவதுபோல்) சகல (பிரபஞ்சவிஷய) த்தையும் விட்டுவிட்டு அவைகளில் ஒட்டியிருக்கிற மனதை அடக்குவதையே மனேதெண்டமாகவும் கையாகிற பாத்திரத்தையே பாத்திரமாகவும் திசைகளையே துணியாகவும் உடையவனுக அறிந்து பாலன் பைத்தியகாரன் பிசாசு இவர்களைப்போல சந்நியாசியானவன் சஞ்சரிக்கவேண்டியது. மரணத்தையாவது உயிர்வாழவேண்டுமென்பதையாவது விரும்பக்கூடாது. குறித்தகாலத்தை எதிர்பார்க்கிற கூலிக்காரனைப்போல சந்நியாசியானவன் (மரண) காலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கவேண்டியது. பொறுமை ஞானம்,

வைராக்கியம், சமாதிசம்பத்தி, இவைகளில்லாமல் பிக்ஷையினலேயே ஜீவனம் செய்துகொண்டிருக்கிற எதியானவன் எதியின் விருத்தியைக் கெடுத்தவனகிருன். தெண்டத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறதினலேயாவது தலை மொட்டையடித்துக்கொண் டிருக்கிறதினலேயாவது வேஷத்தினலேயாவது டம்பாசாரத்தினலேயாவது முக்தியில்லை. எவனலே ஞானதெண்டம் பிடிக்கப்பட்டிருக்கிறதோ அவன்தான் ஏகதெண்டி (ஒன்றான பிர்ம்மத்தில் பிடிப்பையுடையவன்) என்று சொல்லப்படுகிருன். ஞானமில்லாதவனய் மரதெண்டத்தைப் பிடித்துக்கொண்டு எவ்விதத்திலும் எதையும் புஜித்துக்கொண்டிருக்கிற சந்நியாசி மகா ரௌரவமென்கிற கோரங்களான நரகங்களையடைகிருன். பெருமையானது பன்றிவிஷ்டைக்குச் சமானமானதென்று மகரிஷிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் எதியானவன் இதைவிட்டு புழுவைப்போல சஞ்சரிக்கவேண்டியது. உணவும் துணியும் யாசிக்காமல் பிறனுடைய இச்சையினல் தானய்க் கிடைத்ததாக விருக்கவேண்டியது. திகம்பரனனவன் பிறருடைய விச்சையினல் ஸ்நாநம் செய்பலாம். ஜாக்கிரதவஸ்தையில்போல் சுவப்நாவஸ்தையிலும் ஆத்மநிஷ்டனு யிருக்கிறவனெவனே இப்படிப்பட்ட நிஷ்டையையுடையவன் பிர்ம்மவாதிகளுக்குள்ளே சிரேஷ்டனுயும் முதன்மையானவனுயு மிருக்கிருன். கிடைக்காததைப்பற்றி விசனப்படக்கூடாது. (கிடைத்த) லாபத்தில் சந்தோஷப்படவும் கூடாது. இந்திரியங்களுக்கு விஷயங்களோடு சம்பந்தமில்லாதவனய்ப் பிராணதாரணமாத்திரம் செய்துகொண்டிருக்கவேண்டியது. அதிகமரியாதைசெய்து கொடுக்கிறலாபத்தை எப்போதும் நிந்திக்கவேண்டியது. அதிகமரியாதை செய்து கொடுக்கிற லாபத்தினலே எதியானவன் (ஜீவன்) முக்தனனலும் பெத்தனகிருன். பிராணனை ரக்ஷிக்கும்பொருட்டு மாத்திரமோவென்ருல், நெருப்பு அணைந்துபோயும் எல்லோருக்கும் சாப்பாடாயுமிருக்கிறகாலத்தில் பிக்ஷைக்கார்யோக்கியமான வருணங்களுடைய வீடுகளுக்குப் போகலாம். கையே பாத்திரமாகவுடையயோகி அடிக்கடி பிக்ஷைவாங்கக்கூடாது. நின்றுகொண்டும் நடந்துகொண்டும் (ஆகாரத்தை) புஜிக்கலாம். அப்படியே மத்தியில் ஆசமனமும்செய்யலாம். பரிசுத்தமாயிருக்கிற அந்தக்கரணத்தையுடையவர்கள் சமுத்திரத்தைப்போல வரம்பு கடக்காத மரியாதையுடையவர்களா யிருக்கவேண்டியது. சூரியனைப்போல் (நியமப்படி உதயாஸ்தமன மாகிறதுபோல்) மகத்துக்கள் நியதியை (மனோநிக்கிரகத்தை) விடுகிறதில்லை. பசுவைப்போல முனியானவன் ஆகாரத்தை வாயினல் எப்போது கிரகிக்கிருனே அப்போது அவன் சகல பூதங்களிலேயும் சமபாவனை யுடையவனகிருன். அவன் மோக்ஷார்கனகிருன். நிந்தியமாயிருக்கிற வீட்டைவிலக்கி அநிந்தியமான வீட்

டுக்கு (பிக்ஷைக்காக)ப் போகலாம். வாசல்கதவு திறந்திருக்கிற வீட்
டுக்கு (பிக்ஷைக்காக)ப் போகவேண்டியது. கதவு சாத்தியிருக்கிற
வீட்டுக்குப் போகக்கூடாது. தூளியடைந்த சரீரமுடையவனையும்
குடியில்லாத வீட்டையாவது அல்லது மரத்தடியையாவது வாசஸ்
தலமாயுடையவனையும் பிரியாப்பிரியங்களை விட்டவனையும் அஸ்தமய
மானவிடத்தில் படுக்கிறவனையும் அக்கினிகாரியம் (அக்கினிஹோத்திரம்
முதலியவை) இல்லாதவனையும் ஸ்திரமான வாசஸ்தலமில்லாதவனை
யும் பொறுமையுள்ளவனையும் இந்திரியங்களை யடக்கினவனையுமிருக்கிற
முனியானவன் இச்சிக்காமல் கிடைத்ததிலேயே ஜீவிக்கவேண்டியது.
வனத்திற்குப்போய் ஞானத்தையே யக்கியமாகவுடையவனாய் இந்திரி
யங்களை ஜயித்தவனாய் (மரண) காலத்தை எதிர்பார்க்கிறவனாய் சஞ்ச
ரிக்கிறவன் பிர்ம்ம சுவரூப மாகிறதற்கு யோக்கியனாகிறான். சகல
மான பூதங்களும் பயப்பட ஏதுவன்றியில் சஞ்சரிக்கிற முனிக்குச்
சகல பூதங்களாலும் ஒருப்போதும் பயமுண்டாகிறதில்லை. அபிமான
மில்லாதவனையும் அகங்காரமற்றவனையும் இருமையற்றவனையும் சமுசய
மில்லாதவனையு மிருக்கிறவன் கோபிக்கிறதுமில்லை துவேஷிக்கிறதுமி
ல்லை. வாக்கினால் பொய்சொல்லுகிறதுமில்லை. புண்ணிய க்ஷேத்திர
சஞ்சாரியாயும் பூதங்களுக் கிம்சை செய்யாதவனையும் காலம்வந்த
போது பிக்ஷையை கிரகிக்கிறவனையு மிருக்கிறவன் பிரும்ம சுவரூப
மாகிறதற்கு யோக்கியனாகிறான். வானபிரஸ்தன் கிரகஸ்தன் இவர்க
ளுடன் சேரலாகாது. தன்னுடைய நடக்கை இப்படிப்பட்ட தென்
பதைப் பிறரறியாத விதமாய் நடக்கவேண்டியது. சந்தோஷப்படக்
கூடாது. சூரியன் காண்பித்தமார்க்கமாய் (சூரிய உதயமானபிறகு)
புழுவைப்போல் (ஒரு ஜந்துக்களுக்கும் ஹிம்சையன்றி) பூமியில் சஞ்
சரிக்கவேண்டியது. சிரேயஸை உத்தேசித்த கருமத்தையும் துன்
பத்தோடு கூடிய கருமங்களையும் ஜனங்களுடைய பிரயோஜனத்தை
உத்தேசித்த கருமங்களையும் செய்யக்கூடாது. செய்விக்கவுங்கூடாது.
அஸத்தான சாஸ்திரங்களில் பற்றுள்ளவனா யிருக்கக்கூடாது. ஒரு
வனை அண்டி ஜீவிக்கக்கூடாது. அதிவாதங்களாகிய தர்க்கங்களை
விட்டுவிடவேண்டியது. (விவாதப்படுகிறவர்களுடைய) ஒரு கக்ஷியி
லும் சேரக்கூடாது. சிஷியர்களைச் சேர்க்காம லிருக்கவேண்டியது.
வெகு கிரந்தங்களை (சாஸ்திரங்களை) அப்பியசிக்கக் கூடாது. உபந்
நியாசம் (பிரசங்கம்) செய்யக்கூடாது. கருமங்களை ஒருபோதும் ஆரம்
பிக்கக்கூடாது. குறிப்பான அடையாள மில்லாதவனாய், தன்னுடைய
தாத்பரிய மின்னதென்பதை (பிறரால்) அறியப்படாதவனாய், பிர்ம்ம
திருஷ்டியுள்ளவனா யிருக்கிற முனியாகிய ஞானியானவன் பைத்திய
காரனைப்போலவும் பாலனைப்போலவும் ஊமையைப்போலவும் தன்னை
ஜனங்களுக்குக் காண்பித்துக்கொண் டிருக்கவேண்டியது. யாதொன்

றையும் செய்யவுங்கூடாது. சொல்லவுங்கூடாது. நல்லதையாவது கெட்டதையாவது நினைக்கவுங்கூடாது. இந்த முனியானவன் தனக்குள்ளேதானே சந்தோஷமடைந்தவனாய் ஜடனைப்போல சஞ்சரிக்க வேண்டியது. பிறருடன் சேராமல் இந்திரியங்களை யடக்கினவனாய் ஒன்றியாய் இந்தப்பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. ஆத்மாவினிடத்தில் விளையாட்டையுடையவனாய் ஆத்மாவினிடத்தில் சந்தோஷமுடையவனாய் ஆத்மஞானியாய் சகலத்தையும் சமமாய்ப் பார்க்கிறவனாய் குழந்தைபோல விளையாட்டையுடையவனாய் சதுரனாயிருக்கிற (நுட்பறிவுள்ள அல்லது சாமர்த்தியமுள்ள) ஞானியானவன் ஜடனைப் போல சஞ்சரிக்கவேண்டியது. பிர்ம்மவித்தையை யறிந்த வித்துவான் பைத்தியக்காரனைப்போல பேசவேண்டியது. பசுவிருத்தியை (பிறருக்குத் துன்பமில்லாததாகிய புல் முதலான சாத்துவீக ஆகாரத்தை வாயினால் புஜிக்கிறதாகிய செய்கையை) அனுசரிக்கவேண்டியது. நல்ல ஞானியானவன் அயோக்கியர்களால் தள்ளப்பட்டாலும் அவமானம் செய்யப்பட்டாலும் நிந்திக்கப்பட்டாலும் அடிக்கப்பட்டாலும் தடுக்கப்பட்டாலும் அயோக்கியர்களுடைய செய்கையினாலே துபிக்கும்படி செய்யப்பட்டாலும் அக்கியானிகளால் மலமூத்திரங்கள் தன்பேரில் விடப்பட்டாலும் இப்படி அநேகவிதமாய் துன்பப்படுத்தப் பட்டாலும் சிரேயஸைக்கோருகிற துன்பமடைந்தவன் (தானடைந்த துன்பத்தைப்பற்றி அற்பமாவது நினையாதவனாய்) தன்னாலே தன்னைக் கரையேற்றிக் கொள்ளவேண்டியது. யோகவிருத்தியினால் (ஞானயோகத்தில் பூர்ணமாய்த் தேறினவன்) பெருமானப்பட்டாலும் துன்பப் பட்டாலும் அதை மதிக்கிறதில்லை. ஜனங்களால் அவமதிக்கப்பட்ட அந்தயோகியானவன் யோகசித்தியை அடைகிறான். யோகியானவன் சத்துக்களுடைய நடத்தையை அதிக்கிரமிக்கிறதில்லை. எப்படி ஜனங்கள் தன்னை அவமதிப்பார்களோ, எப்படி தன்னுடைய சேர்க்கையை விரும்பார்களோ அப்படி நடந்துகொள்ளவேண்டியது. கருப்பை முட்டை முதலியவைகளி லுற்பத்தியாகும் ஜந்துக்களுக்கு வாக்கு மனது தேகம் இவைகளுடைய செய்கைகளினால் ஞாயமானதைச் செய்யவேண்டியது. துரோகம் செய்யலாகாது. சகல பற்றுதலையும் விட்டு விடவேண்டியது. காமம் குரோதம் கருவம் ஆசை மோகம் முதலான தோஷங்களைவிட்டு சந்நியாசியானவன் பயமற்றவனா யிருக்கவேண்டியது. பிக்ஷையெடுத்துண்பது, மௌனமாயிருத்தல், தபசு, விசேஷத்தியானம், நல்லஞானம், வைராக்கியம், இவைகள் பிக்ஷுகன் (சந்நியாசி) விஷயத்தில் தருமமென்பது அபிப்பிராயம். காஷாய வஸ்திரம் தரித்தவனாய் கிராமத்திற்கு வெளியில் விருக்ஷத்தி னடியிலாவது தேவாலயத்திலாவது வசிக்கவேண்டியது. தினமும் பிக்ஷையினால் ஜீவிக்கவேண்டியது. ஒருபோதும் ஒரே (ஒருவனுடைய) அந்

னத்தைப் புஜிக்கக்கூடாது. சித்தசுத்தி யுண்டாகிறவரையில் புத்திமானனவன் இவ்விதமாய் சஞ்சரிக்கவேண்டியது. பின்பு மனச்சுத்தியடைந்தவன் பரிவிராஜகனுய் எவ்விடத்திலும் சஞ்சரிக்கலாம். உள்ளும் வெளியும் எவ்விடத்திலும் ஜனுர்த்தனனைப் பார்த்துக்கொண்டு வாயுவைப்போல் கல்மஷமற்று எங்கும் சஞ்சரிக்கிறவனுய் சுகதுக்கங்களிலே சமமாயிருக்கிறவனுய் பொறுமையுள்ளவனுய் கையில்கிடைத்ததை யுண்பவனுய்ப் பிராம்மணன் பசு குதிரை மிருகம் முதலியவைகளில் வைரமன்றி சமமாய்ப் பார்க்கிறவனுய் பரமாத்துமாவாயும் ஈசுவரனுயுமிருக்கிற விஷ்ணுவை மனதினுல் தியானித்துக்கொண்டவனுய் பிர்ம்மானந்தத்தைச் சிந்தித்துக்கொண்டவனுய் தானே பிர்ம்மமென்று நினைத்தவனுய், இவ்விதமாய் அறிந்து மனோநிச்சயத்தைத் தெண்டமாகப் பாவித்துக்கொண்டு ஆசையற்றவனுய் திகம்பரனுய் எப்போதும் மனோவாக்கு காயங்களுடைய கருமங்களால் எல்லாச் சமுசாரத்தையும் விட்டொழித்துப் பிரபஞ்சத்தைப் பாராதவனுய் சுவரூபானுசந்தானத்தினுலே பிரமரகீடஞாயமாய் முக்தியடைகிருன், என்று உபநிஷத்.

ஐந்தாவ துடதேசம் முற்றிற்று.

---

## ௬-வது. உபதேசம்.

நாரதர் பிதாமகரைநோக்கி ஓ! பகவானே! அப்பியாசத்தினுலே பிரமரகீடஞாயம்போலென்று சொன்னீரே அந்த அப்பியாசமெப்படிப்பட்டது (என்று கேட்டார்).

அதற்குப் பிதாமகர் சொல்லுகிருர்:—

சத்திய வாக்குள்ளவனுயும் ஞானவைராக்கியத்தோடு கூடினவனுயும் தேகம்மாத்திரம் மிச்சமுள்ளவனுயும் வசிக்கவேண்டியது. ஞானத்தையே சரீரமாயும் வைராக்கியத்தையே பிராணனுயும் சாந்தி (மனதை யடக்குதல்) தாந்தி (தபசினு லடையப்பட்டிருக்கிற பொறுமை) இவைகளை நேத்திரங்களாயும் மனதே முகமாயும் புத்தியே கலை (தேஜஸ்) யாயும் இருவத்தைந்து தத்துவங்களே (பூதங்கள் ஐந்து, இந்திரியங்கள் பத்து, பிராணன்கள் ஐந்து, மனோபுத்தி சித்தாகங்காரம் நான்கு, ஜீவன் ஒன்று ஆக இருபத்தைந்து) அவயவங்களாயும் (ஜாக்கிரத் சுவப்னசுஷுப்திகளாகிய) அவஸ்தைகளே பஞ்ச மகாபூதங்களாயும் கருமம் பக்தி ஞானம் வைராக்கியங்களே கிளைகளாயும், ஜாக்கிரத் சுவப்னசுஷுப்தி துரியாவஸ்தைகளும் பதினுன்கு கரணங்களும் (இந்திரியங்கள் பத்து, மனுதி நான்கு) சேற்றில்நட்ட கம்பாகாரங்களாயுமறி. இப்படி யிருந்தபோதிலும் சேற்றி லழுந்திய ஓடத்தை ஓடக்காரன்போலவும் யானையை மாவுத்தன்போலவும் தன்

புத்தியினாலே (மனது முதலியகரணங்களை) தன் வசப்படுத்திக்கொண்டு தனக் கன்னியமாயிருக்கிற சகலமும் கற்பிதமென்றும் நாசமடையத் தக்கதென்றும் அறிந்து விரக்தியடைந்த புருஷனானவன் எப்போதும் தானே பிர்ம்மமென்று உச்சரிக்கவேண்டியது. தனக் கன்னியமாய் யாதொன்றையு மறியக்கூடாது. இப்படி வசிக்கிறஜீவன் முக்தனானவன் செய்யவேண்டியதைச் செய்தவனாகிறான். தான் பிர்ம்மமல்லவென்று வியவகரிக்கக்கூடாது. பின்னை யெப்படியென்றால், "நான் பிர்ம்மமா யிருக்கிறேன்" என்று எப்போதும் வியவகரித்துக்கொண்டிருக்கவேண்டியது. ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி அவஸ்தைகளிலே துரியாவஸ்தையை யடைந்தவனாயிருந்து பின்பு துரியாதீதத்துவத்தை யடையவேண்டும். ஜாக்கிரதவஸ்தை பகலிலும் சுவப்னாவஸ்தை இரவிலும் சுஷுப்தி அவஸ்தை அர்த்தராத்திரியிலு முண்டாகிறது. ஒரு அவஸ்தையிலே நான்கு அவஸ்தைகளு முண்டு. ஒவ்வொரு கரணத்திற்கு சுவாதீனமாயிருக்கிற கண் முதலிய பதினான்கு கரணங்களுடைய வியாபாரங்களாவன—கண்கள் ரூபத்தைக் கிரகிக்கின்றன. காதுகள் சப்தத்தைக் கிரகிக்கின்றன. நாக்கு ருசியை யறிகிறது. மூக்கு கந்தத்தைக் கிரகிக்கிறது. வாக்கு பேசுதலையும், கையெடுத்தலையும்; கால்நடத்தலையும், பாயு (மலஜலம்) விடுதலையும், உபஸ்தம் ஆநந்தானுபவத்தையும், துவக்கு உணருதலையும் உடையன. புத்தியானது (மனசு) இந்திரியங்களுடைய வசமாய் விஷயங்களைக் கிரகிக்கிறது. புத்தியினாலே அறிகிறான். சித்தத்தினாலே நினைக்கிறான். அகங்காரத்தினால் "நான்" என்கிறான். இவைகளை ஜீவனானவன் விட்டு (இந்த வியாபாரங்களெல்லாம் பதினான்கு கரணங்களுடையது என்பதைத் தெரியாமல்) கிரகாபிமானத்தினால் கிரகஸ்தன்போலே தேகமே தான் என்கிற அபிமானத்தினாலே ஜீவனாகிறான். சரீரத்தில் ஜீவனானவன் சஞ்சரிக்கிறான். (ஹிருதய கமலத்தின்) * கீழ்ப்பக்கத்திய தளத்தில் (ஜீவன்) சஞ்சரிக்கையில் புண்ணியத்தில் பிரவிருத்தியும், அக்கினி மூலையில் (சஞ்சரிக்கையில்) நித்திரையும் ஆலசியமும், தெற்கு தளத்தில் (சஞ்சரிக்கையில்) குரூரபுத்தியும், நிருருதிமூலையில் சஞ்சரிக்கையில் பாபபுத்தியும், மேற்கு (தளத்தில் சஞ்சரிக்கையில்) கிரீடையில் ஆசையும், வடமேற்கு (தளத்தில் சஞ்சரிக்கையில்) நடந்துபோக புத்தியும், வடக்கில் சாந்தி, ஈசான்னியத்தில் ஞானம், கருணிகா (தாமரைப்பூவின் காயிருக்கும் ஸ்தானத்தில் சஞ்சரிக்கையில்) வைராக்கியம், கேஸரோ (காயைச்சுற்றியிருக்கிற குசுமத்தி லிருக்கையில்) ஆத்மசிந்தை, இப்படிக்கு முகத்தை (பலதிக்குகளாக வியாபித்திருக்கிறதை) அறிந்து ஜீவித்திருக்கிற அவஸ்தையானது முதலாவது

---

* இந்த அடையாளத்திற்குப் பின்வரும் சில விஷயங்களை ஹம்ஸோபநிஷத்திலும் காண்க.

ஜாக்கிரத், இரண்டாவது சுவப்னம், மூன்ருவது ஸுஷுப்தம், நான்
காவது துரியம், இந்த நான்கு மில்லாததுதுரியாதீதம். விசுவதை ஜஸ
பிராக்கிய தடஸ்த பேதத்தினல் ஒரேதேவனே சாக்ஷியாயும் நிர்க்குண
ணுயு மிருக்கிருன். அந்தப் பிர்ம்மமே "நான்" என்று உச்சரிக்கவேண்
டியது. (அப்படி மனனம்) செய்யாவிட்டால் (அடியில் சொல்லப்
படுகிற அவஸ்தைகளுக் குள்ளாகிருன்), ஜாக்கிரத்தில் ஜாக்கிரதைமு
தலான நான்கு அவஸ்தைகள். சுவப்னத்தில் சுவப்னம் முதலான நான்
கு அவஸ்தைகள். சுஷுப்தியில் சுஷுப்திமுதலான நான்கு அவஸ்தை
கள். துரியத்தில் துரியம் முதலான நான்கு அவஸ்தைகள். துரியாதீத
ணுயிருக்கிற நிர்குணனுக்கு இப்படி (அவஸ்தைகள்) இல்லை. ஸ்தூல
சூக்ஷ்மகார்ண ரூபங்களாயிருக்கிற(சரீரங்களுக்கு)முறையே யஜமான
ணுயிருக்கிற விசுவதை ஜஸபராக்கியர்களுடன் எல்லா அவஸ்தைகளி
லும் ஒருவனே சாக்ஷியாயிருக்கிருன். தடஸ்தன் திருஷ்டாவா?
(பார்க்கிறவனு?) தடஸ்தன் திருஷ்டாவல்லவா? (தடஸ்தனுக்கு)
திருஷ்டுருத்துவம் (பார்க்கும் தன்மை) இருக்கிறதாகையால் கருத்
திருத்துவ போக்திருத்துவ அகங்காராதிகளினலே தொடப்பட்ட
ஜீவன் திருஷ்டாவல்ல. ஜீவனுக் கன்னியமானவன் (தடஸ்தன் அல்
லது சாக்ஷி அல்லது கூடஸ்தன் கருத்திருத்து வாதிகளில்) சம்பந்த
ப்படவில்லை. ஜீவனும் சம்பந்தப்படவில்லையே யென்ருல், அப்படி
யல்ல. ஜீவாபிமான (உயிர்வாழ வேண்டுமென்கிற ஆசை)த்தினல்
தேகாபிமானம். தேகாபிமானத்தினல் ஜீவத்துவம். ஜீவத்துவமானது
கடாகாச மடாகாசம்போல் மறைவாயிருக்கிறது. (மகாகாச மானது
குடத்திலிருக்கையில் கடாகாசமென்றும் வீட்டிலிருக்கையில் மடா
காசமென்றும் சொல்லப்படுவதுபோல் தேகத்திலபிமானத்துட னிரு
க்கும்போது ஜீவனென்று சொல்லப்படுகிறது. கடாகாசத்திற்கு கட
மும், மடாகாசத்திற்கு மட (வீடு) மும் எப்படி மறைவாயிருக்கிற
தோ அப்படிபோல் தேகத்திலிருக்கிற பிர்ம்மசைதன்னியமாகிய ஜீவ
னுக்கு தேகம் மறைவாயிருக்கிறது). அந்தமறைவினலேயே உச்சு
வாஸ நிச்சுவாஸ (மூக்கினுல் சுவாசம் விடுவதும் இழுப்பதும்) குறிப்
பையுடைய (ஹம்ஸஸோஹம்) ஹம்சஸோஹம் என்கிற மந்திரத்தி
னல் அநுசந்தானம் செய்கிருன் (சுவாசத்தை உள்ளுக்கிழுக்கையி
லும் வெளியில் விடுகையிலும் ஹம்ஸஸோஹ மென்கிற மந்திரம் உச்
சரிக்கிறதாகிறது. அந்த மந்திரார்த்தமென்னவெனில், ஹம்ஸ: = பர
மாத்துமா, ஸ:=அவன், சுஹம்=நான், பரமாத்துமாவானவன் நானு
யிருக்கிறேன் என்பது தாத்பரியம். ஆகையால் சுவாசத்தையிழுக்கி
றதினுலும் விடுகிறதினுலும் நானே பரமாத்துமாவென்று அநுசந்தா
னம் செய்ததாகிறது). இப்படிக்கறிந்து சரீராபிமானத்தைவிட்டால்
சரீராபிமானியாகிறதில்லை (ஜீவத்துவத்தை யடைகிறதில்லை). அவன்

தான் பிர்ம்மமென்று சொல்லப்படுகிறான். அபிமானத்தைவிட்டு கோபத்தைத்தள்ளி மிதமான (இலகுவான) ஆகாரத்தையுடையவனாய் இந்திரியங்களை ஜயித்தவனாய் புத்தியினால் (இந்திரிய) துவாரங்களை அடக்கி மனதைத்தியானத்தில் பிரவேசிக்கச் செய்யவேண்டியது. சூனியமானவிடத்திலேயும் குகைகளிலேயும் வனங்களிலேயும் நித்திய யுக்தனாயிருக்கிற (எப்போதும் மனது இந்திரியங்களை யடக்கியிருக்கிற) யோகியானவன் எப்போதும் தியானத்தை நன்றாய் ஆரம்பிக்கவேண்டியது. பிராம்மணசமாராதனை, சிராத்தம், யக்கியம், இவைகளிலேயும் தைவயாத்திரை உற்சவம் இவைகளிலேயும் ஜனக்கூட்டங்களிலேயும் சித்தியைக்கோருகிற யோகவித்தானவன் ஒருபோதும் போகக்கூடாது. இவனை ஜனங்கள் எப்படி அவமதித்து நிந்திப்பார்களோ அப்படியுக்தனாயிருக்கிற (இந்திரியாதிகளை யடக்கினவனா யிருக்கிற) யோகியானவன் சஞ்சரிக்கவேண்டியது. சத்துக்களுடைய நடக்கையை யதிக்கிரமிக்கலாகாது. வாக்கைத் தண்டிக்கிறது, கருமத்தைத் தண்டிக்கிறது, மனதை தண்டிக்கிறது, இம்மூன்று தண்டமும் எவனுக் குறுதியாயிருக்கிறதோ அந்த மகானான எதிதான் திருதெண்டி. (அதாவது—மூன்று தெண்டத்தையுடையவன்). புகையின்றும் அக்கினியணைந்தும் போயிருக்கிற (காலத்தில்) பிராம்மண சிரேஷ்டாளுடைய கிரகத்தில் பிக்ஷைவாங்கிற எதியானவன் சர்வோத்தமனென்று சொல்லப்படுகிறான். எவன் சுவதரும (சந்நியாசதரும) த்தில் விசாரமில்லாமல் தெண்டத்தை (தடியை) பிடித்துக்கொண்டும், பிக்ஷை வாங்கிக்கொண்டும், வைராக்கிய மில்லாதவனாயிருக்கிறானோ அவன் நீச (அதம) எதியல்லவா? எந்தவீட்டில் விசேஷபிக்ஷை யகப்படுமென்கிற ஞாபகத்தினாலே அவ்விடம் போகிறதில்லையோ, (போனவீட்டுக்கு) பின்னும் போகிறதில்லையோ, அவன்தான் எதி; மற்றவனல்ல. சரீரேந்திரியாதிக ளில்லாததாயும், சர்வசாக்ஷியாயும், பரமார்த்த விக்கியானமாயும், சுகசுவரூபமாயும், தனக்குத்தானே விளங்குகிறதாயு மிருக்கிற பரதத்துவத்தை (பிர்ம்மத்தை) எவனறிகிறானோ அவன் வருணாசிரமங்களைக் கடந்தவனாகிறான். தேகத்தில் மாயையினால் கற்பிக்கப்பட்ட "ஆசிரமம் முதலான சகலமு மென்னுடையது" என்பதானது ஞானஸ்வரூபியானஆத்மாவுக்கு எப்போதுமில்லை. வேதாந்தங்களினால் இந்தப்படி எவனறிகிறானோ அவன் அதிவருணாசிரமியாகிறான். தன்னுடைய ஆத்மதரிசனத்தினாலே வருணாசிரமாசாரங்கள் எவனுக்கு நழுவிப்போச்சுதோ அவன் சகலமான வருணாசிரமங்களை யதிக்கிரமித்து தன் ஆத்மாவிடத்திலேயே யிருக்கிறான். தன்னுடைய எல்லா ஆசிரமங்களையும் கடந்து ஆத்மாவிலேயே யிருக்கிற புருஷனெவனோ அவன் வேதார்த்தங்களைத் தெரிந்தவர்களாலே அதிவருணாசிரமியென்று சொல்லப்படுகிறான். ஓ நாரதா! ஆகையினால் அந்நியத்திற்கு (ஆத்மாவு

க்கு அன்னியமான தேகத்திற்கு) சம்பந்தப்பட்ட வருணாசிரமங்கள் சகலமும் அக்ஞானியினால் பிராந்தியினாலே ஆத்மாவிடத்தில் ஆரோபிக்கப்படுகின்றன. ஓ நாரதா! பிர்ம்மஞானிகளாயிருக்கிறவர்களுக்கு விதியுமில்லை. நிஷேதமுமில்லை. தள்ளத்தக்கது (தள்ள) தகாதது என்பதுமில்லை. அப்படியே மற்றொன்றுமில்லை. பிரும்மாவினுடைய ஸ்தானம்வரையில் சகல பூதங்களிடத்திலிருந்தும் விரக்தியடைந்து எல்லாவற்றிலும் புத்திர மித்திர களத்திராதிகளிடத்திலும் கிருபையைப் பிளந்து முக்திமார்க்கத்தில் சிரத்தையுள்ளவனாய் வேதாந்த ஞானவிருப்பத்தால் உபாயந (காணிக்கை) கையையுடையவனாய் பிர்ம்மவித்தாயிருக்கிற குருவை யடையவேண்டியது. இந்தக்குருவை வெகுகாலம் சமாதானமான மனதையுடையவனாயிருந்து சேவைகளினாலே சந்தோஷப்படுத்தி எப்போதும் வேதாந்தவார்த்தையை ஸ்திரசித்தமுள்ளவனாய் கேட்கவேண்டியது. மமகாரம், அகங்காரமற்றவனாய் சகல பற்றுதலையும் விட்டவனாய் எப்போதும் சாந்திமுதலியவைகளோடு கூடினவனாய் தன்னிடத்திலே ஆத்மாவைப் பார்க்கிறான். சமுசாரத்திலுள்ள தோஷத்தை எப்போதும் பார்ப்பதினாலே விரக்தியுண்டாகிறது. சமுசாரத்தில் விரக்தியடைந்தவனுக்குச் சந்நியாசமானதுண்டாகிறதென்பதில் சந்தேகமில்லை. பரம ஹம்ஸனென்கிற பெயரையுடைய முமுக்ஷுவானவன் வேதாந்தத்தைக் கேட்பது முதலானதினாலே மோக்ஷத்திற்கு நேரானவும் முக்கியமானவும் சாதனமாயிருக்கிற பிர்ம்மஞானத்தை அப்பியசிக்கவேண்டியது. பிர்ம்மஞானத்தை யடையும்பொருட்டு பரம ஹம்ஸன் என்கிற பெயரையுடையவன் சாந்தி தாந்தி முதலான சகல சாதனங்களோடு கூடினவனாக வேண்டியது. வேதாந்தாப்பியாசத்தை எப்போதும் செய்கிறவனாகவும் சாந்தனாகவும், தாந்தனாகவும், இந்திரியங்களை ஜயித்தவனாகவும், பயமில்லாதவனாகவும், மமதையற்றவனாகவும், ஸ்திரபுத்தியுள்ளவனாகவும், இருமையற்றவனாகவும், ஒன்றையும் கிரகிக்காதவனாகவும், ஜீர்ணமாயிருக்கிற (பழசாய்ப்போயிருக்கிற) கௌபீனம்துணி இவைகளை யுடையவனாகவும், முண்டி (தலைமொட்டை யடித்துக்கொண்டவன்) அல்லது திகம்பரன் (திக்குகளையே வஸ்திரமாகவுடையவன் என்றால், பிறந்தமேனியா யிருக்கிறவன்) ஆகவுமாகவேண்டியது. மிகவும் அறிவுள்ள வேதாந்த வித்தாயும், யோகியாயும், மமதையற்றவனாயும், அகங்காரமற்றவனாயும், சிநேகிதர்களிடத்திலும் மற்ற சகலமான ஜந்துக்களிடத்திலும் சமமாயும் [illegible]கமுடையவனாயுமிருக்கவேண்டியது. மனச் சமாதானமுள்ள ஞா[illegible]னான ஒருவன் தான் (சமுசாரசமுத்திரத்தை) தாண்டுகிறான். மற்றவனல்ல. குருக்களுடைய ஹிதத்தோடுகூடினவனாய் அவர்களிடத்தில் ஒருவருஷம் வாசம் செய்யவேண்டியது. யம நியமங்களிலே எப்போதும் ஜாக்கிரதையாயிருக்கவேண்

டியது. அதின் (அந்தவருஷத்தின்) கடைசியில் உத்தமமான ஞான யோகத்தை யடைந்து (தான் எந்த ஆசிரமியோ அந்த ஆசிரம) தருமத்திற்கு விரோதமில்லாமல் இந்தப்பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. (அல்லது) அந்த ஒருவருஷ கடைசியில் (பிரும்மசாரி கிரகஸ்த வானப்பிரஸ்தங்களாகிற) மூன்று ஆசிரமங்களைவிட்டு சிரேஷ்டமான (சந்நியாச) ஆசிரமத்தையும் உத்தமமான ஞானயோகத்தையும் அடைந்து குருக்களுடைய உத்தரவு பெற்றுக்கொண்டு சங்கத்தை (புத்திரமித்திராளுடன் சேர்ந்திருக்குதலை) விட்டவனையும் குரோதத்தை (கோபத்தை)ஜயித்தவனையும் இலகுவான ஆகாரமுடையவனையு மிந்திரியங்களை யடக்கினவனையும் இந்தப்பூமியில் சஞ்சரிக்கவேண்டியது. கருமம் செய்யாத கிரகஸ்தன் கருமம்செய்கிற சந்நியாசி இவ்விருவரும் விபரீதமான இந்தச் செய்கையினல் அயோக்கியராகிறூர்கள். ஸ்திரீகளைப்பார்த்து மதித்துப்போகிறுன். கள்ளைக்குடித்து மதித்துப் போகிறுன். ஆகையால் பார்வையே விஷமாகவுடைய ஸ்திரீயை தூரத் தள்ளிவிடவேண்டியது. ஸ்திரீகளுடன் சம்பாஷணை (புணர்ச்சி சம்பந்தமாய்ப் பேசுதல்), ஆலாபனை (நெருங்கிப் பேசுதல்), பார்வை இவைகளையும் ஆட்டம், பாட்டு, ஸாஹஸம் (துன்பம்செய்தல், பலவந்தம்செய்தல் முதலியன), தர்க்கவாதம் இவைகளையும் விட்டுவிடவேண்டியது. ஓ நாரதா! இப்படிப்பட்டவனுக்கு ஸ்நாநமில்லை, ஜபமில்லை, பூஜையில்லை, ஹோமமில்லை, சாதனமில்லை, அக்கினிகாரிய முதலான கருமமில்லை, அர்ச்சனையில்லை, பிதுர்காரியமில்லை, தீர்த்தயாத்திரையில்லை, விருதங்களில்லை, தருமாதருமங்களில்லை, விதியில்லை, உலகசம்பந்தமான கிரியைகளில்லை. சகல கருமங்களையும் உலகாசாரங்களையும் விட்டுவிட வேண்டியது. பரமார்த்த புத்தியுள்ள வித்துவானும் யோகியுமான எதியானவன் புழுப்பூச்சி பக்ஷி விருக்ஷங்கள் இவைகளை நாசம்செய்யக்கூடாது. ஓ நாரதா! நித்தியம் உள்நோக்கமுள்ளவனையும் சுத்தமானவனையும் மனதை யடக்கினவனையும் தான் பூர்ணன் என்கிற புத்தியுடையவனையும் உள்ளே பற்றுதலை விட்டவனையும் உலகத்தில் சஞ்சரி. ஒன்றியாய் சஞ்சரிக்கிற முனியானவன் இராஜனில்லாத தேசத்தில் சஞ்சரிக்கிறதில்லை (சஞ்சரிக்கலாகாது). ஸ்துதியுமில்லை. நமஸ்காரமுமில்லை (ஒருவனைக்குறித்து ஸ்துதிசெய்கிறதும் நமஸ்காரம் செய்கிறதுமில்லை, தன்னைக்குறித்து ஒருவன் ஸ்துதி நமஸ்காரங்கள் செய்ய இடம் கொடுக்கிறதுமில்லை). தேவ பிதுர் ஆராதனையுமில்லை. (சலாசலநிகேதஶ்ச) * சலமாயும் அச

* (சலம்) சலம்=அடிக்கடி மாறுதலை யுடையதான தேகம். (அசலம்) அசலம்=ஸ்திரஸ்வபாவமுடைய ஆத்மா. (நிகேத:) நிகேதன் = வாசஸ்தலத்தை யுடையவன், அதாவது சலமாகிய தேகத்தையும், அசலமாகிய ஆத்மாவையும் வாஸஸ்தலமாயுடையவன் என்றுச்சுது. இதின் தாத்பரிய மென்னவென்றால், பரமார்த்த சந்நி

லமாயுமிருக்கிற வாஸஸ்தலத்தை யுடையவனுயிருக்கிற எதியானவன் (ஆகாரம்) கிடைத்தவளவில் திருப்தியுள்ளவனு யாகவேண்டியது, என்று உபநிஷத்.

ஆறுவது உபதேசம் முற்றிற்று.

---

## எ-வது உபதேசம்.

எதியினுடைய நியமமென்னவென்று கேட்கப்பட்ட பிதாமகரானவர் நாரதனை சிலாகித்துச் சொல்லுகிருர்.

விரக்தியடைந்த சந்நியாசியானவன் வருஷாகாலத்தில் ஓரே சுவபாவமுடையவனுய் (ஓரிடத்திலிருக்கவேண்டியவன். வருஷாகாலம் நான்குமாதங்கள் போக ஒருவருஷத்தின் மற்ற) எட்டுமாதங்களில் ஒன்றிக்காரனுய் சஞ்சரிக்கவேண்டியது. சந்நியாசியானவன் ஒருநாள் ஒரு இடத்தி லிருக்கக்கூடாது. பயத்தினுல் ஒருவிடத்தில் தங்காமலிருக்கிற மானைப்போல் ஓரிடத்திலும் தங்காமலிருக்கவேண்டியது. தான் போகிறதற்கு தடையுண்டாகும்படி யாதொரு கிரகணமும் செய்யக்கூடாது (இந்திரியங்களால் உணர்ந்தவிஷயங்களின் நிமித்தம் நிற்கக்கூடாது என்பது கருத்து). கைகளினுலே நதியைத் தாண்டக்கூடாது. மரமேறக்கூடாது. தேவோற்சவத்தைப் பார்க்கக்கூடாது. இராபோஜனம் செய்யக்கூடாது. (விக்கிராரதனை முதலிய) வெளி தேவதார்ச்சனைசெய்யக்கூடாது. தனக்கன்னியமான (ஆத்மாவுக்கன்னியமான) வைகளைத் தள்ளி மதுகர விருத்தியினுல் (தேனீ பல புஷ்பங்களில் ஒவ்வொன்றிலும் அற்பதேனை கிரகிப்பதுபோல் பலவீட்டில்கொஞ்சம் கொஞ்சமாய் பிக்ஷைவாங்கின அன்னத்தினுல்) ஆகாரம் செய்துக்கொண்டு தேகம் மெலிந்தவனு யிருக்கவேண்டியது. கொழுப்பை விருத்திசெய்யக்கூடாது. நெய்யை உதிரம்போல் தள்ளவேண்டியது. இராபோஜனத்தை மாம்சம்போலவும், சந்தனப்பூச்சை அமேத்தியம் போலவும், உப்பை சண்டாளன்போலவும், வஸ்திரத்தை எச்சில் பாத்திரம்போலவும், எண்ணெய் முழுக்கை ஸ்திரீசங்கம் போலவும், சிநேகிதனைச் சந்தோஷப்படுத்துதலை மூத்திரம்போலவும், ஆசையை கோமாம்சம்போலவும், தான் அறிந்திருக்கிற தேசத்தை பரச்சேரி போலவும், சுவர்ணத்தையும் ஸ்திரீயையும் முறையே பாம்புபோல

---

யாசியானவன் கௌபீனவஸ்திரம் தரிப்பது; பிக்ஷைவாங்குவது, பிக்ஷாந்நத்தை யுண்பது இவ்வித விஷயங்களுக்காக சுவற்பகாலம் ஆத்மதிருஷ்டியை மறந்து சலமான தேகத்தில் வாசம் செய்கிறவனுயும், மற்ற நிஷ்டாகாலத்தில் பிரபஞ்சத்தை மறந்து ஆத்மதிருஷ்டியிலேயே யிருப்பவனுகையால் அசலமான ஆத்மாவிலேயே வாசம் செய்கிறவனுயும் சொல்லப்பட்டான். மாண்டூக்கியோபநிஷத் கௌடபாத காரிகையில் வைதத்தியப் பிரகரணம் ௩எ-வது சுலோகத்திலுள்ள இதே வாக்கியத்திற்கு ஸ்ரீமத் சங்கராசாரியர் அவர்கள் செய்திருக்கிற பாஷியம்பார்க்க.

வும், காலகூட விஷம்போலவும், சபைகூடும் ஸ்தலத்தை ஸ்மசான ஸ்தலம்போலவும், இராஜதானியை குக்பீபாகம் (ஆகிய நரகம்) போலவும், இராபோஜனத்தை * சவப்பிண்டம் போலவும் (எண்ணிக்கொண்டு) தன்னை (ஆத்மாவை) த்தவிர அன்னிய தேவதா தெரிசன மில்லாமலும் பிரபஞ்சவிருத்தியை விட்டும் சுவதேசத்தை விட்டும் மறந்துபோனவஸ்து மறுபடி கிடைத்தபோ துண்டாகும் ஆநந்தத்தைப்போல் தன்னுடைய (மறந்துபோயிருக்கிற) ஆத்மாநந்தத்தை நினைத்துக்கொண்டு, தன்சரீராபிமானத்தையும் தேசத்தையும் மறந்து, தன்சரீரத்தைப் பிணத்தைப்போல் நிந்திக்கத்தக்கதாக அறிந்து, காராகிரகத்தில் (காவற்கூடத்தில்) இருந்து விடுபட்ட திருடனைப்போல புத்திர ஆப்தபந்து ஜனனபூமி இவைகளைவிட்டு, தூரத்தில் வசிக்க வேண்டியது. பிரயத்தினமன்றி கிடைத்ததைக் கிரகித்துக்கொண்டு, பிர்ம்மப்பிரணவத்தியானனு சந்தானமுள்ளவனாய், சகல கருமங்களிலிருந்து விடுபட்டவனாய், காமக்குரோத லோப மோஹ மத மாச்சரியாதிகளை யெரித்தவனாய், முக்குணங்களைக் கடந்தவனாய், ஷடூர்மி† யற்றவனாய், ஷட்பாவ விகாரம்‡ இல்லாதவனாய், உண்மை பேசுகிறவனாய், ருசியுள்ள பதார்த்தங்களுக்கு (உருசியான வஸ்துக்களுக்கு) விரோதியாய் கிராமத்தி லொருநாளும், பட்டணத்தி லைந்துநாளும், க்ஷேத்திரத்தி லைந்துநாளும், தீர்த்தத்தி லைந்துநாளும் வசிக்கவேண்டியது. குறிப்பான விடமற்றவனாய், நிலையுள்ள புத்தியுடையவனாய், ப்பொய் சொல்லாதவனாய்ப், பருவதக்குகைகளிலே ஒருவனாகவே வசிக்கவேண்டியது. இரண்டுபெயர் சேரலாகாது. மூன்றுபெயர் சேர்ந்தால் கிராமமாகிறது. நான்குபெயர் சேர்ந்தால் நகரமாகிறது ஆகையால் ஒருவனாக கிராமத்தில் வாசம்செய்யலாம். அவ்விடத்தில் (வாசம்செய்கிறவிடத்தில்) பதினான்கு காணங்களுக்கு இடம் கொடுக்கக்கூடாது (இந்திரியமனாதிகளுக்கு பிரவிருத்திகூடாதென்பது தாத்பரியம்). சிதறிப்போகாத ஞானத்தினாலே வைராக்கிய சம்பத்தை அனுபவித்துத் தனக்கன்னியமாக வேறொன்றுமில்லையென்று தனக்குள்ளே ஆலோசித்து எவ்விடத்திலும் சுவரூபத்தையே பார்த்து ஜீவன்முக்தியையடைந்து ப்ராரப்தநாசம்வரையில் நான்குவிதசுவரூபத்தை யறிந்து (நான்குவித சுவரூபமாவன—தத்துவமஸி வாக்கியத்திலுள்ள தத், பதத்தின் வாச்சியார்த்தமாகிய மாயாசபள பிர்ம்மம், அதின் லக்ஷியார்த்தமாகிய

* இது இரட்டித்துச் சொல்லப்படுகிறது.

† பசி-தாகம்-சோகம்-மோஹம்-ஜரா (கிழத்தனம்)-மரணம்-இவைகள் ஷடூர்மிகள்.

‡ ஜாயதே—உண்டாதல், அஸ்தி — இருத்தல், வர்த்ததே — வளர்தல், விபரிணமதே — திரிதல், அபக்ஷீயதே — குறைதல், நஸ்யதி — நசித்தல் இப்படி விகாரங்கள் ஆறு.

நிர்குண பிர்ம்மம், ப்ரணவம், பதத்தின்வாச்சியார்த்தமாகிய எதிரிலுள்ள சிஷியன், அதின்லக்ஷியார்த்தமாகிய பிரத்தியகாத்துமாவான கூடஸ்த சைதன்னிய மிவைகளே), தேகம்விழுகிறவரையில் சுவரூபானுசந்தானத்தோடு வசிக்கவேண்டியது. குடீசகனுக்கு மூன்றுகாலம் ஸ்நாநம். பெகூதகனுக்கு இரண்டுகாலம் ஸ்நாநம். ஹம்சனுக்கு ஒருகாலம் ஸ்நானம். பரமஹம்சனுக்கு மனோமயஸ்நானம். துரியாதீதனுக்கு பஸ்ம(விபூதி)ஸ்நானம். அவதூதனுக்குக் காற்றேஸ்நானம். குடீசகனுக்கு ஊர்த்துவபுண்டரம். பேகூதகனுக்கு திருபுண்டரம். ஹம்சனுக்கு ஊர்த்துவபுண்டரமும் திருபுண்டரமும். பரமஹம்சனுக்கு பஸ்மதாரணம். துரியாதீதனுக்குத்திலகபுண்டரம். அவதூதனுக்கு அல்லது துரியாதீத அவதூதன் இவர்களுக்கு ஒன்றுமில்லை. குடீசகனுக்கு ருதுவுக்கு ருது க்ஷவரம். (பெகூதகனுக்கு) இரண்டுருதுவுக்கொருதடவை (க்ஷவரம்). ஹம்ஸனுக்கும் பரமஹம்ஸனுக்கும் க்ஷவரமில்லை, வேண்டுமானால் அயனத்திற்கு ஒருதடவை (க்ஷவரம்). துரியாதீத அவதூதர்களுக்கு க்ஷவரமேயில்லை. குடீசகனுக்கு ஒரு அன்னம் (ஒருவனுடைய அன்னம்). பெகூதகனுக்கு பிக்ஷைவாங்கியுண்பது. ஹம்ஸபரம ஹம்ஸனுக்குக் கரபாத்திரம். துரியாதீதனுக்குக்கோமுகம் (வாயினால் பசுவைப்போல் புஜிப்பது). அவதூதனுக்கு அஜகரவிருத்தி. குடீசகனுக்கு இரண்டுவஸ்திரம். பெகூதகனுக்கு ஒருவஸ்திரம். ஹம்ஸனுக்கு வஸ்திரத்துண்டு. பரமஹம்ஸனுக்குத் திகம்பரம் அல்லது ஒருகௌபீனம். துரியாதீத அவதூதர்களுக்குப் பிறந்தமேனியா யிருத்தல். ஹம்ஸபரம ஹம்ஸர்களுக்கு மான்தோல். மற்றவர்களுக்கில்லை. குடீசகபெகூதகர்களுக்குத் தேவார்ச்சனம். ஹம்ஸபரமஹம்ஸனுக்கு மானஸிகபூஜை. துரியாதீத அவதூதர்களுக்குத் தானே பிர்ம்மமென்கிற பாவனை. குடீசகபெகூதகர்களுக்கு மந்திரஜபத்திற்கு அதிகாரமுண்டு. ஹம்ஸபரம ஹம்ஸர்களுக்குத்தியானாதிகாரம். துரியாதீத அவதூதர்களுக்கு ஒன்றிலும் அதிகாரமில்லை. ஆனால் மகாவாக்கிய உபதேசத்திற்கு அதிகாரமுண்டு. பிரமஹம்ஸனுக்கும் மகாவாக்கியோப தேசாதிகாரமுண்டு. குடீசகபெகூதக ஹம்ஸர்களுக்கு இதரனுக் குபதேசம் செய்கிற அதிகாரமில்லை. குடீசகபெகூதகர்களுக்கு மானஸப்பிரணவம் (மனதில் பிரணவத்தை யுச்சரித்தல்). ஹம்ஸ பரமஹம்ஸர்களுக்கு ஆந்தரப்பிரணவம் (ஹிருதயத்தியானம் அல்லது ஜாக்கிரத்சுவப்ன வஸ்தைகளிலும் தியானம்). துரியாதீத அவதூதர்களுக்கு பிர்ம்ம பிரணவம் (இடைவிடாமல் எல்லா அவஸ்தைகளிலும் பிரணவத்தியானம்). குடீசக பெகூதகர்களுக்குசிரவணம் (வேதம் முதலியவை கேட்குதல்). ஹம்ஸ பரமஹம்ஸர்களுக்கு மனனம். துரியாதீத அவதூதர்களுக்குநிதித்தியாசம். (இவர்கள்) எல்லாருக்கும் ஆத்மானு சந்தானம் அவசியம் வேண்டும். இந்தப்படிக்கு முமுக்ஷுவானவன் சமுசாரத்திலிருந்து கரையே

ஜித் (பிரபஞ்ச முழுதும் ஜயித்தவனென்றால், பிரபஞ்சத்திற்கு மேலானவன் அல்லது விலக்ஷணன் என்று தாத்பரியம்). இதுதான் முதல் பாதம். இந்தப்பிரபுவானவன் சுவப்னத்தை யடைந்தால் சூக்ஷ்ம * பிரக்கியை யுடையவனாகிறான். ஓ! பரந்தபா! எட்டு அங்கங்களை யுடைய அவன் ஒருவனாயிருக்கிறான். வேறொருவனுமில்லை. சூக்ஷ்ம புக்காயும், சதுராத்துமாவாயும் தைஜஸனென்கிற பெயரையுடையவனாயும், பூதங்களுக் கிறைவனாயுமிருக்கிற இவன்தான் ஸ்தூலாபிமானியா யுள்ளேயிருக்கிற ஹிரண்ணிய கருப்பன். (இவன்தான்) இரண்டாம் பாதமா யிருக்கிறானென்று சொல்லப்படுகிறான். எதில் யாதொரு விருப்பமில்லாதவனா யிருக்கிறானோ, எதில் சுவப்னத்தைக் காணுகிற தில்லையோ, அதுதான் சுஷுப்தம். அந்த சுஷுப்தியில் ஐக்கமானவன் பிரக்கியான கனவான் (ஞானசுவரூபி). சுகி. நித்தியாநந்தசுவரூபி. சகல ஜீவன்களிலும் உள்ளேயிருக்கிற ஆத்மா. அப்படியானாலும் ஆனந்தபுக்காயும் மனதே முகமாகவுடையவனாயும் எங்கும் வியாபித்தவனாயும் நாசமற்றவனாயும் சதுராத்துமாவாயும் ஈசுவரனாயு மிருக்கிற பிராக்கியனானவன் மூன்றாவது பாதமென்ற பெயரையடைந்தான். இவன்சர்வேசுவரன், சர்வக்கியன், சூக்ஷ்மபாவனன் (சூக்ஷ்மமான நினைவுடையவன்), இவன் அந்தர்யாமி, இவனே சகல உற்பத்திக்கும் காரணன், உற்பத்திப்பிரளயமும் அவன்தான், இந்தமூன்றும் (அவஸ்தைகள் மூன்றும்) சகலப்பிராணிகளுக்கும் சாந்தியையடைகிறதற்கு பாதகமாயிருக்கிறது. எது சுவப்னமோ அது சுஷுப்தம். அது மாயாமாத்திரமென்று சொல்லப்படுகிறது. நான்காவதாகிய சதுராத்துமாவானவன் சத் சித் ஏகரஸமானாலும் நான்காவதாக முடிந்தபடியினாலேயும் (முந்தியமூன்று அவஸ்தைகளில்) ஒவ்வொன்றையும் பின்பற்றியபடியினாலேயும் விகற்பஞானத்திற்கு சாதனமாயிருக்கிற க்ஞாதா (அறிந்தவன்). அனுக்ஞாதா (அறிந்தவனைப் பின்பற்றியவன்). இவர்களை யறிந்து இவ்விடத்திலுங்கூட சுஷுப்தி சுவபன அந்தர (துரிய) மாகிய மூன்று விகற்பங்களையும் மாயாமாத்திரமாக வறிந்து சத் சித் ஏகரஸமாயிருக்கிறானல்லவா? இந்தவிதியானது பாகித்துச் சொல்லப்படுகிறது. (அதாவது) எப்போதும் ஸ்தூலப்பிரக்கியமுமல்ல. (ஆத்மாவானவன் ஸ்தூலதேகத்தில் ஜாக்கிரதவஸ்தையையுடைய விசுவனல்ல). அத்தியந்தம் சூக்ஷ்மபிரக்கியமுமல்ல (மிகவும் சூக்ஷ்மதேகத்திலிருக்கிற சுவப்னவஸ்தையையுடையதை ஜஸனல்ல). பிரக்கியமுமல்ல. (காரணதேகத்திலிருக்கிற சுஷுப்தி அவஸ்தையையுடைய பிராக்கியனல்ல). ஓ! முனியே! அற்பப்பிரக்கியமுமல்ல. பிரக்கியை யில்

* சூக்ஷ்ம பிரஞ்ஞை=ஸ்தூல பிரஞ்ஞையில் இந்திரியாதிகளினால் அனுபவித்த விஷயங்கள் சூக்ஷ்மமா யடங்கியிருந்து அந்தவாசனையானது சுவப்னத்தில் உதயமாகிறது. அப்போது சூக்ஷ்மதேகத்தி லிருக்கிற தைஜஸன் சுவப்ன விஷயங்களை யறிகிறான்.

லாததுமல்ல. உபயப்பிரக்கியமுமல்ல (ஜாக்கிரத் சுவப்னுவஸ்தைகளுக்கு மத்தியாவஸ்தையுமல்ல). உள்பிரக்கியமுமல்ல. பிரக்கியமல்லாவிட்டாலும் பிரக்கியானகனம் (இப்படிப்பட்ட ஞானமுடையதென்று குறிப்பிட்டுச் சொல்லக்கூடாததானுலும் ஞானக்கட்டியா யுள்ளது). இந்திரியங்களா லறியக்கூடியதேயல்ல. ஊகத்தினு லறியக்கூடியதுமல்ல. கருமேந்திரியங்களால் கிரகிக்கக்கூடியதுமல்ல. நிரூபித்துக காட்டத்தகுந்ததுமல்ல. நினைப்புக்கெட்டினதுமல்ல. இணையிட்டுக் காட்டத்தக்கதுமல்ல. சுவானுபவத்தினுலேயே அறியத்தகுந்தது. ஜாக்கிரத் முதலிய அவஸ்தையற்றது. மங்களகரமானது. விகாரமற்றது. இரண்டாவதற்றது. இப்படிப்பட்டதைத் துரியமென்று எண்ணுகிர்ருகள். (எண்ணுகிருர்களென்றதினுல் துரியாவஸ்தைகூட வாஸ்தவமல்லவென்று எற்படுகிறது. மாண்டூக்கியோபநிஷத் ஏழாவதுவாக்கியத்தையும் அதற்கு ஸ்ரீமத் சங்கராசாரியார்செய்திருக்கும் பாஷியத்தையும் பார்க்க). இதுதான் பிர்ம்மம். (இதுதான்) பிர்ம்மப்பிரணவம். அதையறியவேண்டியது. வேறேதுரியமில்லை. எவ்விடத்திலும் சூரியனைப்போல் முமுக்ஷுக்களுக்கு ஆதாரமா யிருக்கிறது. சுவயம் ஜோதியாயிருக்கிறது. இதேபிர்ம்ம மானபடியினுலே இந்தப்பிர்ம்மாகாச மானது எப்போதும் விளங்கிக்கொண்டிருக்கிறது, என்று உபநிஷத்.

எட்டாவ துபதேசம் முற்றிற்று.

---

## கூ-வது உபதேசம்.

பரப்பிர்ம்மசுவரூப மெப்படியென்று நாரதர் கேட்டார். அதற்குப் பிதாமகர் சொல்லுகிருர். பிர்ம்மசுவரூப மெதுவென்ருல், இவன் (பரமாத்துமா) அந்நியன். நான் (ஜீவன்) அந்நியன் என்று எவர்கள் அறிகிருர்களோ அவர்கள்தான் பசுக்கள். சுபாவமான பசுக்கள் பசுக்களல்ல. பிர்ம்மத்தை இப்படியறிந்து (பிர்ம்மமே ஜீவன், ஜீவனே பிர்ம்மமென்றறிந்து) வித்வானுனவன் மிருத்துவின் வாயிலிருந்து தப்புகிருன். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.

(தேகாதி பிரபஞ்சங்களுடைய) உற்பத்திக்குக் காரணம் காலமா? (அக்கினிக்குஷ்ணம்போல்) சுவபாவமா? கருமமா? காரணமே யில்லையா? (பஞ்சமகா) பூதங்களா? (ஜீவாத்தும பரமாத்துமாவாகிய) புருஷனு? அல்லது (காலமுதலான) இவர்களுடைய சேர்க்கையா? ஆத்மா (சகலத்திற்கும் போக்தாவாக) இருக்கிறபடியினுலே (காலாதிகள் சேர்ந்தாவது தனித்தனியாயாவது உற்பத்திக்குக் காரணம் அல்ல. சுகதுக்கத்திற்கு எதுவிருப்பதினுலே ஜீவாத்மா யஜமானனல்ல. (சுகதுக்கங்களுக் கேதுவான கருமங்களுக் குள்பட்டு பராதினனு யிருப்பதினுலே ஜீவாத்மா காரணனல்ல). அவர்கள் (இந்

சு

தஜகத்திற்குக் காரணமேதென்று தேடிக்கொண்டிருந்த மகரிஷிகள்) தியானயோகத்தை யநுசரித்தவர்களாய் காலம் ஆத்மா முதலானவர்களுடன் கூடியிருக்கிற சகல காரணங்களேயும் எந்த ஒருவன் ஏவுகிருனே அந்தத் தேவனுடைய சுவகுணங்களினல் மறைந்திருக்கிற ஆத்மசக்தியைக் காரணமாக அறிந்தார்கள். (என்ருல், காலம் புருஷன் இவர்களுடன் சேர்ந்திருக்கிற மேல்கண்டவைகளான எல்லா காரணங்களேயும் ஏவுகிற பரமாத்துமாவினுடைய சுவகுணங்களினலே மறைந்திருக்கிற தெப்படியென்ருல், ஈசுவரனுடைய சர்வக்கியாதி குணங்களினலே, அல்லது தத்துவ கூட்டங்களுடன் சேர்ந்திருப்பதினலே, அல்லது காரியகாரணங்களிலிருந்து விலகியிருக்கிற பூர்ணுநந்த அத்துவய பிர்ம்மசுவரூபத்தினலே "மறைந்திருக்கிற" என்பது தாத்பரியம். சிருஷ்டிஸ்தி திலயங்களுக்குக் காரணமாயிருக்கிற "சக்தியை" பிர்ம்மா விஷ்ணு ருத்திர சுவரூபமான சக்தியை, என்று தாத்பரியம். அல்லது "சுவகுணத்தினலே மறைந்திருக்கிற" என்ருல், சத்துவரஜஸ் தமோ குணத்தினல் "மறைந்திருக்கிற" என்ருவது அர்த்தம் செய்யலாம். ஏனென்ருல், சத்துவகுணத்தினல் விஷ்ணுவாயும், இரஜொகுணத்தினல் பிர்ம்மாவாயும் தமோகுணத்தினல் ருத்திரராயும் உபாதிகளுடன் கூடியவர்களாயிருக்கிற அவர்கள் அவஸ்தா பேதத்தை யடைந்து பரமாத்தும காரியமாகிய சிருஷ்டி முதலியவை செய்தாலும் சத்துவம் முதலிய உபாதியற்ற பூர்ணுனந்த அத்துவதிய பிர்ம்மசுவரூமாயறியப் படுகிறதில்லை யாகையால் "சுவகுணத்தினல் மறைந்திருக்கிற" என்று மற்ருெரு அர்த்தம். இந்த உபதேசத்தின் துவக்கத்தில் பிரயோகமா யிருக்கிற வாக்கியங்கள் சுவேதா சுவதர உபநிஷத்முதல் அத்தியாயம் ௨-வது மந்திரத்திலும் பிரயோகிக்கப்பட் டிருப்பதால் இதுவரையில் வந்திருக்கிற வாக்கியங்களுக்கும் இனிவருகிற சில வாக்கியங்களுக்கும் மேற்படி உபநிஷத்திற்கு ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் செய்திருக்கும் பாஷியத்தை அனுசரித்து இவ்விடத்திலும் இனிவரும் பதங்களுக்கு அதனடியில்வறையும் குறிப்புகளிலும் அர்த்தஞ்செய்யப்பட்டன. இந்த நாரதபரிவிராஜகோபநிஷத்தில் இந்த இடத்தில் "தமெகூலிநு" என்றிருப்பது பிசகாய்க்காணுகிறது. சுவேதாசுவதர உபநிஷத் வாக்கியப்படி "தமெகூமெநமிம்" என்றுதா னிருக்கவேண்டும்.) மூன்ருல்* சூழப் பட்டதாயும் பதினறை† முடிவாயுடையதாயும், ஐம்பது‡ ஆரைக்கால்

---

* சத்துவ ரஜஸ் தமோ குணங்களால்.

† பூதங்கள் ௫. மனதுள்பட இந்திரியங்கள் ௧௧. ஆக ௧௬. அல்லது பிரசிேனுப நிஷத்தில் சொல்லியிருக்கிறபடி பதினறுகலேகள், அல்லது ஸமஷ்டி சுவரூபியான விராட், சூத்திராத்துமா, வியஷ்டியாயிருக்கிற பதினன்கு லோகங்கள் ஆகப் பதினறு.

‡ தமஸ் மோகம் மகாமோகம் தாமிஸ்ஸரம் அந்ததாமிஸ்ஸரம் என்கிற விபரியயங்கள்-௫, சக்தி-௨௮, துஷ்டி-௯, சித்தி-௮, ஆக-௫௰, அல்லது ௫௰-சக்திகள்.

களை யுடையதாயும், இருபது * உதவி ஆரைக்கால்களை யுடையதாயும், ஆறுஎட்டு † களுடன்கூடினதாயும், அநேகவிதங்களாயுமிருக்கிற காம மென்கிற ‡ கயிற்றை யுடையதாயும், மூன்று § பேதமானமார்க்கங்களை யுடையதாயும், இரண்டு ¶ நிமித்தமான மோகத்தையுடையதாயு மிருக் கிற பிர்ம்மசக்கரத்தை (கண்டார்கள்). பெருகிவருகிற ஐந்து ‖ ஜலப் பிரவாகத்தை யுடையதாயும், ஐந்து + காரணங்களினாலே குரூரமாயும் கோணலாயுமிருக்கிறதாயும், ஐந்து ∴ பிராணன்களை அலைகளாயுடைய தாயும், ஐந்து × புத்தியாதிகளை மூலமா யுடையதாயும், ஐந்து ÷ சுழி களை யுடையதாயும், ஐந்து [] துக்கங்களை வேகமா யுடையதாயும், ஐம்பது $ பேதங்களை யுடையதாயும், ஐந்து % தடைகளையுடையதாயு

---

* இந்திரியங்கள்-௧௦, அவைகளின் விஷயங்கள்-௧௦, ஆக இருபது.

† பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், மனது, புத்தி, அகங்காரம், இந்தப் பிர கிருதிகள்-அ. துவக், தோல், மாம்சம், இரத்தம், கொழுப்பு, எலும்பு, ஊன், சுக்கி லம், இந்த தாதுக்கள்-அ. அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாம்மி யம், ஈசத்துவம், வசித்துவம், இந்த சித்திகள்-அ. தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதருமம், அக்கியானம், அவைராக்கியம், தாரித்திரியம், இந்த (ஹாவ) பாவங்கள்-அ. பிரும்மா, பிரஜாபதி, தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், இராக்ஷ ஸர்கள், பிதுர்க்கள், பிசாசுகள், இந்த தேவதைகள்-அ. தயவு, பொறுமை, பொறா மை, சௌசம், அநாயாசம், [illegible]ங்களம், அதைரியம், ஆசையில்லாமை, இந்த ஆத்ம குணங்கள்-அ. ஆக - ௪அ.

‡ சுவர்க்கபுத்திர அ[illegible]ம் முதலிய விஷயபேதங்களாகிற கயிறு.

§ [illegible]ருமம் அதருமம் ஞானம்.

¶ [illegible]மாவல்லாத தேகேந்திரிய மனோபுத்தி முதலியவைகளில் பாபம், புண் ணியம், இந்த இ[illegible]டு நிமித்தத்தினாலே உண்டாகிற அபிமானம்.

‖ தேகமாகி[illegible] நதிக்கு ஞானேந்திரியங்களாகிற ஜலப்பிரவாகம் ஐந்து.

+ பஞ்ச [illegible]களாகிற காரணங்களினாலே குரூரமாயும், கோணலாயு மிருக்கி றது, ஐந்து கால்வா[illegible]களாகப் பிரிந்துவருவதுபோ லிருக்கின்றது.

∴ பிராணன் முதலான ஐந்து வாயுக்கள் அல்லது கருமேந்திரியங்கள் ஐந்து.

× புத்தியாதிகளென்றால் - ஞானேந்திரியங்கள் ஐந்து, அவைகளுக்கு ஆதிகார ணமானது மனது.

÷ சப்த ஸ்பரிச ரூப ரஸ கெந்தங்களாகிய விஷயங்கள் ஐந்து சுழிகள்.

[] கருப்பதுக்கம், ஜனனதுக்கம், ஜராதுக்கம், வியாதிதுக்கம், மரணதுக்கம் இவைகள் வேகம்.

$ ஞானேந்திரிய கருமேந்திரியங்கள்-௧௦; பிராணன் - உபப்பிராணன்கள்-௧௦; சூக்ஷ்ம ஸ்தூலபூதங்கள்-௧௦, அந்தக்கரணங்கள்-௪. ஸ்தூலசூக்ஷ்ம காரணதேகங் கள்-௩. ஜாக்கிரத் சுவப்ந சுஷுப்தி அவஸ்தைகள்-௩. தோல் மாம்சம் எலும்பு நர ம்பு கொழுப்பு ஊன் உதிரம் வாத பித்த சிலேஷ்மம்-௧௦; ஆக பேதங்கள்-௫௦.

% அவித்தை, மனவிகாசமின்மை, ஆசை, துவேஷம், அபிமானம் இவ்வைந்து துக்கங்கள் தடைகள்.

மிருக்கிறதை உபாசிக்கிறேம். (இப்படிக் காரிய காரண ரூபங்களாக விருக்கிற பிர்ம்ம சக்கரமானது சக்கர ரூபமாயும் நதி ரூபமாயும் வர்ணிக்கப்பட்டது). சகல உயிர்வாழ்க்கைக்கு மிருப்பிடமாயும் சகலமும் முடிவிலடங்குகிற இடமாயும் பெரிதாயுமிருக்கிற இந்தப் பிர்ம்மசக்கரத்தில் ஜீவனானவன் தான் வேறே, ஏவுகிற (ஈசுவரன்) வன் வேறே என்றெண்ணிப் பிரமிக்கிறுன். அவனாலே (ஈசுவரனாலே) அனுக்கிரகிக்கப்பட்டவனாய் அதினாலே (அந்த அனுக்கிரகத்தினாலே) மோக்ஷத்தை யடைகிறான். (அந்த அனுக்கிரக பலத்தினாலே, தானே பிர்ம்மமென்றறிந்து பிரமரகீடம்போல உபாசித்துவந்தால் சகல பெந்தத்திலிருந்து விடுபடுகிறானென்பது தாத்பரியம்).

பிர்ம்மமானது (காரியகாரணப் பிரபஞ்சங்களைக் காட்டிலும்) சிரேஷ்டமானதென்றும் நாசமற்றதென்றும் (வேதாந்தங்களினாலே) உபதேசிக்கப்பட் டிருக்கிறது. அதில் (அந்தப் பிர்ம்மத்தில் போக்தா போக்கியம் பிரேரிதாவாகிய) மூன்று மிருக்கின்றன. ஆனபடியினாலே (பிர்ம்மம் பிரபஞ்சத்திற்கு) ஸ்திரமான விருப்பிடமாயிருக்கிறது. இவ்விடத்தில் (இந்தப் பிரபஞ்சத்தில் அல்லது சரீரத்தில்) உள்ளே யிருக்கிற பிர்ம்மத்தையறிந்து பிர்ம்ம வித்துக்களானவர்கள் பிர்ம்மத்திலேயே சமாதியுடையவர்களா யிருந்து அந்தப் பிர்ம்மத்தில் லயமடைகிறார்கள். (என்றால், போக்தாபோக்கியம் பிரேரிதா இந்தக்குணங்கள் பிர்ம்மத்தினிடத்தில் கயிற்றில் பாம்புபோல் ஆரோபிக்கப்பட்டிருக்கிறதென்பதையும் பிரபஞ்சம் மித்தை என்பதையும் பிர்ம்மம் சர்வாத்துமாவாயும், ஒன்றிலும் சம்மந்த மற்றதாயும், அவைகளைவிட விலக்ஷணமாயு மிருக்கிறதென்பதையுமறிந்து தானே பிர்ம்மமென்கிற நிஷ்டையுடையவனானால் சகலபெந்தத்திலிருந்தும் விடுபட்டு முக்தனாகிறானென்பது தாத்பரியம்). வியக்தாவியக்த (காரியகாரண) மென்று சொல்லப்படுகிற க்ஷராக்ஷரங்களுடன் (சேதனாசேதனங்களுடன்) கூடியிருக்கிற இப்பிரபஞ்சத்தை ஈசுவரன் தாங்கிக்கொண்டிருக்கிறான். தான் போக்தாவென்கிற எண்ணத்தினாலே அநீச (ஜீவ) னான ஆத்மா (கருமபெந்தத்தினால்) கட்டுப்படுகிறான். (உபாதியற்ற) தேவனை (ஈசுவரனுடைய அநுக்கிரகத்தினால் ஜீவன்) அறிந்து சகலபாசங்களிலிருந்தும் விடுபடுகிறான். ஈசுவரன் ஜீவன் இவர்கள் பிறப்பற்றவர்கள். ஒருவன் (ஈசுவரன்) ஞானி. மற்றொருவன் (ஜீவன்) அக்கியானி. பிறப்பற்றவளாயும் ஒருத்தியாயு மிருக்கிற பிர்ம்மாத்தும சக்தியானவள் போக்தாக்களுடைய போகார்த்தமாய் பிரவிருத்திக்கிறாள் (அதெப்படியென்றால், பிறந்தகுழந்தை அல்லது கன்றுக்குட்டி முதலியவைகளுக்கு ஆகாரார்த்தம் தாய்முலையில் தானாகவே பாலுண்டாவதுபோல). ஆத்மாவானவன் முடிவற்றவனே. பிரபஞ்ச மிவனுடைய ரூபமே. இவன் கருத்தாவல்ல. இந்த (ஜீவேசுவர பிரபஞ்ச) மூன்று ரூபமாயிருக்கிற

பிர்ம்மத்தை எப்போது அறிகிருனே (அப்போது) பெந்தத்திலிருந்து விடுபடுகிருன். பிரதானம் (மாயை) தான் க்ஷரம். பரமேசுவரன் தான் அமிருதமான அக்ஷரம். பிரதான புருஷர்களை ஒருவனுன (பரமாத்துமாவான) தேவனுனவன் நியமனம்செய்கிருன். எப்போதும் அந்தப் பரமேசுவரனுடைய தியானத்தினுலேயும் சேர்க்கிறதினுலேயும் (சகலப் பிரபஞ்சத்தையும் பரமாத்துமாவில் லயிக்கச் செய்கிறதினுலேயும்) தத்துவ (தானே பிர்ம்மமென்கிற) பாவனையினுலேயும் பிரபஞ்சரூபமான (சுகதுக்க மோகாத்துமகமான) மாயை நிவிருத்தியாகிறது. அந்தத்தேவனையறிந்தால் அவித்தை முதலானவையெல்லாம் நாசமடைகிறது. அப்படிப்பட்ட துக்க நிவிருத்தியினுலே பிறப்பு, இறப்பில்லாமையுண்டாகிறது. (அதாவது, பிரும்மலோகத்தை யடைந்து அவ்விடத்தில் சகல ஐசுவரியங்களையும் அனுபவித்து அதையும் தள்ளி நிர்குணேபாசனைசெய்து நிர்க்குணப்பிர்ம்மமாகிருன் என்பது தாத்பரியம்). அந்தப் பரமேசுவரத் தியானத்தினுலே இந்தத்தேகம் போனபிறகு மூன்ருவதான (விட்டதேகம் ஒன்ருவது அர்ச்சிராதி மார்க்கமாய்போகும்பொருட்டு வந்ததேக மிரண்டாவது சகுணேபாசனையின் பலனுக பிரும்மாதிலோகத்தில் ஐசுவரியாதிகளை அநுபவிக்கவந்த தேகம் மூன்ருவது) தேகத்தையடைந்து சகல ஐசுவரியத்தையும் அனுபவித்து கேவலம் ஆப்தகாமனுகிருன் (அடையவேண்டிய சகலத்தையும் அடைந்தவனுகிருன். என்ருல், பரிபூரணனந்த அத்துவைதப் பிர்ம்மமாகிய நிர்க்குணப்பிர்ம்மத்தை அறிந்து பரிசுத்தாத்துமாவை யடையவேண்டுமென்கிற இவனுடைய இஷ்டசித்தியாகிய பிர்ம்மாத்தும சுவரூபியாகிருன் என்பது தாத்பரியம்). மூன்றுவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிற இந்தப் போக்தாபோக்கியம் பிரேரிதா முதலிய சகலமும் பிர்ம்ம சுவரூபமென்றும் அதுவே தன் ஆத்மசுவரூபமென்றும் எப்போதும் நியமமாய் (உறுதியாய்) அறியவேண்டியது. இதைவிட அறியவேண்டிய தொன்றுமில்லை. ஆத்மவித்தியாதபோமூலம் (சர்வமும் ஆத்மாவாக விருக்கிறதென்று அறிகிறதாகிய ஆத்மவித்தையும் தபசும் பிர்ம்மத்தை யறிகிற விஷயத்தில் காரணமாயிருக்கின்றன). அந்தப் பிர்ம்மமானது சிரேஷ்டமான சிரேயஸை யடக்கிக்கொண் டிருக்கிறது. இப்படி யறிந்து எவன் (ஆத்ம) சுவரூபத்தையே சிந்தித்துக்கொண் டிருக்கிருனே ஒன்றியாயிருக்கிற (சருவவியாபகமான பிர்ம்மமொன்றே, "நான் அதுவாக விருக்கிறேன்" என்று அறிந்திருக்கிற) அவனுக்கு சோகமேது? மோகமேது? ஆகையால் விராடானதுசென்ற, இருக்கிற, வருகிற காலமாயும் நாசமற்ற (பிரம்ம) சுவரூபமாயுமிருக்கிறது. அணுவிலும் அணுவாயும், பெரிதிலும் பெரிதாயுமிருக்கிற ஆத்மாவானவன் இந்த ஜந்துவினுடைய ஹிருதய குகையிலிருக்கிருன். விஷயானுபவ எண்ணமில்லாதவனுயும் துக்கமற்றவனுயு மிருக்கிற

வன் விருத்திக்ஷயமில்லாத அந்த ஆத்மாவை ஈசுவரானுக்கிரகத்தினாலே அல்லது இந்திரியங்கள் விஷயங்களைப் பற்றாததினாலே அறிகிறான். காலில்லாமல் வேகமாய் நடக்கிறான். கையின்றி கிரகிக்கிறான். கண்ணின்றி பார்க்கிறான். காதின்றி கேட்கிறான். அவன் சகலத்தையும் அறிவான். அவனை யறிகிறவனில்லை. அவனை முதன்மையான மகாபுருஷனென்று சொல்லுகிறார்கள். நிலையற்றதாகிய தேகங்களில் தேகமன்றி யிருக்கிறவனையும் மகானையும் சருவ வியாபியாயும் சகலத்தையும் தாங்குகிறவனையும் சிந்திக்கக்கூடாத சக்தியுள்ளவனையும் சகலஉபநிஷத் அர்த்த விசேஷங்களினாலும் அறியத்தகுந்தவனையும் சிரேஷ்டத்திலும் சிரேஷ்டனையும் அறியத்தகுந்த உத்தம வஸ்துவாயும் எல்லாவற்றிலும் மிஞ்சினவனையும் சர்வக்ஞனையும் அநாதிகாலமாயிருக்கிறவனையும் உத்தம புருஷர்களிலும் உத்தமனையும் சகலத்தையும் ஏவுகிறவனையும் சகலதேவதைகளாலும் உபாசிக்கத்தகுந்தவனையும் ஆதியந்த மத்தியமில்லாதவனையும் எல்லையற்றவனையும் நாசமற்றவனையும் பிரும்மா விஷ்ணு ருத்திரர்களுக்குக் காரணனையும் சகலப் பிரபஞ்சத்தையும் தனக்குள்ளடக்கிக் கொள்ளுகிறவனையும் பஞ்சபூத சுவரூபனையும் ஐந்து (பூதம்)களி லிருக்கிறவனையும் பஞ்சீகிருதமா யிருக்கிற அநேக உற்பத்தியினுடைய விஸ்தாரத்தை யுடையவனையும் பஞ்சீகிருதமாயிருக்கிற தன்னுடைய (பிரபஞ்சமாகிற) அவயவங்களினாலே மறைக்கப்படாதவனையும் சிரேஷ்டத்திலும் சிரேஷ்டனையும் பெரிதைக்காட்டிலும் பெரியவனையும் தேஜோமயமான சுவரூபனையும் சாசுவதனையும் மங்களகரனையு மிருக்கிற ஆத்மாவை யறிந்து தீரனானவன் துக்கத்தை யடைகிறதில்லை. துஷ்கிருத்தியங்களை விடாதவன், இந்திரியங்களை யடக்காதவன், சித்தத்தை யடக்காதவன் அல்லது சித்தசலனமுள்ளவ னல்லாவிட்டாலும் பலன்களைக் கோறுகிறவன், மனதைஒரேநிலையில் நிறுத்தாதவன், இந்த (மேற்சொன்ன விதமாயுள்ள) ஆத்மாவை யடையமாட்டான். (என்றதினால் இப்படிப்பட்ட தோஷங்களற்றவன் பிர்ம்மஞானத்தினால் ஆத்மாவை யடைவான் என்பது தாத்பரியம்). (அந்த பிர்ம்மமானது) சுவப்னவஸ்தையை யுடையதல்ல. ஜாக்கிருதவஸ்தையை யுடையதுமல்ல. ஸ்தூலமுமல்ல. ஞானமுமல்ல. அஞ்ஞானமுமல்ல. ஜாக்கிரத் சுவப்னவஸ்தைகளுக்கு மத்தியமான அவஸ்தையை யுடையதுமல்ல. கருமேந்திரியங்களால் கிரகிக்கத்தக்கதுமல்ல. நிரூபித்துக் காட்டத்தக்கதுமல்ல. தனக்குள்ளேயேயிருக்கிறது. தானாகவேயிருக்கிறதென்று எவன் அறிகிறானோ அவன் முக்தனாகிறான். அவன் முக்தனாகிறானென்று பகவானாகிற பிதாமகர் சொன்னார். சுவசுவரூபத்தை யறிந்தவன் பரிவிராடா யிருக்கிறான். பரிவிராடானவன் ஒன்றியாய் சஞ்சரிக்கிறான். பயத்தினால் மிரண்டமான்போலிருக்கிறான். போகிறதற்கு (எங்கும் சஞ்சரிப்ப

தற்கு) விரோதமொன்றும் செய்கிறதில்லை. தன் சரீரத்தைத்தவிர மற்ற எல்லாவற்றையும் விட்டு தேனீவிருத்தியினலே (ஜீவித்துக்கொண்டு) இருந்து சசலத்தையும் தன்னைவிட அந்நியமானதாக பாவிக்காமல் சுவரூபாநு சந்தானஞ் செய்துகொண்டு தன்னிலேயே முக்தியடைகிறான். அந்தப் பரிவிராடானவன் செய்கிறது, செய்விக்கிறது இவைகளிலிருந்து விலகினவனுய் குருசிஷிய சாஸ்திரமுதலியவைகளிலிருந்து நிவிருத்தி யடைந்தவனுய் சகல சமுசாரத்தையும் தள்ளி மோகமற்றவனு யிருக்கிறான். அந்தப் பரிவிராடானவன் எப்படி சஞ்சரிக்கிறானென்றால், தனம் இல்லாதவனுயும் சுகியாயும் தனமுள்ளவனுயும் (இச்சித்தால் வேண்டியதெல்லாம் அடைவான் என்பது கருத்து) ஞானுக்கியானமிரண்டையும் அதிக்கிர மித்தவனுயும் சுக துக்கங்களை யதிக்கிர மித்தவனுயும் சுவயம் ஜோதிப்பிர காசனுயும் சகல வேதங்களினுலும் அறியத் தகுந்தவனுயும் எல்லாவற்றையும் அறிந்தவனுயும் எல்லா சித்தியையும் கொடுக்கிறவனுயும் சகலத்திற்கும் எஜமானனுயுமிருக்கிற பிர்ம்மமேதானென்றிருக்கும் பரிவிராடானவன் யோகிகள் எந்தவிடத்திற்குப் போனல் திரும்புகிறதில்லையோ (மறுபடி பிறப்பையடைகிற தில்லையோ) எந்தவிடத்தில் சூரிய சந்திரர்கள் பிரகாசிக்கிறதில்லையோ, அப்படிப்பட்ட விஷ்ணுவினுடைய உத்தமமான ஸ்தானத்தை அடைகிறான். மறுபடி திரும்புகிறதில்லை. மறுபடி திரும்புகிறதில்லை. அதுதான் கைவல்லியமென்று உபநிஷத்.

ஒன்பதாவது உபதேசம் முற்றிற்று.

---

நாரதபரிவிராஜகோபநிஷத் முற்றிற்று.

ஓம் தத்ஸத்,

---

ஹரி: ஓம்.

யஜுர்வேதத்தில்

# ஸ்கந்தோபநிஷத்.

---

## ஸஹநாவவதுசாந்தி.

ஓம். ஓமகாதேவா! தங்களுடைய காருண்ணிய லேசத்தினாலே (கருணையினுடைய சுவற்பாம்சத்தினாலே) நான் அழிவற்றவனா யிருக்கிறேன். நான் விக்ஞானகனனா யிருக்கிறேன் (அகண்டஞான ரூபியாயிருக்கிறேன்). மங்களகரனா யிருக்கிறேன். இதைப்பார்க்கிலும் சிரேஷ்டமெ திருக்கிறது. அந்தக்கரணத்தினுடைய கலக்கத்தினால் நிஜமானது நிஜமாய் விளங்கவில்லை. அந்தக்கரண நாசத்தினாலே ஹரியானவர் ஞானசுவ ரூபியாயிருக்கிறார். நானும் ஞானசுவரூபியாயிருக்கிறதினாலே பிறப்பற்றவனா யிருக்கிறேன். இதைவிட சிரேஷ்டமெ திருக்கிறது. (ஆத்மாவுக்கு) அந்நியமான ஜடவஸ்துக்களெல்லாம் சுவப்னத்தைப்போல் நசித்துப்போகிறது. சித்ஜடங்களை (சேதனாசேதனப் பிரபஞ்சங்களை) எவன் பார்க்கிறவனோ அந்த அச்சுதன் ஞானத்தை சுவரூபமாயுடையவன். அவனே மகாதேவன். அவனே மகாஹரி. அவனே ஜோதிக்கெல்லாம் ஜோதியா யிருக்கிறவன். அவனே பரமேசுவரன். அவனே பிர்ம்மம். அந்தப் பிர்ம்மந்தான் நான். சமுசயமில்லை. ஜீவனேசிவன். சிவனேஜீவன். அந்தஜீவன் சிவனே தான். உமியினால் கட்டுப்பட்டிருக்கிறபோது நெல்லாயிருக்கிறது. உமியற்றதானாலது அரிசியாகிறது. அப்படித்தான் ஜீவனும் கட்டுப்பட்டிருக்கிறான். கருமம் நாசமானால் எப்போதும் (மங்களசுவரூபியாகிய) சிவனாயிருக்கிறான். (கரும) பாசத்தினால் கட்டுப்பட்டிருக்கிறவரையில் ஜீவனாயிருக்கிறான். பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனா யிருக்கிறான். விஷ்ணுரூபமாயிருக்கிற சிவன்பொருட்டும் சிவரூபமாயிருக்கிற விஷ்ணுவின் பொருட்டும் (நமஸ்காரம்). சிவனுடைய ஹிருதயமே விஷ்ணு. விஷ்ணுவினுடைய ஹிருதயமேசிவன். எப்படி இவ்விருவரிலும் பேதம் நான் காணவில்லையோ அப்படி எனக்குச் சந்தோஷமும், ஆயுசும் (பிறப்பற்றஇருப்பும்) முண்டாகக்கடவது. சிவகேசவர்களுக்குள்ளே பேதம் கிடையாது. தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. ஜீவனானவன் எப்போதும் மங்கள சுவரூபியான தேவனாகவே யிருக்கிறான். அக்ஞானமாகிற நிர்மாலியத்தைத்தள்ளி அவன் (அந்தச்சிவன்) "நானே" என்கிற பாவனையுடன் பூஜிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்க்கிறதே ஞானம். மன

துவிஷயத்தில் பற்றுமைதான் தியானம், மனதிலுள்ள தோஷத்தை விடுவதுதான் ஸ்நாநம். இந்திரியங்களை யடக்குதல்தான் சௌசம். பிர்ம்மா மிருதத்தைக் குடிக்கவேண்டியது. (இதுதான் பானம்). தேகசம் ரக்ஷணைக்காக பிக்ஷையெடுத் துண்ணவேண்டியது. ஒருவனாகவே யேகாந்தமானவிடத்தில் இரண்டாவதற்றவனாக (பிர்ம்மத்தைத் தவிர வேறெவஸ்துவைப் பாராதவனாக) வாசம் செய்யவேண்டியது. அத்துவைத பிர்ம்மத்தில் ஒரேபாவனையுள்ளவனாக விருக்கவேண்டியது. இந்தப்படிக்கு நடக்கிற புத்திமானெவனோ அவன் முக்தியடைகிறான். ஸ்ரீமத் பரம்ஜோதியின் பொருட்டு நமஸ்காரம். சந்தோஷமும் சிராயுசும் (எப்போதும் பிறப்பற்ற தன்மையும்) முண்டாகக்கடவது. ஓ நரசிம்மா! ஓ தேவேசா! உம்முடைய பிரசாதத்தினாலே விரிஞ்சிநாராயண சங்கரசுவரூபமாயும் அசிந்தியமாயும் அவ்வியக்தமாயும் அநந்தமாயும் அவ்வியயமாயும் தேவாத்துமகமாயு மிருக்கிற பிர்ம்மத்தின் நிஜசுவரூபத்தை யறிகிறார்கள்.

ஆகாசத்தில் வியாபித்திருக்கிற கண்ணைப்போல (ஆகாசத்தில் காணப்படுகிற வஸ்துக்களைக் கண்ணானது தடையின்றி பார்க்கிறதுபோல) அந்த விஷ்ணுவினுடைய பரமபதத்தை ஞானிக ளெப்போதும் பார்க்கிறார்கள். எப்போதும் விழித்துக்கொண்டிருக்கிற ஞானக் கண்களையுடைய பிராம்மணர்கள் விஷ்ணுவினுடைய பரமபதமெதுவோ அதை அநேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்துக்கொண்டு பிரகாசப்படுத்துகிறார்கள். இந்தப்படிக்கு வேதத்தினுடைய மோக்ஷவிஷயமான ஆக்ஞை, என்றுபநிஷத்.

ஸ்கந்தோபநிஷத் முற்றிற்று.

ஓம் தத்ஸத்.

---

ஓம் பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீகுரவே நம:.

---

சுக்கில யஜுர்வேதத்தில்

# பைங்களோபநிஷத்.

---

## க-வது. அத்தியாயம்.

மங்களம்-பைங்கலனென்பவர் யாக்ஞவல்க்கியரிடம்சென்று பனிரண்டுவருஷம் சுசுருஷைசெய்து பரமரகசியமான கைவல்யத்தை (பேரின்பம் அல்லது மோக்ஷாநந்தத்தை)ச் சொல்லுமென்று கேட்டார். அதற்கு யாக்ஞவல்க்கியர் சொல்லுகிறார்.

ஓ! சுகுணமுள்ளவனே! இந்தப் பிரபஞ்சமானது சத்தாகவே முதலிலிருந்தது. அது (ஸத்தானது) நித்திய முக்தமாகவும் (எப்போதும் பிரகிருதி சம்பந்த மில்லாததாகவும்) விகாரமடையாத தாகவும் சத்திய ஞானானந்தமாகவும் பரிபூர்ணமாகவும் சாசுவதமாகவும் இரண்டாவதற்ற வொன்றானதாகவு மிருக்கிற பிர்ம்மமென்று சொல்லப்படுகிறது. அதினிடத்தில் மருபூமியில் (பாலைநிலத்தில்) ஜலம், கிளிஞ்சிலில் வெள்ளி, கட்டையில் புருஷன், ஸ்படிகத்தில் வர்ணம் முதலியவைபோல் சிவப்பு வெளுப்பு கறுப்பு இந்தக்குண மயமானதும் ஏற்றக்குறைவன்றி ஒவ்வொன்றும் சமமாயிருக்கிற குணசுவரூபமானதும் வாக்குக் கெட்டாததுமாகிய (என்றால், மித்தையானதுமாகிய) மூலப்பிரகிருதியிருந்தது. அதினிடத்தில் பிரதி பிம்பித்ததெதுவோ அது சாக்ஷி சைதன்னியமாயிருக்கிறது. அது (மூலப்பிரகிருதி) விகாரமடைந்து சத்துவாதிக்கமுள்ள அவ்வியக்தமென்கிற பெயரையுடைய * ஆவரண சக்தியாயிற்று. அதில் பிரதிபலித்ததெதுவோ அது ஈசுவர சைதன்னியமாயிருக்கிறது. அவன் (ஈசுவரன்) மாயையை சுவாதீனமா யுடையவனாயும் சர்வக்கியனாயும் சிருஷ்டி ஸ்திதிலயங்களுக்காதி கருத்தாவாயும் ஜகத்திற்கு முளையாயு மிருக்கிறான். அவனிடத்தி லடங்கியிருந்த சகல ஜகத்தையும் பிராணிகளுடைய கருமவசத்தினாலே, சுருட்டியிருக்கிற சித்திரமெழுதிய துணியைவிரித்ததுபோலத் தோற்றச்செய்தான். பிராணிகளுடைய கரும க்ஷயத்தினால் மறுபடி மறைத்துப்போடுகிறான். அவனிடத்திலேயே சகலமான பிரபஞ்சமும், சித்திரமெழுதிய துணியைச் சுருட்டியதுபோலடங்கியிருக்கிறது.

---

* வஸ்துவினுடைய வாஸ்தவ சுவரூபத்தை மறைக்கிற மாயையினிட சக்தியானது ஆவரண சக்திஎனப் படுகிறது.

ஈசனுக்குச் சுவாதீனமாயிருக்கிற ஆவரண சக்தியினிடத்திலிருந்து ரஜோகுணப் பிரதானமான மகத்தென்கிற பெயராயுடைய * விக்ஷேப சக்தி தோற்றிற்று. அதில் பிரதிபலித்ததெதுவோ அது ஹிரண்ணிகருப்ப சைதன்னியமாயிருக்கிறது. மகதத்து வாபிமானி யான அவன் (ஹிரண்ணியகருப்பன்) வெளிப்படை யானவும் வெளிப்படையாகாதவும் தேகமுடையவனாகிறான். ஹிரண்ணிய கருப்பனிடத்திலிருக்கிற விக்ஷேப சக்தியினிடத்திலிருந்து தமப்பிரதானமான அகங்கார மென்கிற ஸ்தூல சக்தியுண்டாயிற்று. அதில் பிரதிபலித்த தெதுவோ அது விராட்சைதன்னியமாகிறது. அவனதற்கு (விராட்புருஷன் அகங்காரத்திற்கு) அபிமானியாகி வெளிப்படையான சரீரமுடையவனாய் சகல ஸ்தூலத்தையு மிரக்ஷிக்கிற பிரதான புருஷனாகிய விஷ்ணுவாகிறான். அந்த ஆத்மாவினிடத்திலிருந்து ஆகாச முண்டாயிற்று. ஆகாசத்திலிருந்து வாயுவும் வாயுவிலிருந்து அக்கினியும் அக்கினியிலிருந்து அப்பும் அப்புவிலிருந்து பிரதிவியுமுண்டாயின. அந்தப் பஞ்சதன்மாத்திரைகள்தான் குணங்கள் (பூதசூக்ஷ்மங்கள்). சிருஷ்டிக்க விரும்பிய அந்த ஜகத்காரணன் (ஈசுவரன்) தமோகுணத்தை யங்கீகரித்து சூக்ஷ்ம தன்மாத்திரைகளான பூதங்களை ஸ்தூலமாக்க வெண்ணினான். (ஸ்தூல) சிருஷ்டியின் பொருட்டு, அந்தப்பரிமித (அளவிடக்கூடிய) பூதங்களொவ்வொன்றையு மிரண்டாகச் செய்து, மறுபடி யதில் (இரண்டில்) ஒன்றை நான்காகச்செய்து, அததனுடைய மற்றொரு இரண்டாவ தம்சமுள்பட ஐந்தைந்தாகச்சேர்த்து, † (இப்படிச் சேர்த்ததாகிய) பஞ்சீகிருத பூதங்களினாலே அநந்தகோடி பிருமாண்டங்களையும் அந்தந்த வண்டங்களுக்கு யோக்கியமான பதினான்குலகங்களையும் அந்த உலகங்களுக்கு யோக்கியமானவும் இந்திரியங்களுக் கிருப்பிடமானவும் ஸ்தூல சரீரங்களையும் சிருஷ்டித்தார். அவர் (ஈசுவரன்) பஞ்சபூதங்களுடைய ரஜோம்சத்தை நான்காகச் செய்து, அதில் மூன்றுபாகத்தினால் ஐந்து விருத்தி (தொழில்) யாயிருக்கிற பிராணனை சிருஷ்டித்தார். பின்னும் அந்நான்காவது பாகத்தினாலே கருமேந்திரியங்களை சிருஷ்டித்தார். அவ்வ (பஞ்சபூதங்) களுடைய சத்துவாம்சத்தை நான்காய்ப்பிரித்து அதில் மூன்றுபாகத்தினாலே ‡

---

* ஆத்மாவிடத்திலுண்டாய் ஆத்மாவைச் சுத்திக்கொண்டு வெளிப்பிர பஞ்சத்தைத் தோற்றுவித்து சகலத்தையும் பிரகாசப்படுத்துகிற மாயையினுடைய சக்தியானது விக்ஷேபசக்தி என்று சொல்லப்படுகிறது.

† அந்தந்தப் பூதங்களுடைய சொந்த அரையம்சமொன்று, மற்ற நான்கு பூதங்களி லொவ்வொன்றினுடைய அம்சத்தில் எட்டிலொன்று வீதமாக நான்கு, ஆகஐந்து.

‡ ஸம்சயம், நிச்சயம், விகற்பம், சித்திரை, நினைப்பு. இவ்வைந்து அந்தக்கரண விருத்திகள். விகற்பமாவதெதெனில் - விஷயமான வஸ்துவில்லாததாயும் கேட்ட சப்தமாத்திரத்தினா லுண்டாகிறதாயு மிருக்கிறஞானம். “[illegible]” என்றயோகசூத்திரம் பார்க்க.

ஐந்து விருத்திகளையுடைய அந்தக்கரணத்தை சிருஷ்டித்தார். அந்த சத்துவாம்சத்தின் நான்காவது பாகத்தினாலே ஞானேந் திரியங்களை சிருஷ்டித்தார். சத்துவாம்ச ஸமஷ்டி * யினாலே இந்திரியாதி அபிமானி தேவதைகளை சிருஷ்டித்தார். சிருஷ்டிக்கப்பட்ட அவைகளை அண்டத்தி லமைத்தார். அவைகள் அவருடைய (ஈசுவரனுடைய) ஆக்ஞையினாலே ஸமஷ்டியண்டத்தை வியாபித்திருந்தன. அவருடைய ஆக்ஞையினாலே அகங்காரத்தோடு கூடியிருக்கிற விராடானவன் சகல ஸ்தூலத்தையும் சிருஷ்டித்தான். அவருடைய ஆக்ஞையினாலே ஹிரண்ணியகருப்பன் சூக்ஷ்மங்களை ரக்ஷித்தான். அண்டத்திலமைத்த அவைகள் அவனை (ஈசுவரனை) யன்றி அசையவாவது ஒன்றைச் செய்யவாவது சக்தியற்றவைகளா யிருந்தன. அவைகளுக்குச் சேதனத்தை (உணர்வு அல்லது அறிவை) யுண்டு செய்யவிரும்பினார். பிரும்மாண்டத்தையும் சகலமான வியஷ்டி † மஸ்தகங்களின் (தலைகளின்) பிரம்மரந்திரங்களையும் பிளந்து உள்ளே பிரவேசித்தார். அவைகள் ஜடமாயிருந்தாலும் சேதனத்தைப்போல் தன்கருமங்களைச் செய்தன. சர்வக்ஞனாகிய ஈசுவரன் மாயாலேச (அற்ப)த்துடன் வியஷ்டிதேகத்தைப் பிரவேசித்து அந்த மாயையினாலே மோகிக்கப்பட்டவனாய் ஜீவத்துவத்தை யடைந்தான். மூன்று (ஸ்தூல சூக்ஷ்மகாரண) சரீரங்களும்தானென்கிற பாவனையினாலே கருத்திருத்துவ போக்திருத்துவத்தை யடைந்தான். ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி மூர்ச்சைமரணம் இந்த சுவபாவங்களோடு கூடினவனாய், துக்கத்தி லழுந்தினவனாய், தண்ணீரிறைக்கிற ஏற்றம்போலவும் குயவன் திருகைபோலவும் பிறப்பிறப்புகளையடைந்தவன்போல் பிரமை யடைகிறான்.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௨-வது. அத்தியாயம்.

பின்னும், பைங்கலர் யாக்ஞவல்க்கியரை நோக்கி, சகலலோகங்களுக்கும் சிருஷ்டி ஸ்திதி ஸம்கார கருத்தாவாயும் பிரபுவாயுமிருக்கிற ஈசுவரன் ஜீவத்துவத்தை யெப்படி யடைந்தாரென்று கேட்டார். அதற்கு யாக்ஞ வல்க்கியர் சொல்லுகிறார். ஸ்தூல சூக்ஷ்மகாரண தேகங்களுடைய உற்பத்தி விவரத்துடன் ஜீவேசுவர சுவரூபத்தை விவரமாய்ச் சொல்லுகிறேன். ஒரேமனதுடன் சாவதானமாய்க் கேள்.

ஈசுவரன் பஞ்சீகிருத மகாபூதங்களுடைய லேசத்தை (அற்ப பாகத்தை) க்கிரகித்து வியஷ்டி சமஷ்டி ரூபமான ஸ்தூலசரீரங்களைக் கிரமப்பிரகார மமைத்தார். மண்டையோடு, தோல், குடல், எலும்பு,

---

* பகுக்கத்தக்கதாயுள்ள ஒரு கூட்டம் சமஷ்டி.

† அக்கூட்டத்திலுள்ள வைகளிலொன்று வியஷ்டி.

திருஷ்டாந்தம்- தோப்பு ஸமஷ்டி - அத்தோப்பிலுள்ள மரங்களிலொன்று வியஷ்டி.

மாம்ஸம், நகங்கள் இவைகள் பிருதிவியினம்சங்கள். உதிரம், மூத்திரம், உமிழ்நீர், வேர்வை முதலானவை ஜலாம்சங்கள். பசி, தாகம், உஷ்ணம், மோகம், மைதுனம் (ஸ்திரீ புருஷர் சேர்க்கை) இவைகள் அக்கினியம்சங்கள். நடத்தல், எடுத்தல், சுவாசம்விடுதல் முதலானவை வாயுவம்சங்கள், காமக்குரோதாதிகள் ஆகாசாம்சங்கள். துவக்கு முதலியவைகளோடு கூடிய இக்கூட்டங்கள் கருமத்தினால் சம்பாதிக்கப்பட்டதாயும் பாலியமுதலிய அவஸ்தாபிமானத்திற் கிடமாயும் வெகு தோஷங்களுக் கிருப்பிடமாயுமிருக்கிற ஸ்தூல சரீரமாயிருக்கிறது. பிறகு பஞ்சீகிருத மகாபூத ரஜோம்சத்தினுடைய மூன்றுபாக சமஷ்டியிலிருந்து பிராணனை சிருஷ்டித்தார். பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்கள் பிராணனுடைய விருத்திகள். நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்கள் உபப்பிராணன்கள். (இவைகளுக்கு) ஹிருதயம், ஆசனம், நாபி, கண்டம், சருவாங்கம் இவைகள் ஸ்தானங்கள். ஆகாசாதி ரஜோகுணத்தினுடைய நான்காவது பாகத்தினாலே கருமேந்திரியங்களை யுண்டாக்கினார். வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தங்கள் அவைகளுடைய விருத்திகள். வசனதான கமனவிசர்கானந்தங்கள் அவைகளுடைய விஷயங்கள். இப்படியே சத்துவாம்சத்தின் மூன்று சமஷ்டி பாகங்களினாலே அந்தக்கரணத்தை சிருஷ்டித்தார். அந்தக்கரண மனோபுத்தி சித்தாகங்காரங்கள் அதினுடைய விருத்திகள். சங்கற்பம், நிச்சயம், நினைப்பு, அபிமானம் அநுசந்தானம் (சிந்தித்தல்), இவைகள் விஷயங்கள். கழுத்து, முகம், நாபி, ஹிருதயம், புருவமத்தியம் அவைகளுக்கு ஸ்தானங்கள். பூதங்களுடைய சத்துவத்தின் நான்காவது பாகத்தினாலே ஞானேந்திரியங்களை சிருஷ்டித்தார். காது துவக்கு கண் நாக்கு மூக்கு இவைகள் அவைகளுடைய விருத்திகள். சப்தஸ்பரிச ரூபரசகந்தங்கள் அவைகளின் விஷயங்கள். திக்கு, வாயு, சூரியன், வருணன், அசுவனீ தேவதைகள், அக்கினி, இந்திரன், உபேந்திரன், மிருத்யு, பிரஜாபதி, சந்திரன், விஷ்ணு, சதுர்முகபிர்ம்மா, சம்பு (சிவன்), இவர்கள் கரணங்களுக்கு அபிமான தேவதைகள். அன்னமயப் பிராணமய மனோமய விக்ஞானமய ஆநந்தமய கோசங்களைந்து. அன்னரஸத்தினாலேயே யுண்டாய் அன்னரஸத்தினாலே விருத்தியுடைந்து (வளர்ந்து அல்லது பெருத்து) அன்னசுவரூபமான பிரதிவியிலெது லயமடைகிறதோ அது அன்னமயகோசம். அதுவே ஸ்தூலசரீரம். கருமேந்திரியங்களுடன் பிராணாதிக ளைந்தும் பிராணமயகோசம். ஞானேந்திரியங்களுடன் மனது மனோமயகோசம். ஞானேந்திரியங்களுடன் புத்தி விக்ஞானமயகோசம். இம்மூன்று கோசங்களும் லிங்கசரீரம். சுவரூபாக்ஞானம் (தன்வாஸ்தவ சுவரூபஞானமின்மை) ஆநந்தமயகோசம். இது காரணசரீரம். மேலும் ஞானேந்திரியங்க ளைந்தும், கருமேந்திரியங்க ளைந்து,

பிராணுதிகளைந்து, ஆகாசாதிபூதங்களைந்து, அந்தக்கரணம் நான்கு, அவித்தை, காமம், கருமம், தபஸ் இவைகள் புரம் (இவைகளடங்கிய பட்டணம்போன்ற தேகம்). ஈசுவராக்ஞையினுல் விராட்டானவன் வியஷ்டிதேகத்தைப் பிரவேசித்தும் புத்தியை யாசிர்யித்தும் விசுவத் துவத்தை யடைந்தான். அந்த விசுவனுக்கு விக்ஞானுத்மா, சிதாபா ஸன், விசுவன், வியாவகாரிகன், ஜாக்கிரத் ஸ்தூலதேகாபிமானி, கரு மத்திஞலுண்டானவன், என்று பெயராயிற்று. ஈசுவராக்ஞையினுலே சூத்திராத்மா வானவன் வியஷ்டி சூக்ஷ்மசரீரத்தைப் பிரவேசித்து மனதை யாசிரயித்துத் தைஜஸத்துவத்தை யடைந்தான். அவனுக்குத் தைஜஸன், பிராதிபாஸிகன், சுவப்னகற்பிதன், என்றீ பெயராயிற்று. ஈசுவராக்ஞையினுலே மாயோபாதி அவ்வியக்தத்துடன் சேர்ந்தவன் வியஷ்டி காரணசரீரத்தைப் பிரவேசித்து பிராக்ஞத்துவத்தை யடை ந்தான். அவனுக்குப் பிராக்ஞன், அவிச்சின்னன், பாரமார்த்திகன், சுஷுப்தியபிமானி, என்று பெயராயிற்று. அவ்வியக்த லேசமாகிற (அற்பபாகமாகிற) அக்ஞானத்திஞலே மறைக்கப்பட்ட பரமார்த்திக ஜீவனுக்கு (தத்வமஸி) தத்துவமஸி முதலிய வாக்கியங்கள் பிர்ம்மத் துட னைக்கியத்தைச் சொல்லுகின்றன. வியாவகாரிகனுக்கும் பிராதி பாஸிகனுக்கும் ஐக்கியம்சொல்லவில்லை. அந்தக்காரணப் பிரதிபிம்பித சைதன்னியமெதுவோ அதுவே யவஸ்தாத்திரயத்தை (மூனறவஸ்தை களை) யடைகிறது. அது ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி யவஸ்தைகளை யடைந்து துக்கமுடையதாய்த் தண்ணீரிறைக்கிற ஏற்றம்போல பிறந் தவன்போலவு மிறந்தவன்போலவு மாகிருன். ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி மூர்ச்சை மரணமென்ற அவஸ்தைகளைந்து. அந்தந்த தே வாநுக்கிரகம் (இந்திரியாபிமானி தேவதைகளுடைய அநுக்கிரகம்) அடைந்து காதுமுதலிய ஞானேந்திரியங்களால் சப்தாதி விஷயங்களை யறிகிறது ஜாக்கிரதவஸ்தை. அதில் புருவத்தின் மத்தியத்தையடை ந்த ஜீவன் பாதம்முதல் சிரசுவரையில் வியாபித்து, செய்தல் கேட் டல் முதலிய சகல கிரியைகளுக்கும் கருத்தாவாகிருன். அந்தப்பலன் களை யனுபவிக்கிறவனு மாகிருன். அவன் சக்கிரவர்த்தியைப்போல வியவகாரத்திலிருந்து இளைப்படைந்து வீட்டுக்குள் பிரவேசிக்க மார் க்கத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிருன். (இந்திரியாதி) காரணங்க ளொழிவடைகையில் ஜாக்கிரத்தி லனுபவித்த பதார்த்தங்களுடைய வாசனையுடன் இரகிக்கத்தக்கவஸ்து, கிரகிக்கிறவன் இந்தரூபமாயிருக் கிற தோற்றமுடையதே சுவப்னுவஸ்தை. இதில் விசுவனே ஜாக்கிரத் வியவகார மொழிந்ததினுல் நாடிமத்தியில் சஞ்சரிக்கிற தைஜஸத்து வத்தையடைந்து, வாசனரூபமாகிற ஜகத் விசித்திரத்தைத் தன்னு டைய காந்தியினுலே விளங்கச்செய்துகொண்டு இஷ்டப்படி (சஞ் சித கருமானுசாரமாய்) தானே யனுபவிக்கிருன். ஒரே காரணமாகிய

சித்தத்தை யுடையதே சுஷுப்தியவஸ்தை. சுத்தியலேந்ததினு லிளைப் படைந்து, அக்ஞானத்தில் பிரவேசித்து, தன்னுடைய ஆநந்தத்தை யனுபவிக்கிறுன். தற்செயலாய்க் கொட்டாப்புளி தடி முதலியவை களா லடிபட்டவன்போல, பயம் அக்ஞான மிவைகளால் இந்திரியக் கூட்டங்களுடன் நடுங்குகிறவன்போல் மரணத்திற்குச் சமானமான மூர்ச்சாவஸ்தையை யடைகிறுன். ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி மூர்ச் சை யிந்த வஸ்தைகளுக்கு அந்நியமாயும் பிர்ம்மாமுதல் ஸ்தம்பம் (சி றியபூச்சி) வரையிலுள்ள சகல ஜீவர்களுக்கும் பயத்தையுண்டுபண்ணு கிறதாயும் ஸ்தூலதேகத்தைவிட்டு விடுகிறதாயுமுள்ள மரணவஸ்தை யுண்டாகிறது. கருமேந்திரியங்கள் அவைகளுடைய விஷயங்கள் பிரா ணன்கள் இவைகளைச் சேர்த்துக்கொண்டு காமகரும்ங்களுடன், அவி த்தை, பூதசூக்ஷ்மங்கள் இவைகளால் சூழப்பட்ட ஜீவனுனவன் வேறு தேகத்தையடைந்து மற்ெருரு லோகத்திற்குப்போகிறுன். பூர்வ கரு மபலபாகத்தினுலே(பலனைக் கொடுக்கத் தலையெடுத்திருக்கிற கருமத் தினுலே) சுழலிலகப்பட்ட பூச்சிபோல் ஓழிவடைகிறதேயில்லை. சத் கரும பரிபாகத்தினுல் வெகு ஜன்மங்களுக்குப்பிறகு மனிதர்களுக்கு மோக்ஷயிச்சை யுண்டாகிறது. அப்போது சத்குருவை யாசிரயித்து அநேககாலம் சுசுரூஷை செய்வதினுலே பெந்தத்திலிருந்து எவனே ஒருவன் மோக்ஷமடைகிறுன். விசாரிக்காததினுல் பெந்தத்தையும், விசாரித்ததினுல் மோக்ஷத்தையு மடைகிறுன். ஆகையினுலே எப் போதும் விசாரம் செய்யவேண்டியது. அத்தியாரோபத்தினுலேயும் அபவாதத்தினுலேயும் சுவரூபத்தை நிச்சயிக்கக்கூடும். ஆகையால் ஜகத்ஜீவன் பரமாத்துமா இவர்களைக்குறித்து ஸதா விசாரிக்கவேண் டியது. ஜீவசுவரூபமும் ஜகத் சுவரூபமும் தெரிந்தால் பிரத்தியக் (கூடஸ்த சைதன்னியத்திற்கு) அபேதமாகிய பிர்ம்மந்தான் மிஞ்சு கிறது.

இரண்டாவதத்தியாயம் முற்றிற்று.

---

## ௩-வது. அத்தியாயம்.

பிறகு பைங்கலர் யாக்ஞவல்க்கியரை, மகாவாக்கிய விவரணம் சொல்லவேண்டுமென்று கேட்டார். அதற்கு யாக்ஞவல்கியர் சொல் லுகிறுர். தத்வமஸி = அது நீயாயிருக்கிறுய். த்வம் தத்அஸி = நீ யதுவா யிருக்கிறுய். த்வம் ப்ரஹ்மாஸி = நீ பிர்ம்மா யிருக்கிறுய். ஆகையால், "அஹம் ப்ரஹ்மாஸ்மி = நான் பிர்ம்மாயிருக்கிறேன்" என்று அநுசந்தா னம் செய்யவேண்டியது. பாரோக்ஷ்யசபலம் = பிரத்தியக்ஷ மாகா மல் மறைந்திருக்கிறவனும் சர்வக்ஞத்துவாதி லக்ஷண முடையவ னும் மாயையை யுபாதியாயுடையவனும் சச்சிதாநந்த லக்ஷணனுமா கிய ஜகத் காரணனுனவன் தத்பதத்திற்கு வாச்சியனுகிறுன் (தத்பத

மானது ஈசுவரனைக் குறிக்கிறதென்பது தாத்பரியம்). அவனே அந்தக்கரணத்தினாலே பேதப்பட்ட அறிவையுடைய "நான்" என்கிற நம்பிக்கைக்கு ஆதாரமாயிருக்கிறவன். (அவன்தான்) துவம்பத வாச்சியனாகிறான். (துவம்பதமானது அந்தக்கரணத்தினுடைய சம்பந்தத்தால் வேறுபோல் காண்கிற ஜீவனைக்குறிக்கிறது என்பது தாத்பரியம்). பரமாத்துமா ஜீவாத்மா இவ்விருவருக்குமுள்ள உபாதியாகிய முறையே மாயை அவித்தை இவைகளைவிட்டு தத்துவம்பதத்திற்கு லக்ஷியமாகிய தெதுவோ அதுவே (கூடஸ்தனுக்கு) அபேதமாயிருக்கிற பிர்ம்மம். தத்துவமஸி அகம்பிர்ம்மாஸ்மி இவைகளுடைய வாக்கியார்த்த விசாரமே சிரவணமாகிறது. ஏகாந்தத்தில் சிரவணத்தினுடைய அர்த்தானுசந்தானமே மனனமாகிறது. சிரவண மனனத்தினாலே தேடவேண்டிய வஸ்துவினிடத்தில் ஒரே நிலையாய் மனதை நிறுத்தலே நிதித்தியாஸமாகிறது. தியானம்செய்கிறவன் தியானம் இவைகளை (தியானம் செய்கிறவனொருவன், தியானமென்பதொன்று என்றபேதத்தை) விட்டுக் காற்றில்லாத ஸ்தலத்திலிருக்கிற தீபத்தைப்போல தியானிக்கப்படுகிறவஸ்துவாகவே சித்தமிருக்கும் நிலைமை சமாதியாகிறது. அப்போது ஆத்மசம்பந்தமான விருத்திகளுண்டாகின்றன. அவைகள் தெரியக்கூடாதவைகளா யிருக்கின்றன. அவைகள் ஸ்மரணத்தினா லனுமானிக்கப்படுகின்றன. இந்த அநாதிசமுசாரத்தில் சம்பாதிக்கப்படலான கருமகோடிகள், இதினாலேயே (ஆத்மசம்பந்த விருத்திகளினாலேயே) லயமடைகின்றன. பிறகு அப்பியாசத் திரமையினாலே அநேகவிதமா யெப்போதும் அமிருததாரைவருஷிக்கிறது. ஆகையினாலே, யோகமறிந்தவர்க ளிந்தசமாதியைத் தருமமேகமென்று சொல்லுகிறார்கள். இதினால் வாசனைக்கூட்டங்கள் மிச்சமன்றி லயம் செய்யப்பட்டும் சஞ்சிதபுண்ணிய பாபகருமங்கள் முழுதும் நிர்மூலம் செய்யப்பட்டும் போகையில் முன் காணப்படாமலிருந்தாலும் இந்த (தத்துவமஸி, அகம்பிர்ம்மாஸ்மி) வாக்கியமானது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தடையற்ற பிரதியக்ஷமாகிய சாக்ஷாத்காரத்தையுண்டாக்கிறது. அப்போது ஜீவன்முக்தனாகிறான். ஈசுவரன் பஞ்சீகிருத பூதங்களை யபஞ்சீகரணம்செய்ய விச்சித்தான் (லயம் செய்வித்தான்). பிர்ம்மாண்டத்தையும் அதிலுள்ள காரியரூபமான லோகங்களையும் காரணத்துவத்தை யடைவிப்பித்து பின்பு சூக்ஷ்மாங்கமாகிய கருமேந்திரியங்கள் ஞானேந்திரியங்கள் அந்தக்கரண சதுஷ்டயம் இவைகளை யொன்றாச்சேர்த்தும் பூதசம்பந்தமானவைகளை யெல்லாம் காரணமாகிய பஞ்சபூதத்தில் சேர்த்தும் பூமியை ஜலத்திலும் ஜலத்தை யக்கினியிலும் அக்கினியை வாயுவிலும் வாயுவை ஆகாசத்திலும் ஆகாசத்தை யகங்காரத்திலும் அகங்காரத்தை மகத்தத்துவத்திலும் மகத்தத்துவத்தை யவ்வியக்தத்திலும் அவ்வியக்தத்தைப் புருஷனிலும் கிரமமாய்

லயிக்கச்செய்கிறான். விராட், ஹிரண்ணியகருப்பன், ஈசுவரன் இவர்கள் (மாயா) உபாதி நீங்கியபடியினால் பரமாத்துமாவில் லயிக்கிறார்கள் (ஐக்கிய மடைகிறார்கள்). கருமத்தினால் சம்பாதிக்கப்பட்ட ஸ்தூலதேகமானது கரும க்ஷயத்தினாலும் ஸத்கரும பரிபாகத்தினாலும் அபஞ்சீகரணமாய் சூக்ஷ்மத்துடன் கலந்து காரண ரூபத்துவத்தை யடைந்து அதற்குக் காரணமாகிய பிரத்தியகாத்துமாவாகிற கூடஸ்தனிடத்தில் லயிக்கிறது. விசுவன் தைஜஸன் பிராக்ஞன் இவர்களுக்குத் தம்தம் (அவித்தியா) உபாதிபோய் விட்டத்தினாலே பிரத்தியகாத்துமாவி லடங்குகிறார்கள் (ஐக்கியமாகிறார்கள்). அண்டமானது ஞானக்கினியினா லெரிக்கப்பட்டு காரணங்களுடன் பரமாத்துமாவில் லயமடைகிறது. ஆகையால், பிராம்மணனானவன் ஜாக்கிரதையா யிருந்துகொண்டு தத்துவம் பதத்திற்கு ஐக்கியத்தையே யெப்போதும் அநுசந்தானம் செய்யவேண்டியது. அதற்குப் பிறகு மேகம்விலகின சூரியனைப்போல் ஆத்மா பிரகாசிக்கிறான். கலசத்தில் (குடத்தில்) இருக்கிற தீபம்போல் சரீரத்திலிருக்கிற ஆத்மாவைத் தியானம் செய்யவேண்டியது. (எப்படியெனில்) அங்குஷ்ட மாத்திரனையும் (கைப்பெருவிரல் நடுவிலிருக்கிறவரை வரையிலுள்ள அளவு, அல்லது ஒரு அங்குல அளவுள்ளவனையும்) புகையில்லாத ஜோதி சுவரூபனையும் உள்ளேயிருந்து (சகலத்தையும்) பிரகாசிப்பிக்கிறவனையும் நாசமற்றவனு மிருக்கிற ஆத்மாவாகிய கூடஸ்தனைத் தியானிக்கவேண்டியது. எந்தமுனியானவன் தூக்கம்வருகிற வரையிலும் மரணமடைகிற வரையிலும் தியானித்துக்கொண் டிருக்கிறானோ அவன் இந்தத்தேகம் காலத்திற்குச் சுவாதீனமானபோது (பிராரப்தம் முடிந்து தேகம் நீங்குகிறகாலம் வந்தபோது), ஜீவன் முக்ததசையை விட்டுக் காற்று அசைவற்ற தன்மையை யடைந்ததுபோல் அதேக (விதேக அல்லது இனி தேகமடையாததாகிய) முக்தித்துவத்தை யடைகிறான். சப்தமற்றதும் ஸ்பரிச மற்றதும் ரூபமற்றதும் நாசமற்றதும் இரஸமற்றதும் நித்தியமானதும் வாசனையற்றதும் ஆதியந்த மற்றதும் மகத்தத்துவத்திற் கப்புறப்பட்டதும் சாசுவதமானதும் அழுக்கற்றதும் வியாதியற்றதுமாகிய அது (பிர்ம்மம்) ஒன்றே மிஞ்சுகின்றது.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ச-வது. அத்தியாயம்.

பிறகு பைங்கலர் யாக்ஞவல்க்கியரை, ஞானிகளுக்குக் கருமமென்ன? (அவர்களுடைய) ஸ்திதி எப்படிப்பட்டது? என்று கேட்டார். யாக்ஞவல்க்கியர் சொல்லுகிறார். அமானித்துவம் * முதலிய சம்பத்

* அமானித்துவம் முதலிய இருபது குணங்களின் விவரம் ஸ்ரீபகவத்கீதை அத்-கங-சு-அ-முதல் கஉ-வரையிலுள்ள வைகளில் காண்க.

தையுடைய முமுக்ஷுவானவன், இருபத்தியொரு குலத்தைக் கரையேற்றுகிறான். பிர்ம்மவித்தாக விருக்கிற மாத்திரத்தினாலே நூற்றொருகுலத்தைக் கரையேற்றுகிறான். ஆத்மாவைத் தேராளியாகவும் சரீரத்தைத் தேராகவும் அறி. புத்தியைச் சாரதியாகவும் மனதைக் கடிவாளமாகவு மறி. இந்திரியங்களைக் குதிரைகளாகவும் விஷயங்களை மார்க்கமாகவும் (குதிரைகள் செல்லும்வழியாகவும்) ஹிருதயங்களை நடக்கிற விமானங்களாகவும் ஞானிகள் சொல்லுகிறார்கள். இந்திரிய மனதுகளுடன்கூடிய ஆத்மாவை போக்தா (விஷயங்களை யனுபவிக்கிறவன்) என்று மகரிஷிகள் சொல்லுகிறார்கள். ஆகையால், சாக்ஷாத் நாராயணனே ஹிருதயத்தி லுறுதியாயிருக்கிறார். பிராரப்த கர்மம் முடிகிறவரையில் பாம்புச்சட்டையில்போல் வியவகரிக்கிறான் (பாம்பு, கழட்டிவிட்ட தன்சட்டையில் அபிமானமற்றிருக்கிறதுபோல தேகத்தில். அபிமானமற்றிருக்கிறான்). இப்படிப்பட்ட தேகத்தையுடைய முக்தனானவன் இருப்பிடமில்லாதவனாய் சந்திரனைப்போல (சந்திரன் தன் சஞ்சாரத்தினால் ஒருவருக்கும் துன்பமின்றி சந்தோஷத்தை யுண்டாக்கிக்கொண்டிருக்கிறதுபோல) சஞ்சரிக்கிறான். தீர்த்த (புண்ணிய நதி முதலியன அல்லது புண்ணியக்ஷேத்திர) ங்களிலாவது சண்டாளன் வீட்டிலாவது (இன்னவிடத்தில் தேகத்தை விடவேண்டுமென்கிற நியமமற்றவனாய்) சரீரத்தைவிட்டு கைவல்லியத்தை (மோக்ஷத்தை) யடைகிறான். அந்த (ஜீவன்முக்தன் விட்டுவிட்ட) ச்சரீரத்தை (பார்த்தவன்) திக்பலி கொடுக்கவேண்டியது. அல்லது, புதைக்கவேண்டியது. புருஷனுக்கு (ஞானிக்கு) த்தான் சந்நியாசம் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கல்ல. பிர்ம்மசுவரூபமாயிருக்கிற சந்நியாசிநிமித்தம் ஆசௌசம். (அந்தச் சந்நியாசி இறந்ததினால் சாதீட்டு) இல்லை. அக்கினிகாரியமுமில்லை (அவனுடைய தேகத்தை அக்கினியினாலெரிக்கவேண்டியதில்லை. அல்லது அந்தப் பிரேதவிஷயமாய் அக்கினியில் ஹோமம்முதலியன இல்லை). பிண்டமில்லை. உதகக்கிரியை (ஜலத்தினால் செய்யவேண்டிய தர்ப்பணம் முதலியன) இல்லை. பார்வணாதிகள் (மாசிகம் சிரார்த்தம் முதலியன) இல்லை. வெந்ததை யெப்படி மறுபடியும் வேகவைக்கிறதில்லையோ, அப்படி யெரிந்துபோனதை மறுபடி யெரிக்கிறதென்பதில் (அந்த முக்தனுடைய தேகமானது ஞானமாகிற அக்கினியினாலே யெரிக்கப்பட்டதாகையால் அதை மறுபடி யெரிக்கவேண்டியதில்லை என்பது கருத்து). ஞானாக்கினியினா லெரிக்கப்பட்டுப்போன தேகத்தை யுடையவனுக்கு சிரார்த்தமுமில்லை. (அபர) கிரியையுமில்லை. உபாதி (அக்ஞானம்) எதுவரையி லிருக்கிறதோ அதுவரையில் குருவுக்கு சுசுருஷை செய்யவேண்டியது. குருவிடத்தில்போல் குரு பத்தினியிடத்திலும் அவருடைய புத்திரர்களிடத்திலும் நடந்துகொள்ளவேண்டியது. சுத்தமான மனதையுடையவ

னும் சுத்தமான சித்ரூபனும் பொறுமை யுள்ளவனும் அவனே (பிர்ம்மமே) "நான்" என்கிற ஞானமடையப்பட்டதினாலே பகுத்தறிவையடைந்து பரமாத்துமாவிடத்தில் ஹிருதயத்தை நிறுத்தி தேகத்தில் சாந்திபதமடைந்தால் (தேகேந்திரியாதிகளுடைய வியாபாரங்களொழிந்தால்) அப்போது மனோபுத்தி சூனியமாய் ஜோதிசுவரூபமாகிறான். அமிருதத்தினால் திருப்தியடைந்தவனுக்குப் பாலினாலென்னப்பிரயோஜனம்?. இப்படித் தன்னுடைய வாத்மாவை யறிந்தவனுக்கு வேதங்களினாலென்னப்பிரயோஜனம்?. ஞானாமிருதத்தினால் திருப்தியடைந்த யோகிக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லை. ஏதாவது செய்யவேண்டியதா யிருக்குமாகில் அவன் தத்துவத்தை யறிந்தவனல்ல. பிரத்தியகாத்மா வானவன் (கூடஸ்தன்) தூரஸ்தனானாலும் (துர்லபனானாலும்) தூரஸ்தனல்ல. தேகத்திலிருந்தாலும் தேகமுடையவனல்ல. சர்வவியாபியாயிருக்கிறான். ஹிருதயத்தை நிர்மலமாக்கி அநாமயத்தை (பிர்ம்மத்தை) ச்சிந்தித்து "நானே" பரமாயும் (சிரேஷ்டமாயும்) சகலமுமா யிருக்கிறேனென்று பார்ப்பதுவே சிரேஷ்டமான சுகம். ஜலத்துடன் சேர்க்கப்பட்ட ஜலமும் பாலுடன் சேர்க்கப்பட்ட பாலும் நெய்யுடன் சேர்க்கப்பட்ட நெய்யும்போல ஜீவாத்ம பரமாத்மா பேதமற்றதாகிறது. தேகமானது ஞானத்தினால் பிரகாசித்து புத்தியானது அகண்டாகாரரூபமா யெப்போதாகிறதோ அப்போது வித்வானானவன் பிர்மமஞானமாகிற அக்கினியினாலே கருமபெந்தத்தைத் தெகித்துவிடுகிறான். அதின்பிறகு பரிசுத்தமாயும் பரமேசுவரனென்கிற பெயரையுடைய அத்துவைத சுவரூபமாயும் நிர்மலமான ஆகாசம்போல் ஒளியாயுமாகிறான். ஜலத்தில் ஜலம்சேர்ந்தா லெப்படியோ அப்படிப்போல ஆத்மா நிருபாதிகனாகிறான் (ஆத்மாவுக்கு பாதியான ஸ்தூல சூக்ஷ்ம காரணதேகங்கள் நீங்கி தன் சுவசுவரூபமான பிர்ம்மமாகிறான்). ஆத்மாவானவன் ஆகாசத்தைப்போல புலப்படாத ஆகாரத்தையுடையவன் (ஆனதால்) அந்தப் பரமாத்துமா, வாயுவைப்போல் காணப்படுகிறதில்லை. அவன் வெளியிலு முள்ளேயுமிருந்தாலும் அசைவற்ற ஆத்மாவா யிருக்கிறான். ஞானமாகிற வெளிச்சத்தினாலே அந்தராத்மா அறிகிறான்.

ஞானியானவன், எந்தெந்தவிடத்தி லெவ்விதமாய் மரணமடைந்தாலும் எங்கும் பரவிய ஆகாசம்போல அந்தந்தவிடத்திலேயே லயமடைகிறான். வாஸ்தவமாய் கடாகாசம்போல ஆத்மாவானவன் லயமடைகிறதாக வறியத்தக்கது. அவன் நிராலம்பமும் (பற்றற்றது) ஆகிய ஞானப்பிரகாசத்தை யெவ்விடத்திலு மடைகிறான். மனிதன் ஆயிரம் வருஷகாலம் ஒற்றைக்காலால்நின்று தபஞ்செய்தாலும் இந்தத்தியான யோகத்தினுடைய பதினாறி லொருபங்குக்குச் சமமாகாது, இன்னது ஞானம், இன்னது ஞேயம் (ஞானத்திற்கு விஷயமானவஸ்து), என்பு

தை யறிய இச்சையுள்ளவன் ஆயிரம்வருஷம் சாஸ்திராப்பியாசம் செய்தாலும் அதின் முடிவை யறிகிறதில்லை. (ஆத்மாவை) நாசமற்றதாகிய அக்ஷரசுவரூபமாக அறியத்தக்கது. ஜீவித்திருக்கிற தென்பதோ நிலையற்றதா யிருக்கிறது. சாஸ்திரக்கூட்டங்களை விட்டு எது சத்தியமோ அது உபாசிக்கத்தக்கது. அநேகமான கருமம், சௌசம், ஜபம், யக்ஞம், அப்படியே தீர்த்தயாத்திரை, இவைகளைத் தத்துவத்தை யறிகிறவனாயி லனுஷ்டிக்கவேண்டியது. எப்போதும் "நானே பிர்ம்மம்" என்றிருக்கிறது மகாத்துமாக்களுக்கு மோக்ஷஹேதுவானது. பெந்தத்திற்கும் மோக்ஷத்திற்கு மிரண்டு காரணங்களிருக்கின்றன. (அவையாவன) என்னுடையதென்பதும் என்னுடையதல்ல வென்பதுந்தான். என்னுடைய தென்பதினாலே பிராணிகள் (பெந்தத்தில்) கட்டுப்படுகிறார்கள். என்னுடையதல்ல வென்பதினாலே விடுபடுகிறார்கள். மனதானது உன்மனீபாவம் (விருத்தியற்ற அல்லது சலனமற்ற நிலைமையை) அடைந்தால் துவைதம் ஒருபோதும் காணப்படுகிறதில்லை. எப்போ துன்மனீபாவம் வருகிறதோ அப்போது அதுவேதான் பரமபதம். மனதானது எங்கெங்கே போகிறதோ அங்கங்கே பரமபதம் (என்றால், மனோவியாபார மற்றுப்போனால் அப்போது "ஸவ-ஂஹஸ்ரஹ ஃயஂஜஃ = இந்த ஜகத்தெல்லாம் பிர்ம்மசுவரூபம்" என்ற சுருதி வாக்கியப்படி மனது பற்றுகிற சகலவஸ்துக்களும் பிர்ம்மத்தைத் தவிர அந்நியமாயில்லை யாகையால் மனதிற்கு விஷயமான வஸ்து பிர்ம்மமே. அந்தப் பிர்ம்மத்தில் மனது லயமடைவதுதான் பரமபதம்). அங்கங்கே சகலத்திலும் சமமாயிருக்கிறது பிர்ம்மமே. ஆகாசத்தை முஷ்டியினா லடிக்கலாம், உமியைத்தின்று பசியை யாற்றிக்கொள்ளலாம் (இப்படிப்பட்ட சக்தியை யுடையவனானாலும்கூட) "நானே பிர்ம்மம்" என்றறியாதவனுக்கு முக்தியுண்டாகிறதில்லை.

இந்த உபநிஷத்தை யெவன் அத்தியயனம் செய்கிறானோ அவன் அக்கினியைப்போல் பரிசுத்தனாகிறான். பிரும்மாவைப்போல பரிசுத்தனாகிறான். விஷ்ணுவைப்போல் பரிசுத்தனாகிறான். அவன் சகலமான தீர்த்தங்களிலும் ஸ்நாநம் செய்தவனாகிறான். அவன் சகல வேதங்களையும் அத்தியயனம் செய்தவனாகிறான். அவன் சகலவேத விருதங்களையு மனுஷ்டித்தவனாகிறான். அவனுக்கு இதிஹாச புராணங்களும் ருத்திரங்களும் நூறாயிரம்ஜபித்த பலனுண்டாகிறது. அவன் பதினாயிரம் பிரணவம் ஜபம்செய்தவனாகிறான். முன் பத்துத்தலைமுறை பின் பத்துத்தலைமுறையை பரிசுத்தம் பண்ணுகிறான். பங்திபாவனம் செய்தவனாகிறான். அவன் மகானாகிறான். பிர்ம்மஹத்தி சுராபானம் சுவர்ணஸ் தேயம் குருதல்பகமனம் செய்தவும் அப்படிப்பட்ட செய்கையை யுடையவர்களுடைய சகவாசம் செய்தவும் பாபங்களிலிருந்து பரிசுத்தனாகிறான். ஆகாசத்தில் வியாபித்திருக்கிற கண்ணைப்போல

(ஆகாசத்தில் காணப்படுகிற வஸ்துக்களைக் கண்ணானது தடையன்றி பார்க்கிறதுபோல) அந்த விஷ்ணுவினுடைய பரமபதத்தை ஞானிகளெப்போதும் பார்க்கிறார்கள். எப்போதும் விழித்துக்கொண்டிருக்கிற ஞானக்கண்களையுடைய பிராம்மணர்கள் விஷ்ணுவினுடைய பரமபதமெதுவோ அதை அநேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்துக்கொண்டு பிரகாசப்படுத்துகிறார்கள். ஓம் ஸத்திய மித்தியுபநிஷத்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

பைங்களோபநிஷத் முற்றிற்று.

ஒம் தத்ஸத்.

---

ஹரி: ஓம்.

ஓம் பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீகுரவேநம:

# சாரீரகோபநிஷத்.

---

(ஸஹநாவவது சாந்தி:.)

பூமிமுதலிய (பிரதிவி அப்பு அக்கினி வாயு ஆகாசம்) மகாபூதங்களுடைய சேர்க்கைதான் சரீரம். (அந்தச் சரீரத்தில்) எதுகடினமோ அது பூமி. எதுதிரவமோ (நெகிழ்ச்சியுள்ளதோ) அது ஜலம். எது உஷ்ணமோ அது அக்கினி. எது சஞ்சரிக்கிறதோ அது வாயு. எது குழாயோ அல்லது துவாரமுள்ளதோ அது ஆகாசம். காதுமுதலியவை ஞானேந்திரியங்கள். காது ஆகாசாம்சம். துவக்கு வாயுஅம்சம். கண்அக்கினிஅம்சம். நாக்கு ஜலாம்சம். வாசனை (மூக்கு) பூமியம்சம். இவ்விதமான இந்திரியங்களுக்கு முறையே சப்தஸ்பரிசரூபரஸகந்தங்கள் விஷயங்கள். இவைகள் முறையே பூமிமுதலியவைகளிலிருந்துண்டானவை. வாய், கை, கால், பாயு, உபஸ்தம், இவைகள் கருமேந்திரியங்கள். இவைகளின் செய்கை முறையே பேசுதல், எடுத்தல், நடத்தல், ஜலமலம் விடுதல், ஆநந்தித்தல், இவைகள்தான். இவைகளும் முறையே பூமிமுதலிய மகாபூதங்களிலிருந்துண்டானவை. அந்தக்கரண சதுஷ்டயமென்பவை, மனது புத்தி அகங்காரம் சித்தம் நான்கு. அவைகளின் காரியங்கள் முறையே சங்கற்பம் விகற்பம் (முறையே எண்ணம், சந்தேகம், இவ்விரண்டும் மனதின்காரியம்), நிச்சயம் (இது புத்தியி[illegible]ன் காரியம்), அபிமானம் (அகங்காரத்தின் காரியம்), அவதாரணம் [illegible]ந்திச்செய்[illegible]யாதொருகாரியங்களின் நினைப்பு, இது சித்தத்தின்காரியம்), இவைகளே. மனதிற்கிருப்பிடம் கண்டம். புத்திக்கிருப்பிடம் முகம். அகங்காரத்திற்கிருப்பிடம் ஹிருதயம். சித்தத்திற்கிருப்பிடம் நாபிஸ்தானம். எலும்பு தோல் நாடி மயிர் மாம்சம் இவைகள் பூமியம்சம். மூத்திரம் கபம் ரத்தம் சுக்கிலம் வேர்வை இவை ஜலாம்சம். பசிதாகம் சோம்பல் மோகம் மைதுனம் இவைகள் அக்கினியம்சம். நடத்தல் கீறுதல் கண்களை மூடுதல் திறத்தல் முதலியன வாயுவம்சம். காமம் குரோதம் லோபம் மோகம் பயம் இவை ஆகாசாம்சம். சப்தஸ்பரிசரூபரஸகந்தங்கள் பூமியின் குணங்கள். சப்தஸ்பரிசரூபரஸங்கள் ஜலங்களின் குணங்கள். சப்தஸ்பரிசரூபங்கள் அக்கினியின் குணங்கள். சப்தஸ்பரிசங்கள் வாயுவின்குணங்கள். சப்தமொன்றே ஆகாசத்தின்குணம். சாந்துவிகராஜஸதாமஸமென குணங்கள் மூன்று. கொல்லாமை, சத்தியம், கள்ளாமை, பிர்ம்மசரியம் (வியபிசாரமின்மை), பிறர்பொருளில் அவாவின்மை, கோபமின்மை, குரு சுசுரூஷை, சுத்தி (தேக சுத்தி மனச்சுத்தி), சந்தோஷம், நேர்மை, தன்னைப்புகழாமை, டம்பமின்மை, ஆஸ்திக்கியம் (தெய்வம், வேதசாஸ்திரம்

இவைகளில் நம்பிக்கை), பிறருக்குத்தீங்கு செய்யாமை, இவைகள் எல்லாம் முக்கியமாய் ஸாத்துவிகனுடைய குணங்கள் என்று அறிந்து கொள்ளத்தக்கவை.

"நான் கருத்தாவாயிருக்கிறேன் நான் போக்தாவாயிருக்கிறேன் வாசாலகனுயிருக்கிறேன் அபிமானமுடையவனு யிருக்கிறேன்" என்பவைகள் ராஜஸனுடைய குணங்களென்று பிர்ம்மவித்துக்களால் சொல்லப்படுகின்றன. நித்திரை சோம்பல் மோகம் ஆசை மைதுனம் களவு இவைகள் தாமஸனுடைய குணங்களென்று பிர்ம்மவாதிகளால் சொல்லப்படுகின்றன. சத்துவகுணமுடையவன் மேலே (சுவர்க்காதி லோகத்தில் பிறப்பை யடைகிறுன்). இராஜஸகுணமுடையவன் நடுவில் (பூலோகத்தில் பிறப்பையடைகிறுன்), தாமஸகுணமுடையவன் கீழே (நரகம்முதலிய லோகத்தில் பிறப்பையடைகிறுன். இந்த அர்த்தத்தை ஸ்ரீபகவத்கீதை கச - வது அத்தியாயம், கஅ - வது சுலோகத்தில் காண்க)..

ஸம்மியக்ஞானம் (பிர்ம்மஞானம்) சாத்துவிகம். தருமஞானம் இராஜஸம். அக்ஞானமாகிய இருட்டுத்தாமஸம். ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி துரீயம் என அவஸ்தைகள் நான்கு. ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் (பத்து)அந்தக்கரணங்கள் நான்கு. இப் பதிநான்கு கரணங்களுடன் கூடியிருக்கிறது ஜாக்கிரம், அந்தக்கரணங்கள் நான்குடன் கூடியது சுவப்னம். சித்தமொன்றையே யுடையது சுஷுப்தி. ஜீவனேடு மாத்திரம் கூடியிருக்கிறது துரீயம். உந்மீலித: = கண்களைத்திறந்துகொண்டிருக்கிறவன், நிமீலித: = கண்களை மூடிக்கொண் டிருக்கிறவன், மத்யஸ்த: = கண்களை மூடாமலும் திறக்காமலுமிருக்கிறவன், (ஆகிய இந்த ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி அவஸ்தைகளிலெல்லா மிருக்கிற) ஜீவாத்ம பரமாத்துமாக்களுக்குள்ளே ஜீவன் க்ஷேத்திரக்ஞன். ஞானேந்திரிய கருமேந்திரியங்கள் (பத்து) பிராணன் ஐந்து, மனது புத்தி இந்தப் பதினேழுகளுடன் கூடினது சூக்ஷ்மதேகம் அல்லது லிங்கதேகம் என்று சொல்லப்படுகிறது. மனது புத்தி அகங்காரம் ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பூமி இந்த எட்டும் பிரகிருதிகள். காது, துவக்கு, கண், நாக்கு, ஐந்தாவதாகிய மூக்கு, பாயு, உபஸ்தம், கைகள், கால்கள், பத்தாவதாகிய வாக்கு, சப்தஸ்பரிசரூபரஸகந்தம் இவைகள் பதினைந்து. * ஆக இந்தத் தத்துவங்கள் இருபத்திமூன்று. இருபத்தி நான்காவது அவ்வியக்தமாகிய பிரதானம். அதற்கு அந்நியன் அல்லது சிரேஷ்டன் புருஷன். இந்தப்படி யுபநிஷத்.

சாரீரகோபநிஷத் முற்றிற்று.

---

* மூலத்தில் பதினறென்றிருக்கிறது.

ஓம்

பரப்பிர்ம்மணே நமஃ

ஸ்ரீகுருவேநம:

எஜுர்வேதத்தில்

# வராகோபநிஷத்.

## ஸஹநாவவதுசாந்தி.

### முதல் அத்தியாயம்.

ரிபு என்கிற மகாமுனியானவர் தேவ வருஷத்தில் பனிரண்டு வருஷம் தபசுசெய்தார். அதின்முடிவில் வராகரூபியான பகவான் பிரத்தியக்ஷமாய் "எழுந்திரு, எழுந்திரு, வேண்டியவரத்தைக் கேள்" என்றார். அவரெழுந்திருந்து அவரை (வராக ரூபியான மகாவிஷ்ணுவை) குறித்து நமஸ்க்காரம் செய்து, "பகவானே! காமிகளாலெதெது அபேக்ஷிக்கப் படுகிறதோ அதை நான் தங்களிடத்திலிருந்து சுவப்நத்திலும் அபேக்ஷிக்கிறதில்லை. சகலமான வேதசாஸ்திர இதிஹாஸ புராணங்களும் சகலவித்தியாசமூகங்களும் (மற்ற யோகம் கணிதம் ஜோதிஷம் முதலானவைகளும்) பிர்ம்மா முதலான சகலதேவதைகளும் உம்முடைய ரூபஞானத்தினாலே முக்தியென்று சொல்லுகிறார்கள். ஆகையினாலே உம்முடைய ரூபத்தை தெரிவிக்கிற பிர்ம்மவித்தையைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அதற்கு வராகரூபியான பகவான் சொல்லுகிறார்.

சிலவாதிகள் தத்துவம் இருபத்து நான்கென்றும் சிலர் முப்பத்தாறென்றும் பின்னும் சிலர் தொண்ணூற்றாறென்றும் நினைக்கிறார்கள். அவைகளின் கிரமத்தைச் சொல்லுகிறேன் கவனமான மனதுடன் கேளும்.

காது துவக்கு கண் முதலிய ஞானேந்திரியங்கள் ஐந்து; வாக்கு கை கால் முதலிய கருமேந்திரியங்கள் ஐந்து; பிராணாதிகள் ஐந்து; சப்தாதிகள் ஐந்து; மனோபுத்தி அகங்காரம் சித்தம் நான்கு; இப்படி இருபத்துநான்கு தத்துவங்களை பிர்மவித்துக்கள் அறிகிறார்கள். இவைகளுடன் பஞ்சீகிருத பூதங்களான பூமி ஜலம் அக்கினி வாயு ஆகாசம் ஐந்து என்றும், ஸ்தூல சூக்ஷ்ம காரணங்களை மூன்று தேகங்களென்றும், ஜாக்கிரத் சுவப்நசுஷுப்திகளை மூன்று அவஸ்தைகளென்றும், ஞானிகளறிகிறார்கள். ஆக தத்துவக்கூட்டங்கள்* முப்பத்தாறென்று முனிக

* கணக்கிடுகையில் முப்பத்தைந்துதானாகிறது. ஜீவனை ஒன்றாகச்சேர்க்கலாம்.

ளறிகிருர்கள். இந்த தத்துவங்களுடன் இருத்தல், உண்டாதல், வளரு தல், திரிதல், குறைதல், நசித்தல் இவ்வாறும் ஷட்பாவ விகாரங்கள். பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, (கிழத்தனம்) மரணம் இவ்வாறும் ஷடூர்மிகள் என்று சொல்லுகிருர்கள். தோல், ரக்தம், மாம்ஸம், கொழுப்பு, ஊண், எலும்பு இவ்வாறும் ஷட்கோசங்களென்று சொல் லப்படுகின்றன. காமக் குரோத லோப மோக மத மாச்சரியம் இவ் வாறு அரிஷட்வர்க்கங்களும்; விசுவன் தைஜஸன் பிராக்கியன் என்ற மூன்று ஜீவன்களும், சத்துவ ரஜஸ் தமஸ் என்ற குணங்கள் மூன்றும்; பிராரப்தம் ஆகாமி ஸஞ்சித மென்ற கருமங்கள் மூன்றும்; பேசுதல், எடுத்தல், நடத்தல், மலஜலம் விடுதல், ஆநந்தம் இவைகளாகிய கரு மேந்திரிய வியாபாரங்களைந்தும்; சங்கற்பம், பிரயத்தினம், அபிமா னம், நிச்சயம் இவைகளும்; சந்தோஷம் * தயவு † சிநேகம் ‡ அசட்டை § இன்னுன்கும்; திக்குகள், வாயு, சூரியன், வருணன், அசுவினீ தேவதை கள், அக்கினி, இந்திரன், உபேந்திரன், மிருத்தியு; அப்படியே சந்தி ரன், சதுர்முகபிரம்மா, ருத்திரன், க்ஷேத்திரக்கியன், ஈசுவரன்; ஆக தத்துவங்கள் தொண்ணூற்றாறென்று சொல்லப்பட்டன. இந்த தத்து வக்கூட்டங்களுக்கு விலக்ஷணனையும் வியாதி யற்றவனையும் வராகரூபி யாயு மிருக்கிற என்னை பக்தியோடு யார் பஜிக்கிறார்களோ அவர்கள் அக்கியானம் அதின் காரியங்கள் இவைகளிலிருந்து விடுபட்டு ஜீவன் முக்தர்களாகிருர்கள். இப்படித் தொண்ணூற்றாறு தத்துவங்களை அறி ந்தவர்கள் எந்த ஆசிரமத்தில் (பிர்ம்மசாரி கிரகஸ்த வானப்பிரஸ்த ஸந்நியாசாச்சிரமங்களில்) இருந்தாலும், ஜடையை யுடையவனுகிலும், (ரிஷி அல்லது யோகியாகிலும்) மொட்டந்தலைய னுகிலும் (சந்நியாசி யாகிலும்) குடுமியை யுடையவனுகிலும் (கிரகஸ்தனுகிலும்) மோக்ஷ மடைகிருன். இதில் சந்தேகமில்லை.

முதலத்தியாயம் முற்றிற்று.

---

## உ-வது அத்தியாயம்.

ரிபு என்கிற பெயரையுடைய மகா யோகியானவர் குரோட (வராக) ரூபியாயிருக்கிற லக்ஷ்மீபதியை நோக்கி "பகவானே! சிரேஷ் டமான பிரம்மவித்தையை எனக்கு நீர் உபதேசம் செய்யும்" என்று கேட்டார். அப்படி கேட்கப்பட்டவரும் பக்தர்களுடைய துக்கத்தைப் போக்கடிக்கிறவருமான பகவான் சொல்லுகிருர். "தன்னுடைய வரு ணுசிரம தருமத்தினுலும் தபசினுலும் குருவை சந்தோஷப் படுத்து

---

* சுகியாயிருப்பவரிடத்தில் சந்தோஷம்.

† தீனனிடத்தில் (துன்பப்படுகிறவனிடத்தில்) தயவு.

‡ புண்ணியவானிடத்தில் சிநேகம்.

§ பாபியிடத்தில் அசட்டை.

வதினுலும் புருஷர்களுக்கு வைராக்கியம் முதலிய சாதன சதுஷ்டய முண்டாகிறது. (அவைகள்ாவன) நித்தியாநித்தியவஸ்து விவேகம்- இந்தவஸ்து அழிவற்றது; இந்தவஸ்து அழியத்தக்கது என்கிற அறிவு. இஹா முத்திரார்த்த பலபோக விராகம்—இந்த உலகத்திலும் சுவர்க்கம் முதலிய பரலோகத்திலுமுள்ள விஷயங்களில் ஆசையில்லா திருத்தல். சமாதிஷட்க சம்பத்தி—சமம், தமம், உபரதி, திதிக்ஷா, சிரத்தை, சமாதானம், இவ்வாறுகளுடன் கூடியிருப்பது. முமுக்ஷுத்துவம் - மோக்ஷமடைய முயற்சி. இவற்றை அப்பியசிக்க வேண்டியது. இவ்விதமாய் இந்திரியங்களை ஜயித்தவனுய் சகல விஷயத்திலும் என்னுடையதென்கிற புத்தியைவிட்டு சாக்ஷி சைதன்னியமா யிருக்கிற என்னிடத்தில் "நான்" என்கிற புத்தியை வைக்கவேண்டும். மனுஷிய ஜன்மம் துர்லபம் (அரிது). அதிலும் புருஷஜன்மம் அரிது. அதிலும் பிராமண்ணியம் அரிது. இப்படிப்பட்ட ஜன்மமடைந்தும் வேதாந்த சிரவணுதிகளினுலே வருணுசிரமங்களை அதிகரித்ததாகிய வியாபக பிர்ம்மத்தினுடைய சச்சிதானந்த சுவரூபத்தை எவன் அறிகிறதில்லையோ அந்த அக்கியானியானவன் எப்போது மோக்ஷ மடையப்போகிருன்? நானே சுகம், வேருென்றல்ல; வேறே (சுகம்) ஒன்றுண்டென்ருல் அது சுகமல்ல. என் பிரயோஜனத்தின் பொருட்டன்றி பிரேமை என்பது கிடையாது. என்பொருட்டாக விருக்கிற அந்தப் பிரியமானது என்னுடைய சுவபாவமல்ல. விசேஷபிரேமைக்கு நானிருப்பிடமா யிருப்பதால் நானில்லை என்பதில்லை. இருக்கக் கடவேனென்று* எவன் பார்க்கப்படுகிருனே அவன் எங்கும் நிறைந்திருக்கிற நானே. நான் பிரகாசமல்லவென்கிற சொல்லானது எந்தப் பிரகாசத்தினுலுண்டாச்சுதோ அப்படிப்பட்ட சுவப்பிரகாசனுயிருக்கிற அந்த ஆத்மாவை அப்பிரகாசமானது எப்படித்தொடும். தானுக விளங்கிக்கொண்டும் ஒன்றை ஆதாரமா யுடையதல்லாததாயு மிருக்கிற (ஆத்மா)தை எவர்கள் நிச்சயமா யறிகிருர்களோ அவர்கள்தான் விசேஷஞானத்தை யுடையவர்களென்பது என் தாத்பரியம்".

"என்னுடைய பூர்ணுத்துமாவைத்தவிர ஜகத்ஜீவன் ஈசுவரன் மாயை முதலியவைகளில்லை. அவர்களுக்கு நான் விலக்ஷணன். தருமம் முதலிய லக்ஷணத்தை யுடையதாயும் அக்கியானுந்தகார ரூபமாயு மிருக்கிற கருமமானது சுவப்பிரகாசமாயிருக்கிற ஆத்மாவான என்னைத்தொட யோக்கியமானதல்ல. சர்வசாக்ஷியாயும் வருணுசிரம மற்றதாயுமிருக்கிற (தன்) ஆத்மாவை பிர்ம்ம சுவரூபமாகவே பார்க்கிறவன் பிர்ம்மமே யாகிருன். விளங்கிக்கொண் டிருக்கிற பிரபஞ்சத்தைப் பிரகாச ரூபமாயிருக்கிற பரமபதமாக வேதாந்தப் பிரமாணத்தினுல் பார்க்கிறவன் உடனே மோக்ஷமடைகிருன். தேகத்தினிடத்

* எவனுகத் தானுக வேண்டுமென் நிச்சிக்கிருனே அந்தப் பிர்ம்மம் நானே.

தில் ஆத்மஞானம் (உறுதிப்பட்டிருப்பது) போல தேகாத்தும ஞானத்திற்கு விரோதியான ஞானம் ஆத்மாவினிடத்தில் எவனுக் குண்டாகிறதோ அவன் விரும்பாவிட்டாலும் மோக்ஷமடைகிறான். சத்திய ஞானநந்த பூர்ண லக்ஷணமாயும் அக்கியானத்திற்கு புறம்பானதாயு மிருக்கிற பிர்ம்மாநந்தத்தை எப்போதும் பார்க்கிறவன் கருமத்தினு லெப்படி கட்டுப்படுவான். மூன்று (ஜாக்கிரத் சுவப்ன சுஷுப்தி) அவஸ்தைகளுக்கு சாக்ஷியாயும் சத்தியஞ் ஞானநந்த லக்ஷணமுடையதாயும் (ஷ்வம்) நீ (சுஹம்) நான் என்கிற பதங்களுக்கு லக்ஷியார்த்தமானதாயும் யாதொரு தோஷங்களுக்கும் சம்பந்தப் படாததாயும் எங்கும் பரவினதாயும் சச்சிதானந்தமாயு மிருக்கிற பிர்ம்மத்தை ஞானக்கண்ணுள்ளவன் பார்க்கிறான். பிரகாசித்துக்கொண் டிருக்கிற சூரியனை குருடன் பாராததுபோல அக்கியானி (பிர்மத்தை) பார்க்கிறதில்லை. பிரக்கியானமே (ஞானசுவரூபமே) பிர்ம்மம். அது சத்தியஞானத்தை லக்ஷணமாக வுடையது. இப்படி பிர்மத்தைச் செவ்வையா யறிகிறதினாலே மனிதன் அமிருதனாகிறான். ஆநந்தமாயும் இருமையற்றதாயும் குணங்களற்றதாயும் சத்தியமானதாயும் சித்கனமாயு மிருக்கிற அந்தப் பிர்ம்மத்தை தன்னாத்தும சுவரூபமாக அறிந்தவன் ஒன்றிலிருந்தும் பயமடைகிறதில்லை. சின்மாத்திரமாயும் எங்கும் பரவியதாயும் நித்தியமாயும் சம்பூர்ணமாயும் சுகரூபமாயும் நாசமற்றதாயு மிருக்கிறதுதான் உண்மையான பிர்ம்மம். அதைத்தவிர வேறொன்றுமில்லை யென்பதுதான் பிர்ம்மஞானிகளுடைய இருப்பு. உலகமானது குருடனுக்கு இருட்டாயும் நல்ல கண்ணுள்ளவனுக்கு பிரகாசமாயு மிருப்பதுபோல அக்கியானிக்குத் துக்க சுவரூபமாயிருக்கிற உலகமானது ஞானிக்கு ஆநந்தமயமாயிருக்கிறது. அநந்தனாயும் சித்கனாநந்தனாயு மிருக்கிற வராகரூபியான என்னிடத்தில் அத்துவைத பாவனை (இரண்டாவதில்லை என்கிற எண்ணம்) இருந்ததே யானால் பந்தமேது? விடுபடுகிறவன்யார்? சகலமான தேகத்தை யுடையவர்களுடைய (ஜீவர்களுடைய) சுவசுவரூபமோ எப்போதும் சின்மாத்திரம்தான். கண்ணுக்குக் காணப்படுகிற (வட்ட) குடம்போல் தேகாதி சங்காதங்கள் (தேகம் முதலாயுள்ள தத்துவக்கூட்டங்கள்) இல்லவேயில்லை. ஆத்மாவைவிட அந்நியமாகத் தோற்றுகிற சராசரப் பிரபஞ்சங்களை உன்னுடைய ஆத்மாவாகவே அறிந்து "அது நானாக விருக்கிறேன்" என்று பாவனைசெய். (அப்படி பாவனை செய்கிறவன்) சுவ சுவரூபத்தைத் தானே யனுபவிக்கிறான். தன்னைக் காட்டிலும் போக்கிய (அனுபவிக்கத்தக்க) வஸ்து வேறில்லை. இருக்கிறதென்கிற வஸ்து இருக்குமானால் அப்படியிருக்கிற லக்ஷணத்தை யுடையது பிர்ம்மந்தான். பிர்ம்மஞானத்தை விசேஷமா யுடையவன் பிரசித்தமா யிருக்கிற ஜகத்தை எப்போதும் பார்த்துக்கொண் டிருந்தாலும் தன் ஆத்

மாவைக் காட்டிலும் அந்நியமாகப் பார்க்கிறதில்லை. என்னுடைய சுவ
ரூபத்தைச் செவ்வையாய் அறிகிறதினாலே கருமங்களினால் கட்டப்
படுகிறதில்லை. சரீரேந்திரியங்க ளில்லாததாயும் சர்வசாக்ஷியாயும் பர
மார்த்த ஏகவிக்கியானமாயும் (உத்தம பிரயோஜனமானதாயும் ஒன்று
யும் ஞான சுவரூபமாயும்) சுகாத்துமாவாயும் சுவப்பிரகாசமாயு மிருக்
கிற பிர்ம்மத்தையும் சகலத்தையும் (சகல பிரபஞ்சத்தையும்) தன்
னுடைய சுவரூபமாக சுவானுபவத்தினாலே எவன் அறிகிறானோ அவன்
தைரியமுள்ளவன். அவன் நானேயென்று அறிந்துகொள்ளப்பட வே
ண்டியவன். ஓ ரிபுவே! நீ அவனாகக் கடவாய். இதற்குப் பிறகு பிர
பஞ்சானுபவ மெப்பவுமில்லை; எப்போதும் சுவரூப ஞானானுபவம்
தான். இந்தப்படி ஆத்மாவை பரிபூர்ணமா யறிந்தவன் பந்தத்தி லிரு
ந்து விடுபட்டவனுமல்ல. பெத்தனுமல்ல; சர்வசாக்ஷியாய் நர்த்தனம்
செய்துகொண்டிருக்கிற என்னை ஒரு முகூர்த்தகாலம் சுவ சுவரூபானு
சந்தானத்தினாலே எவன் தியானிக்கிறானோ அவன் சகல பந்தத்தி
லிருந்தும் விடுபடுகிறான். சகல பூதங்களுக்குள்ளே யிருக்கிறவனாயும்
நித்தியமுக்த சிதாத்மாவாயும் பிரத்தியக் சைதன்னியமாயும் (ஜீவாத்
துமாவாயும்) இருக்கிற என் பொருட்டாகவே நமஸ்காரம், நமஸ்கா
ரம், ஓ தேவதே! நீ நானாகவிருக்கிறாய். நான் நீயாக விருக்கிறேன்.
அநந்தனாயிருக்கிற உன்பொருட்டும் என்பொருட்டும் சிதாத்துமாவா
யிருக்கிற என்பொருட்டு முன்பொருட்டும் பரேசனாயிருக்கிற என்
பொருட்டும் மங்கள சுவரூபியாயிருக்கிற உன்பொருட்டும் நமஸ்க்
காரம். நான் செய்யவேண்டுவதென்ன? நான் போகவேண்டிய தெங்
கே? நான் கிரகிக்கவேண்டியதெது? நான் தள்ளவேண்டிய தெது?
(ஒன்றுமில்லை; என்னத்தினாலென்றால்,) மகாப்பிரளய ஜலத்தினால்
போல பிரபஞ்சம் என்னால் நிறைந்திருக்கிறது. உள்ளபிமானம் வெ
ளியபிமானம் தேகாபிமானம் இவைகளை எவன் விடுகிறானோ சகலசங்க
(சேர்க்கை) த்தி லிருந்தும் விடுபட்ட அவன் என்னையே அடைகி
றான். இதில் சந்தேகமில்லை. பாம்பைப்போல ஜனக்கூட்டத்தை
எப்பவும் விட்டிருக்கிறவனாயும் சோபனமாயிருக்கிற ஸ்திரீயை சவம்
போலவும் முடிவற்றதாயிருக்கிற விஷயம் முதலியவைகளை விஷத்
தைப்போலவும் நினைக்கிறவனாயும் காமங்களை விட்டவனாயும் வைராக்
கிய முள்ளவனாயும் ஜகத்திலிருக்கிற பரமஹம்சன் எவனோ அவன்
வாசுதேவனாகிய நானே; இதுசத்தியம், இதுசத்தியம். இந்தசத்தியமே
இப்போது சொல்லப்படுகிறது. சத்தியமான பரபிர்ம்மம் நான், என்
னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை."

"உபவாச மென்பது ஜீவாத்ம பரமாத்துக்களுடைய சமீபவாச
மேயன்றி தேகத்தை வறட்டுகிற விரதமல்ல. தேகத்தை வறளச்செய்
வதினால் அவிவேகிகளுக்கு என்ன பிரயோசனம்? புத்தை யடித்தகி

னுல் பெரியபாம்பைக் கொன்றுவிட்டதாக ஆகுமா? பிரம்ம மிருக்கிற தென்று அறிந்தா லது பரோக்ஷஞானம் (கண்ணுக்கு காணப்படாமல் ஒரு பிர்ம்மமிருக்கிற தென்கிறஞானம்) ஆகிறது. நானே பிர்ம்மமென்று அறிந்தால் அது சாக்ஷாத்காரமென்று சொல்லப்படுகிறது. யோகியானவன் தன் ஆத்மாவைக் கேவலம் (பூர்ணம்) ஆக எப்போது அறிகிருனே அதுமுதல் ஜீவன்முக்தனுகிருன். நானே பிர்ம்மமென்று (ஸஹம்ஸ்வரூஹ்ஹுதி) எப்போது மிருப்பது மகாத்துமாக்களுக்கு மோக்ஷஹேதுவானது. பந்தமோக்ஷங்களுக்கு இரண்டு வாக்கியங்களிருக்கின்றன. என்னுடையது (விஷயாபிமானம்) என்பதும் என்னுடையதல்ல (அபிமானமின்மை) என்பதும்தான். என்னுடைய தென்பதினுல் (ஜந்து) கட்டப்படுகிருன். என்னுடையதல்ல வென்பதினுல் விடுபடுகிருன். வெளிச்சிந்தையும் செய்யக் கூடாது. அப்படியே உட்சிந்தையும் (செய்யக்கூடாது). ஓரிபுவே! சகலசிந்தையும்விட்டு சுவஸ்தமாக உன் ஆத்மசுவருபத்திலேயே திருப்தியடைந்து இரு."

"ஜகத் முழுதும் சங்கற்ப (மனத்தோற்றம் அல்லது எண்ணம்) மாத்திரத்தினுலேயே யுண்டாகிறது. சங்கற்ப மாத்திரத்தினுலேயே ஜகத் தோற்றம். சங்கற்பமாத்திரமா யிருக்கிற ஜகத்தை விட்டு நிர்விகல்பத்தை (விகாரமற்றதை) ஆசிரயித்து என்னுடைய ஸ்தானத்தை மனதில் பாவனைசெய். ஓ மகா புத்திசாலியே! என் சிந்தனமும் என் கீர்த்தனமும் என்னைக்குறித்து ஒருவருக்கொருவர் சம்பாஷணையும் செய்துகொண்டு என்னையே சருவசிரேஷ்டமா யுடைத்தானவனுகி காலத்தைப் போக்கு. பிரபஞ்சத்தில் * சித்திருக்கிற தென்பது † சின்மாத்திரம்தான்; இந்தப் பிரபஞ்சமானது ‡ சின்மயந்தான்; நீயும் சித்துத்தான்; நானும் சித்துத்தான்; இந்த லோகங்களும் சித்தென்றே பாவனைசெய். ஆசையை நிராசையாக்கு. எப்போதும் பற்றற்றவனுகி இரு. அக்கியானத்தினு லுண்டான கருத்திராதிகாரகத்தி

---

* சித் என்ருல், அறிவு அல்லது அறிவுவிளங்குகிறதற்கும் சொல்லலாம். ஜீவனை சித் என்று வியவகிரிப்பதுண்டு. ஆகையால், எது பிரகாசிக்கிறதோ, எது இருக்கிற தென்று சொல்லப்படுகிறதோ, அவைகளை எல்லாம் சித் என்று சொல்லலாம்.

† சின்மாத்திரமென்ருல், பிர்ம்மமே. எதெதுசித்தாச் சொல்லப் படுகிறதோ அவைகளெல்லாம் பிர்மத்தைத்தவிர வேறல்ல.

‡ சின்மயமென்ருல், பிரபஞ்சம் முதலான சகலமும் பிர்ம்மமயமென்றே கொள்ளத்தக்கது. எப்படி என்ருல், ஓ தங்கமானது பல ஆபரணங்களாய்ச் செய்யப்பட்டு பலபெயர்களை யடைந்திருந்தாலும் பலபெயருள்ள அந்த ஆபரணங்கள் முழுமையும் தங்கமயமே அன்றியில் வேறல்லனபோல, சிருஷ்டியாயிருக்கிற சகலபிரபஞ்சமும் பிர்ம்மத்தினுடைய சக்தியைத்தவிர வேறல்ல என்று சொல்லியிருக்கிற சுவேதா சுவதரோபநிஷத் க-வது அத்தியாயம் உ-வது மந்திரத்தையும், நாரதபரிவிராஜகோபநிஷத் கூ-வது உபதேசத்தையும் பார்க்க.

னாலே* யுண்டான கருமத்தினால் சுருதிமூலமா யுண்டான ஆத்ம விக்கியான பிரகாசமான தீபம் எப்படி பாதிக்கப்படும்? தேகமே ஆத்மாவென்பதைவிட்டு ஜகத்வியவகாரத்தில் விகாரமற்றவனாய் ஒரேநிஷ்டையாயிருக்கும் நிலைமையினாலே உள்ளேயிருக்கிற ஞானத்தில் மாத்திரம் ஆசையுள்ளவனாக ஆய்விடு. மகாகாசத்தில் † கடாகாசம் மடாகாசம் போல சிதாகாசமா யிருக்கிற என்னிடத்தில் ஜீவேசுவரர்கள் கற்பிக்கப்பட் டிருக்கிறார்கள். (ஜீவேசுவரர்களாகிய) ஆத்மாவின் சிருஷ்டிக்கு முந்தி எதானது இல்லையோ, அப்படியே முடிவிலும் எதானது தள்ளப்பட்டதோ, அதானது மாயை யென்று விவேகத்தினாலே பிர்ம்ம ஞானிகளால் சொல்லப்படுகிறது. மாயையும் அதின் காரியமும் ‡ நசித்துப்போனால் ஈசுவரத்துவமு மில்லை. ஜீவத்துவமுமில்லை. ஆகையினாலே § நிருபாதிகமான ஆகாசம்போல் நான் சுத்தனாகவும் சித்தாகவு மிருக்கிறேன்.

ஈக்ஷணம் ¶ முதல் பிரவேசம் வரையிலுள்ள ஜீவேசுவராதி ரூபமாகிய சேதனா சேதனாத்துமகமாகிய சிருஷ்டியானது ஈசுவரனாலே கற்பிக்கப்பட்டது. திருணாசகம் ‖ (ஒருவித யக்கியம்) முதல் யோகம் வரையிலுள்ள கருமங்கள் ஈசுவரப் பிராந்தியை ஆசிரயித்தவைகளா யிருக்கின்றன. லோகாயதம் (ஒருமதம்) முதல் சாங்கியம் வரையி லுள்ளவைகள் (மதங்கள்) ஜீவப்பிராந்தியை ஆசிரயித்தவைகளா யிருக்கின்றன. ஆனபடியினாலே முமுக்ஷுக்களினாலே ஜீவேசவாதத்தில் புத்தியை ஒருபோதும் செலுத்தத்தகாது. நிச்சலமாயிருந்துகொண்டு பிர்ம்மதத்துவம் விசாரிக்கத்தகுந்தது. இரண்டாவதற்றதாயிருக்கிற பிர்ம்மதத்துவத்தை எப்படி யிருக்கிறதோ அப்படி அறி

* எக்கியத்தில் எஜமான் ருத்துவிக்குகள் ஹோதா முதலானவர்கள் கருத்தாதி. எக்கியத்தை செய்விக்கிறவன் காரகன். அதினாலுண்டானது கருமம்.

† கடாகாசம் என்றால், எங்கும் நிறைந்திருக்கிற ஆகாசமானது குடத்துக்குள்ளும் இருக்கிறது. அது குடத்துக்குள்ளிருக்கிற ஸ்திதியில் அது கடாகாசமென்று சொல்லப்படுகிறது. அப்படியே அந்த மகாகாசமானது வீட்டுக்குள்ளிருக்கும் ஸ்திதியில் அது மடாகாசமென்று சொல்லப்படுகிறது.

‡ மாயையினாலுண்டான பிரபஞ்சம் மாயையின் காரியமென்று சொல்லப்படுகிறது. மண்ணினாலுண்டான குடத்தை மண்ணின்காரியமென்று சொல்வதுபோல.

§ குடமும் வீடும் இல்லாதபோது ஆகாசமானது குடத்தி லிருக்கிறதென்றும் வீட்டிலிருக்கிற தென்றும் சொல்ல இடமில்லையாகையால் அப்படிப்பட்ட நிலைமை நிருபாதி என்று சொல்லப்படுகிறது. குடம் வீடு இருக்கிற நிலைமை உபாதி என்று சொல்லப்படுகிறது.

¶ சாந்தோக்கியோபநிஷத் ஆறாவது பிரபாடகம் உ - ௩ - வது கண்டங்களில் "அந்த தேவன் ஈக்ஷணம் = யோசித்து, அக்கினி முதலியவைகளை சிருஷ்டித்து அவைகளில் பிரவேசித்து" என்கிறவரையில் சொல்லிருக்கிறதைப் பார்க்க.

‖ இந்த எக்கியத்தின் விஸ்தாரத்தை கடோபநிஷத் முதலாவது வல்லியில் காண்க.

யாதவர்க ளெல்லோரும் பிராந்தர்கள்தான். அவர்களுக்கு முக்தி யேது? இவ்விடத்தில் (பிரபஞ்சத்தில்) சுகமேது? அவர்களுக்கு * உத்தமாதம பாவங்கள் (உயர்ந்தது தாழ்ந்தது என்கிற எண்ணங்கள்) இருந்தால் அதினு லென்ன? சுவப்நாவஸ்தை சம்பந்தமான இராஜ்ஜியாதி பத்தியமும் பிக்ஷவாங்குதலும் ஜாக்கிருதவஸ்தையில் ஒட்டுமோ? புத்தியானது அக்கியானத்தில் லய மடைந்தபோது அது நித்திரையென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. அஞ்ஞானமும் அதின் காரியமுமில்லா என்னிடத்தில் நித்திரை எப்படியுண்டாகும்? புத்தியானது மலர்ந்திருக்கிறபோது அதுஜாகரத் (விழித்திருத்தல்) என்று சொல்லப்படுகிறது. எனக்கு விகாரம் முதலியவை யில்லாததினுல் ஜாக்ரதவஸ்தை இல்லை. சூக்ஷ்ம நாடிகளிலே புத்தியினுடைய சஞ்சாரமானது சுவப்னமாகிறது, சஞ்சார தருமமற்ற என்னிடத்தில் சுவப்னமில்லை. தமஸினுலே (அக்கியானத்தினுலே) சூழப்பட்ட சுஷுப்திகாலத்தில் சகலமும் லயித்திருக்கையில் (பிரகிருதியில் அடங்கியிருக்கையில்) காணத்தக்கவ னல்லாதவனுய் (தன்) சுவரூபமாகிற மகாநந்தத்தை அனுபவிக்கிறுன். சகலத்தையும் வித்தியாசமில்லாமல் சித்தாகவே எவன் பார்க்கிறுனே அவன் விசேஷஞான முடையவன். அவன்தான் சிவன். அவன்தான் ஹரி. அவன்தான் பிர்ம்மா. இந்த பிரபஞ்சத்தில் நீண்ட சுவப்னமெதுவோ, நீண்ட சித்தப்பிரமை எதுவோ, நீண்ட மனேராஜ்ஜியமெதுவோ, அதுதான் துக்கக் கடலான சம்சாரம். தூங்கி விழித்தது முதல் மறுபடி தூங்குகிறவரையில் பிர்ம்மமொன்றையே சிந்திக்க வேண்டியது. † ஆரோபிக்கப்பட்டிருக்கிற ஜகத்தை லயப்படுத்துவதினுல் சித்தம் என் சுவரூபமாயாகிறது. நம்முடைய் பெரிதான அரிஷட் வர்க்கங்களைக் ‡ கொன்று அவைகளுடைய நாசத்தினுலே மிகவும் சிரேஷ்டமான யானையாகிறுன் (யானைகளுக்கெல்லாம் சிரேஷ்டமான யானையைப்போ லாகி

---

* ஈசுவரன் சர்வக்கியனுகையால் சிரேஷ்டனுகவும், ஜீவன் கிஞ்சிக்கியனுகையால் இவன் தாழ்ந்தவனென்றும் எண்ண மிருந்ததினுல் மட்டும் பிரயோஜன மில்லை. உலகத்தில் இன்னது உயர்ந்தது, இன்னது தாழ்ந்தது என்று கொள்ளும் எண்ணம் அக்கியானத்தினுல்தான், சகலமும் பிரம்ம சுவரூபமென்றும் பிரம்மத்திற்கு அன்னியமானது ஒன்றுமில்லையென்றும், பிரம்மக்கியானிகள் சமமாய் பார்ப்பதினுல் அவர்களுக்கு உயர்தாழ்வு என்பது கிடையாது.

† நிர்குணமாயும் இரண்டாவதற்றதாயும் இருக்கிற பிர்ம்மத்தினிடத்திலிருப்பது போல் சொல்லப்படுகிறது. அப்படிசொல்லுகிறதுதான் ஆரோபிதம். இந்தப் பொய்யான ஆரோபிதத்தைத்தள்ளி விடுவதினுல் சித்தமானது பிர்ம்மசுவரூபமாய் விடுகிறது. என்றுல், சித்தத்தையுடைய ஆத்மாசித்தம் முதலானது நசித்து பிர்ம்ம சுவரூபமாக ஆகிறுன் என்பது கருத்து.

‡ காம, குரோத, லோப, மோஹ, மத, மாச்சரியங்கள் தான் அரிஷட் வர்க்கங்களென்று சொல்லப்படுகின்றன.

ருன்) இந்தச் சரீரமானது இப்போது நசித்தாலும் சந்திர நக்ஷத்திரங்களுள்ள வரையிலிருந்தாலும் அதினால் சித்தையே தேகமாகவுடைய எனக்கு விசேஷமென்ன? குடமானது நசித்தால்தான் என்ன? வெகு கால மிருந்தால்தா னென்ன? குடத்திலிருக்கும் ஆகாசத்திற்கு விசேஷம் அற்பமாவதில்லை. பாம்பினால் நீக்கப்பட்டதும் உயிரற்றதுமான பாம்புச் சட்டையானது புத்தி லிருக்கையில் பாம்பானது அதில் அபிமானத்தைப் பாராட்டுகிறதில்லை. இப்படியே (ஞானி) ஸ்தூலதேகத்தையும் சூக்ஷ்மதேகத்தையும் மதிக்கிறதில்லை. மித்தியாஞானமானது(ஜகத் சத்தியமென்கிற தப்புஞானமானது) அதின் காரணத்துடன் (ஸமூலமாய்) ஆத்மஞானமாகிற அக்கினியினால் நாசமடைந்தால்(நெதி, நெதி) இதல்ல, இதல்ல என்கிற நிஷேதரூபத்தினால் இந்த ஞானியானவன் சரீரமற்றவனாகிறான். சாஸ்திரத்தினாலே (பிரபஞ்சம்) வாஸ்தவமென்கிற ஞானம் நசித்துப்போகிறது. அபரோக்ஷ ஞானத்தினால் (பிரபஞ்ச வியாபாரமாகிற) வியவகார யோக்கியத்துவம் நசித்துப் போகிறது. பிராரப்தநாசத்தினால் பிரபஞ்சத்தோற்றம் நசிக்கிறது. மாயையானது இப்படி மூன்றுவிதமாய் நாசத்தை யடைகிறது. தனக்குள்ளே பிரம்மபாவத்தைச் சேர்க்காமல் (ஜீவ பிரம்ம ஐக்கியஞ் செய்யாமல்) போனால் ஜீவபாவம் போகிறதில்லை. உண்மையான அத்துவைதம் அறியப்பட்டதானால் (விஷய) வாசனை போய்விடுகிறது. (வாசனையற்றால்) பிராரப்தம் போனபின் தேகம் வருகிறதில்லை. இவ்விதமாய் மாயை முழுதும் நசித்துப்போகிறது நிச்சயம். ஜகத்திருக்கிறதென்றால் (அப்படி) இருக்கிறதென்பது சொரூபமான பிரம்மமே. ஜகத்விளங்கிறதென்றால், அப்படி விளங்கிறது பிரம்மம் தான். பாலைநிலத்தின்தோற்றமான ஜலம் முழுதும் பாலை பூமியேயன்றி வேறில்லை. தன்சுவரூப விசாரத்தினால் இந்த மூன்றுலோகமும் (சுவர்க்க மர்த்திய பாதாளம்) சித்சுவரூப மாத்திரமே. ஜீவன், ஈசுவரன், குரு இப்படிப்பட்டகதைக்கு வெகுதூரத்திலிருக்கிற ஏகாந்த கேவல சிதேகரஸ சுவபாவமான பிர்ம்மத்தினிடத்தில் அக்கியானமேஇல்லை. (அப்படியிருக்க) ஜகத்தினுடைய பிரஸ்தாபமேது. பரிபூர்ணமாகவே யிருக்கிற (அந்த) பிர்ம்மம் நானாகவிருக்கிறேன். பூர்ணவிக்கிரகமாயிருக்கிற ஞானமாகிய சந்திரனானவன் மோகமாகிற இராகுவினாலே அபகரிக்கப்பட்ட தேஜஸையுடைத்தா யிருக்கையில் மோசனம்வரையில் செய்கிற ஸ்நானதான யக்கியம் முதலிய கிரியைகள் வீணானது. ஜலத்தில் உப்பைச்சேர்த்தால்(வேறாகக் காணப்படாமல்)சமமாய் போவதுபோல ஆத்மாவும் மனதும் ஐக்கியமானால் அது சமாதி என்று சொல்லப்படுகிறது. சத்குரு கிருபையன்றியில் விஷயங்களைத் தள்ளிவிடுவதும் துர்லபம், தத்துவ தரிசனமும் (உண்மையான வஸ்துவையறிவதும்) துர்லபம்; ஸகஜாவஸ்தை (தன்சுவசுவரூபமாகவிருத்தல்) யும் துர்லபம்.

ஞானசக்தி உதையமானவனாயும் சகல கருமங்களையும் விட்டவனாயுமிருக்கிற யோகியினுடைய ஸகஜாவஸ்தை (சுவஸ்வரூபமாயிருக்கும் நிலைமை) யானது தானாகவே பிரகாசிக்கிறது. * இரஸ (பாதரஸம்) த்திற்கும் மனதிற்கும் சலித்துகொண்டிருக்கும் தன்மை சுவபாவமாயுள்ளது. இரஸமானது கட்டப்பட்டாலும் மனது விடுதலையடைந்தாலும் பூமியிலே எதுதான் சித்திக்கமாட்டாது. மூர்ச்சையடைந்தவன் வியாதியைப் போக்கடிக்கிறான். மரணமடைந்தவன்தானே உயிர்ப்பிவிக்கிறான். கட்டுப்பட்டவன் ஆகாசத்தில் சஞ்சரிக்குதலை யடைகிறான். இரஸமும் மனதும் பிர்ம்மத்துவத்தை யுடையன. † இந்திரியங்களுக்கு எஜமானன் மனது. மனதுக்கெஜமானன்வாயு. வாயுவுக் கெசமானன் லயயோகம். ஆகையினாலே, லயயோகத்தை ஆசிரயிக்கத்தக்கது. யோகிகளுக்கு லயயோகமானது சேஷ்டை (செய்கை) யில்லாததாயும் மாறுதலற்றதாயும் விளங்கிக்கொண்டிருக்கிறது. சகலமான

---

* இந்த அடையாளமுதல் † இந்த அடையாளம் வரையிலுள்ள வாக்கியங்களுக்கு அர்த்த மென்னவென்றால்: இவ்விடத்தில் ரஸம், மனது, இவைகள் ஒன்றுக்கொன்று உபமானமாய்க் காட்டப்படுகிறது. எப்படி என்றால், ரஸமானது சலித்துக்கொண்டிருக்கிற சுவபாவமுடையது; அப்படியே மனதும். ரஸம் கட்டப்பட்டால் என்றால், சித்தர்கள் ரஸத்தின் சுவபாவமான சலனத்தை சில மூலிகைகளால் நிறுத்தி ரஸகுளிகைசெய்து அதை உண்பதினால் உலகத்தில் எவ்விடத்திலும் போகவும் இஷ்டமானவைகளை அடையவும் கூடுமாகையால், ரஸம் கட்டப்பட்டால் பூமியில் எதுதான் சித்திக்கமாட்டாதென்று சொல்லப்பட்டது. அப்படியே மனதை ஒரே இடத்தில் நிறுத்திச் செய்கிறதாகிய இதின் ஐந்தாவது அத்தியாயத்தில், காலவஞ்சன மென்கிற யோகசித்தி யடைந்தவன் இச்சித்ததெல்லா மடைகிறானென்று சொல்லப்பட்டிருப்பதால் மனதை அடக்கினவனுக்கு பூமியில் எதுதான் சித்திக்கமாட்டாது. ரஸம் மூர்ச்சையடைந்தாலென்றால், சில மூலிகைகளினால் ரஸம் சுத்திசெய்யப்படும்போது அதின்சலன மற்றுப்போகிறது. அந்தஸ்திதி மூர்ச்சை என்று சொல்லப்பட்டது. அந்த ஸ்திதியில் அது வியாதிஸ்தர்களுக்குக் கொடுக்கப்பட்டால் வியாதியைப் போக்கும். அப்படியே மனது சலிக்காமல் ஒரே நிலையில் நிறுத்திக்கொண்டிருக்கிற யோகிக்கு வியாதி அணுகாது. மரணமடைந்தவன்தானே உயிர்ப்பிவிக்கிறான் என்றால், ரஸமானது மூலிகைகளினால் பஸ்மம் செய்யப்பட்டால் அந்த பஸ்மமானது உயிர்போகும் நிலைமையிலிருக்கிற பிராணிகளைக்கூட உயிர்ப்பிவிக்கும். அப்படியே மனது நாசமடைந்தால், ஆத்ம சுவரூபத்தைப் பிரகாசிப்பிக்கும்; கட்டுப்பட்டவன் ஆகாசத்தில் சஞ்சரித்தலையடைகிறானென்றால், ரஸத்தைக்கட்டி அதனால் செய்யப்பட்ட குளிகையினால் சித்தாதிகள் ஆகாசமார்க்கத்தில் சஞ்சரிக்கிறார்கள். அப்படியே மனதைக கட்டினவன் சிதாகாசத்தில், அதாவது - பிர்ம்மானந்த சுவரூபத்தில் சஞ்சரிக்கிறான். என்றால், ஆனந்தத்தை அடைகிறான். ரசமும் மனதும் பிர்ம்மத்துவத்தை யுடையனவென்றால், ரஸத்தைச் சுவாதீனம் செய்துகொண்டவன் எங்கும் (பிர்ம்மமென்கிற பதத்தி னர்த்தப்படிக்கு) வியாபிக்கிற சக்தியுடையவனாகிறான். அப்படியே மனதைச் சுவாதீனம் செய்துகொண்டவன் பிர்ம்மமாகிறான். அல்லது ரஸத்தைக் கட்டினவன் ஆகாசத்தில் சஞ்சரிக்கிறான். மனதைக் கட்டினவன் பிர்ம்மமாகிறானென்றாவது அர்த்தமாகலாம்.

சங்கற்பங்களையும் தள்ளிவிட்டதாயும் சகலமான சேஷ்டைகளை முழுதும் விட்டதாயும் வாக்குக் கேட்டாததாயுமிருக்கிற மனோலயமானது தானே அறிந்துகொள்ளத்தக்கது. சங்கீத தாளலயவாத்தியங்களுக்கு சுவாதீனமாயிருந்தாலும் ஆட்டக்காரியானவள் தலைமேலிருக்கிறகுடத்தை சம்ரக்ஷணைசெய்கிற விஷயத்தில் புத்தியுடையவள்போல் கூட்டங்கூட்டமாயிருக்கிற விஷயங்களைப்பார்த்துக்கொண்டு அதற்கு சுவாதீனமாயிருந்தாலும் யோகியானவன் பிர்ம்மத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற புத்தியை விடுகிறதில்லை. சகலமான சிந்தையையும் விட்டுவிட்டு சாவதானமான மனதுடன் யோக சாம்பிராஜியத்தை யிச்சிக்கப்பட்டவனாலே நாதமே (யோகத்தினாலுண்டாகும்துவனி) அநுசந்தானம் செய்யத்தக்கது.

இரண்டாமத்தியாயம் முற்றிற்று.

---

## ங-வது. அத்தியாயம்.

ஒருவஸ்துவானது யாதொருகாலத்திலும் பலசுவரூபமாக வாகமாட்டாது. அகண்டமாய் (இடைவிடாததாய்) இருக்கிறேனாகையால் என்னைத்தவிர வேறே யாதொன்றுமில்லை. எதெது காணப்படுகிறதோ, எதெது கேட்கப்படுகிறதோ அவைகளெல்லாம் பிர்ம்மத்தைத் தவிர வேறேயாயிருக்கவில்லை. நித்தியமாயும் சுத்தமாயும் விமுக்தமாயும் ஏகமாயும் அகண்டானந்தமாயும் அத்துவயமாயும் சத்தியமாயும் ஞானமாயும் அநந்தமாயுமுள்ள பரபிர்ம்மமெதுவோ அதுவே நானாக விருக்கிறேன். நான் ஆநந்தரூபன்; அகண்டஞான முள்ளவன்; சருவசிரேஷ்டன்; பிரகாசமான சித்கனன்; ஆகாசத்தை மேகம் எப்படித் தொடுகிறதில்லையோ அப்படிச் சம்சாரதுக்கங்கள் என்னைத் தொடமாட்டாது. துக்கநாசத்தினால் சகலமும் சுகமென்றும் அசத்து நசிப்பதினால் சகலமும் சத்ரூபமென்றும் அறி. சித்ரூபம்தான் தோற்றப்பட்ட பிரபஞ்சத்தோடு கூடியது. ஆனபடியினாலென்ரூபமானது அகண்டமானது. உத்தமனான யோகிக்குப் பிறப்பிறப்புப் போக்குவரத்துமில்லை; அறிவுமில்லை. சகல (பிரபஞ்ச) மும் அழுக்கோடு கூடினதுமல்ல; சுத்தமுமல்ல; சின்மயமாக பிரகாசித்துக்கொண் டிருக்கிறதாக விளங்குகிறது. சத்தியசித்கன அகண்டாத்துவயமாயும் திருசிய மல்லாததாயும் (இந்திரியங்களா லறியப்படுகிறதல்லாதது) கல்மஷ மற்றதாயும் சுத்தமாயும் இரண்டாவ தற்றதாயும் மங்களகரமாயுமிருக்கிற தெந்தப் பிர்ம்மமோ அது நானென்று (அது நீயே என்று) எப்போதும் மௌனத்தை ஆசிரயித்துக்கொண்டிரு. பிறப்பிறப்பு சுகதுக்க மற்றது. ஜாதிநீதி (விதி) குலகோத்திர மற்றது. ஜகத்திற்கு * விவர்த்தோபாதான காரணமாயுமிருக்கிற தெதுவோ அந்த

* உபாதான காரணம் மூன்றுவிதப்படும். அதாவது, ஆரம்போபாதானம் பரிணாமோபாதானம் விவர்த்தோபாதானம் என்பவைகளே. துணிக்கு நூல் உபாதான

சித் நானென்று ஆசிரயம் செய். பூர்ணமாயும் இரண்டாவ தற்றதாயும் அகண்டமான சேதனமாயும் பிரபஞ்சபேத சம்பந்தாதிக ளற்றதாயும் அத்துவிதீய பரசச்சிதம்சகம் (அம்சமுடையது) ஆயுமிருக்கிற அந்த பிர்ம்மம் நானே (நீயே) என்று எப்போதும் மௌனத்தை ஆசிரயி. ஒன்றினாலேயும் பாதிக்கப் படாததனாலே முக்காலத்திலும் ஒரே ரூபமாயிருக்கிறதும் எப்போது முள்ளதும் எதுவோ அது எப்போது மிருக்கிற என்னுடைய சத்ரூபம். உபாதியற்று நித்தியமா யிருக்கிறவும் சுஷுப்தியிலுள்ள சகலசுகத்தைக் காட்டிலும் சிரேஷ்டமாயிருக்கிறவுமான இந்த சுகசுவரூபத்துவமுங்கூட என் ஆநந்தத்துவம் தான். சூரியகிரணங்களினாலே பெரிதான இருட்டு சீக்கிரம் நாசமடைவது போல பெரிதான ஜனனத்திற்குக் காரணமான இருட்டு ஹரியாகிற சூரிய காந்தியினாலே சீக்கிரத்தில் நாசம் மடைகிறது. வேறொன்றினாலுமல்ல. என்னுடைய பாதஸ்மரணையினாலும் பூஜையினாலும பிராணியானவன் தன்னுடைய அஞ்ஞானத்திலிருந்து விடுபடுகிறான். மரண ஜனனங்களுடைய நாசத்திற்கு ஏதுவானது என்னுடைய பாதஸ்மரணை தவிர வேறொன்று மில்லை. பண இச்சையுள்ளவன் பணக்காரனை எப்படி ஸ்தோத்திரம் செய்கிறானோ அப்படிப்போல் ஜகத்திற்குக் கருத்தாவாயிருக்கிறவனை ஆதரவோடு ஸ்தோத்திரம் செய்தால் எவன்தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான். சூரியனுடைய சந்நிதியினாலே லோகம் தானாகவே சேஷ்டிக்கிறது (லோகவியாபாரம் நடக்கிறது) போல என்னுடைய சந்நிதியினாலேயே சகலமான லோக

---

காரணம். நூல் துணியானதினால் நூலின் சுவரூபத்தில் மாறுதலன்றி பழைய சுவரூபத்தி லிருந்துகொண்டே துணியாகவுமா யிருக்கிறது. ஆகையாலிது ஆரம்போபாதானம்.

தயிருக்குக் காரணம்பால். அந்தக் காரணமான பால் தன் சுவரூபம்மாறி தயிராகவாச்சுது; ஆகையாலிது பரிணாமோ பாதானம்.

கயிற்றினிடத்தில் பாம்பென்கிற தோற்றமுண்டாச்சுது; ஆனால் வாஸ்தவத்தில் கயிறு பாம்பாகவுமில்ல, கயிற்றில் பாம்புமில்லை. அப்படி யுண்டான தோற்றம் தப்பாயிருந்தாலும் பிரமை யிருக்கிறவரை வாஸ்தவமாய் பாம்பென்றே நம்பப்படுகிறது. இப்படி யுண்டான பிரமைக்கு ஆதாரம் கயிறுதான்; ஆகையால் கயிறு விவர்த்தோபாதானம்.

பிர்ம்மமானது ஜகத்திற்கு விவர்த்தோபானம்தான். ஏனென்றால், ஆரம்போபாதானமானால் ஜகத்தானது பிர்ம்ம சுவரூபமாகவே காணவேண்டும். அப்படிக் காணவில்லை. பரிணாமோ பாதனமென்றால், சுவரூபம்மாறி வேறொரு சுவரூப மடையவேண்டும்; மாறாத சுவபாவமுடையதே பிர்ம்மம். மேலும் தயிர் பாலாகாதது போல பிர்ம்மம் சுவசுவரூபத்தை யடையவும் கூடாததாகும். ஆகையால், பரிணாமோபாதானமல்ல விவர்த்தோபாதனமே. அதாவது, கயிற்றில் பாம்பை அக்ஞானத்தினா லாரோபிப்பதுபோல பிர்ம்மத்தினிடத்தில் ஜகத்தானது ஆரோபிக்கப் படுகிறது.

மும் சேஷ்டிக்கிறது. கிளிஞ்சலில் வெள்ளி எப்படி (அக்கியானத்தினால்) கற்பிக்கப்படுகிறதோ அப்படிப்போல என்னிடத்திலேயே மாயாமயமான மகதாதி ஜகத்தானது மாயையினாலே கற்பிக்கப்படுகிறது. சண்டாள தேகத்திலேயும் பசுவாதி தேகங்களிலேயும் ஸ்தாவரத்திலேயும் பிராம்மண சரீரத்திலேயும் மற்றவைகளிலேயும் தாரதம்மியமிருக்கிறதுபோல் நான் அப்படியிருக்கவில்லை. திக்குப்பிரமை நிவிருத்தி யானவனுக்குங்கூட முன்போல் (திக்குப்பிரமை யிருந்தகாலத்தில்போல்) திக்குவிளங்குவதுபோல விஞ்ஞானத்தினால் நாசமடைந்த ஜகத்தானது எனக்கு விளங்கிக்கொண்டிருக்கிறது. ஆனால், அந்த ஜகத்தில்லை. நான் தேகமுமல்ல, இந்திரியங்களு மல்ல, பிராணனுமல்ல, மனனுமல்ல, புத்தியுமல்ல, அகங்காரமுமல்ல, சித்தமுமல்ல, மாயையுமல்ல, ஆகாசம் முதலான ஜகத்துமல்ல, கருத்தாவு மல்ல, போக்தாவுமல்ல, அப்படியே புஜிப்பிக்கிறவனு மல்ல, ஜனார்த்தனனாகிய கேவலம் சித் சதாநந்த பிர்ம்மமாகவே யிருக்கிறேன். ஜலத்தினுடைய அசைவினாலேயே சூரியனுக்கு அசைவு எப்படியோ அப்படி அகங்கார சம்மந்தத்தினாலே ஆத்மாவுக்கு சமுசார முண்டாயிருக்கிறது. சம்சாரமானது சித்தத்தை மூலமாயுடையது. அதைப் பிரயத்தினத்தினால் சோதிக்கவேண்டும். இந்தச் சித்தத்தினுடைய மகத்துவத்தில் உனக்கு விசுவாசமென்ன? ஆச்சரியம்! இராஜாக்களுடைய தனங்களெங்கே? பிருமாக்களெங்கே? ஜகத்துக்களெங்கே! புராதனங்கள் போய்விட்டன. எத்தனையோ சிருஷ்டிகளாய் விட்டன. எத்தனையோ கோடிப் பிரும்மாக்கள் போய்விட்டார்கள். எத்தனையோ ராஜாக்கள் தூளிகள்போல் போய்விட்டார்கள். ஞானியா யிருக்கிறவனுக்குங்கூட அசுரசுபாவத்தினாலே தேகாபிமான முண்டாகலாம். ஞானியாயிருக்கிறவனுக்கு அசுர சுவபாவ முண்டானால் அவனிருந்திருக்கிற தத்துவ தரிசனமானது நிஷ்பலமாகிறது. உற்பத்தியாகிற ஆசை முதலானவை விவேக ஞானமாகிற அக்கினியினாலே எரிக்கப்பட்டுப்போனால் மறுபடி முளைக்கிறதேது. நல்ல புத்திசாலியாயிருக்கிறவன் பிறருடையதோஷத்தைக் கண்டுபிடிப்பதில் சந்தோஷ மடைவதுபோல் தன்குற்றத்தைக் கண்டுபிடிப்பானானால் எவன்தான் பெந்தத்திலிருந்து விடுபடமாட்டான். ஓ! முனீசுவரா! ஆத்மஞான மில்லாதவனும் முக்தனல்லாதவனும் (அணிமாதி) சித்திகளை இச்சிக்கிறான். திரவியம் மந்திரம் கிரியை காலம் யுக்தி இவைகளினாலே அந்த சித்தியை யடைகிறான். ஆத்மஞான முள்ளவனுக்கு அவை (சித்திகள்) விஷயமல்ல. ஆத்மஞானியானவனும் ஆத்மாவிலேயே பார்வையையுடையவனும் ஆத்மாவினாலே (மனதினாலே) ஆத்மாவிடத்திலே திருப்தி யடைந்தவனும் அவித்தையை அநுசரித்துப் போகிறதில்லை. ஜகத்தி லெந்தெந்த வஸ்துக்களுண்டோ அவைகளை அவித்தியாசுவரூபங்க

ளாக (ஆத்மஞானிகள்) அறிகிறார்கள். அவித்தையைவிட்ட ஆத்மஞானி அவைகளில்எவ்விதமாய் முழுகுவான். திரவ்விய மந்தர கிரியாகால யுக்திகள் நல்லசித்தியைக் கொடுக்கப்பட்டவைகளானாலும் அவைகளொன்றும் பரமாத்துமபதத்தை அடைகிற விஷயத்தில் உபகாரம்செய்யமாட்டா. சகல இச்சைகளுடைய வியாபாரமும் அடங்கியிருக்கச்சே ஆத்மஞானிஎன்கிற பெயரை யுடையவனும் மனதேயில்லாதவனுமிருக்கிற அவன்சித்தியை இச்சிக்கிற விஷயத்தில் எப்படி அருகனாவான்.

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ச-வது. அத்தியாயம்.

பின்னும் ரிபுவாகிய பகவானை நிதாகர் என்பவர் ஜீவன் முக்தி லக்ஷணத்தைச் சொல்லுமென்று கேட்டார். அவர் அப்படியே ஆகட்டுமென்று சொன்னார்:—

ஏழுபூமிகளிலே ஜீவன் முக்தர்கள் நான்குவகையார். சுபேச்சையென்பது முதலாவது பூமிகையாகவாகிறது. விசாரணை இரண்டாவது, தநுமானஸீ மூன்றாவது, ஸத்துவாபத்தி நான்காவது, அஸம்ஸக்தி ஐந்தாவது, பதார்த்தபாவனை ஆறாவது, துரீயகா ஏழாவது. பிரணவசுவரூபமான பூமிகையானது அகார, உகார, மகார, அர்த்தமாத்திரா சுவரூபமாயிருக்கிறது. அகாராதிகள் ஸ்தூல சூக்ஷ்ம பீஜ சாக்ஷி பேதத்தினாலே நான்கு வகைப்பட்டவைகள். அவைகளின் அவஸ்தை ஜாக்ரத் சுவப்ன சுஷுப்தி துரிய மென நான்கு. அகாரஸ்தூலாம்சத்தில் ஜாகரனாயிருப்பவனுக்கு விசுவனென்றுபெயர். சூக்ஷ்மாம்சத்தில் அவன் தைஜஸனென்று சொல்லப்படுகிறான். பீஜாம்சத்திலவன் பிராக்கியனென்று பெயரையுடையவன். சாக்ஷி யம்சத்திலவன் துரியன்.

உகாரஸ்தூலாம்சத்தில் சுவப்னாவஸ்தையையுடையவன் விசுவன். சூக்ஷ்மாம்சத்தில் அவன் தைஜஸன். பீஜாம்சத்தி லவன் பிராக்கியன். சாக்ஷி அம்சத்திலவன் துரியன்.

மகாரஸ்தூலாம்சத்தில் சுஷுப்தன் விசுவன். சூக்ஷமாம்சத்திலவன்தைஜஸன். பீஜாம்சத்திலவன் பிராக்கியன். சாக்ஷியம் சத்திலவன் துரியன்.

அர்த்தமாத்திரா ஸ்தூலாம்சத்தில் துரியவிசுவன். சூக்ஷ்மாம்சத்திலவன் தைஜஸன். பீஜாம்சத்திலவன் பிராக்கியன். சாக்ஷியம்சத்திலவன் துரியதுரியன்.

அகாரத்தினுடைய துரியாம்சம் ஒன்றிரண்டு மூன்று பூமிகைகள். உகாரத்தினுடைய துரியாம்சம் நான்காவது பூமிகா. மகாரத்தினுடை

ய துரீயாம்சம் ஐந்தாவது பூமிகா. அர்த்தமாத்திரா துரீயாம்சம் ஆரு வது பூமிகா. இதைக்கடந்ததே ஏழாவது பூமிகா.

(முதல்) மூன்று பூமிகளில் சஞ்சரிக்கிறவன் முமுக்ஷுவாகிறுன். நான்காவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிரம்மவித்தாகிறுன். ஐந்தாவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்மவித்வரனுகிறுன். ஆருவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்ம்மவித்வரீயானுகிறுன். ஏழாவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்ம்மவித்வரிஷ்டனுகிறுன்.

இதைக்குறித்து சுலோகங்களிருக்கின்றன. (அந்தச்சுலோகங்களின் அர்த்தம் அடியில் வரையப்படுகிறது).

"சுபேச்சையானது முதலாவது ஞானபூமியாகச் சொல்லப்பட்டி "ருக்கிறது. விசாரணையான திரண்டாவது. தநுமானஸீ மூன்ருவது. "சத்துவாபத்தி நான்காவது. அதற்குப்பிறகு அஸம்ஸக்தி ஐந்தாவது. "பதார்த்தபாவனை ஆருவது. துரியகா ஏழாவது". நான் மூடனுகவேயிருக்கட்டுமா? சாஸ்திரங்களினுலேயும் சத்துக்களான ஜனங்களினுலேயும் பார்க்கிறேனென்று (இனி நான்மூடனுகவிருக்கக்கூடாது. சாஸ்திரங்களுடையவும் சத்துக்களான ஜனங்களுடையவும் அனுக்கிரகத்தை அடைய முயலுகிறேனென்று) வைராக்கிய பூர்வமாயுண்டாகிற இச்சைசுபேச்சையென்று ஞானிகளால் சொல்லப்படுகிறது. சாஸ்திர சத்ஜனசேர்க்கையும் வைராக்கியாப்பியாச பூர்வகமான சதாசாரப் பிரவிருத்தியும் விசாரணையென்று சொல்லப்படுகிறது. விசாரணை சுபேச்சை இவைகளினுலே இந்திரிய விஷயங்களிலே எவ்விடத்தில் ஆசை குறைகிறதோ அந்தபூமிகா தனுமானஸீ என்று சொல்லப்படுகிறது. (மேற்படி) மூன்று பூமிகளுடைய அப்பியாசத்தினுலே விஷயங்களில் வைராக்கியமுண்டாய் அதினுலே சுத்தமான சித்தமானது சத்தான ஆத்மாவிடத்திலே யிருக்கையில் சத்துவாபத்தியென்று சொல்லப்படுகிறது. (மேற்படி) நான்குபூமிகளுடைய அப்பியாசத்தினுலே பலாபேக்ஷையன்றியில் வேருன்றியிருக்கிற சத்துவகுணத்தினுடைய பிரகாசமானது அஸம்ஸக்தியென்று பெயரை யுடையதாய்ச்சொல்லப்படுகிறது. (மேற்படி) ஐந்துபூமிகளுடைய அப்பியாசத்தினுலே ஆத்மாவினிடத்தில் மிகவும் ரமித்துக்கொண் டிருக்கிறவனுய் உள்ளும் வெளியுமுள்ள வஸ்துக்களில் பாவனை (தோற்றம்) இல்லாதவும் பிறரால் ஏவப்பட்டால் மாத்திரம் காரியங்களில் பிரவிருத்தியுள்ளவுமானஸ்திதி தான் பதார்த்தபாவனை என்கிற ஆருவது பூமிகா. ஆறுபூமிகளுடைய வெகு காலாப்பியாசத்தினுலே (பிரபஞ்சாதி) பேதங்களற்றுப்போய் ஆத்மபாவனையிலேயே நிலைத்திருக்கிற தெதுவோ அது தான் துரியகாவென்கிற ஏழாவது பூமிகா. சுபேச்சைமுதலுள்ள மூன்றுபூமிகளும் பேதா பேதத்துடன் கூடினவைகளென்று சொல்லப்படுகின்றன. (ஏனென்ருல்) ஜாக்ரத் அவஸ்தையில். எந்தஜகத்தைப்

பார்க்கிறானோ அந்தஜகத்தை வாஸ்தவமாக புத்தியினால் அறிகிறான். அத்துவைதத்தில் ஸ்திரபுத்தி யுண்டானவனாய் துவைத பாவனை படங்கினால் நான்காவது பூமிசம்பந்தத்தினாலே இந்த உலகத்தை சுவப்நம்போல் பார்க்கிறான். சிதறிப்போகிற சரத்கால மேகமானது எப்படி நாசமடையுமோ அப்படி ஜகத்து நசித்துப்போகிறது. ஓ! நிதாகா! (அப்படிப்பட்டவன்) சத்துவத்தை மாத்திரம் மிச்சமாயுடையவனாக விருக்கிறானென்று திடஞ்செய்துகொள். சுஷுப்தி பதமென்கிற பெயரையுடைய ஐந்தாவதுபூமியை ஏறி சகலவிசேஷாம்சங்களு மற்றவனாய் அத்துவைத மாத்திரமாகவே யிருக்கிறான். எப்போதும் வெளி வியாபாரங்களி லிருந்தபோதிலும் எப்போதுமுள் நோக்குமுள்ளவனானதினாலே இந்த (ஆறாவது) பூமியிலே அப்பியாசம் செய்கிறவன் (நன்றாய் விஷயவாசனை யற்றவனாய்) சிரமமடைந்து தூங்குகிறவனைப்போல் காணப்படுகிறான். பழமையானதும் (ஈ-துஶவடஷீ) கூடசுப்த்தி என்கிற பெயரையுடையதுமான ஏழாவது பூமியானது கிரமமா யடையப்படுகிறது. எவ்விடத்தில் சத் அசத் ரூபமில்லையோ, அகங்காரமும் அநகங்காரமு மில்லையோ, (அந்த ஏழாவது பூமிகையில்) கேவலம் க்ஷீணமான மனசுடையவனும் பயமற்றவனும் இரண்டாவதற்ற ஸ்திதியிலே யிருக்கிறான். ஆகாசத்தில் சூனியமாயிருக்கிற குடத்தைப்போல் உள்ளும் சூனியமாயும் வெளியும் சூனியமாயு மிருக்கிறான். சமுத்திரத்திற்குள் பூர்ணமாயிருக்கிற குடத்தைப்போல உள்ளும் பூர்ணமாயும் வெளியும் பூர்ணமாயு மிருக்கிறான். அறிகிறவனாயும் அறியப்படுகிறவனாயும் ஆகவேண்டாம். சகல பாவனையும் தள்ளி மிச்சமான தெதுவோ (மிச்சமானது பிர்ம்மம்) அந்த சுவரூபமாகவாகக்கடவாய். பார்க்கிறவன் பார்வை பார்க்கப்படும் வஸ்து இவைகளை வாசனையுடன்தள்ளி (ஓஶ-நஶுரயஶோஹாஷும்) விளங்குகிற சிரேஷ்டமானப் பிரகாசமாகிய ஆத்மாவையே பஜி. பிரபஞ்ச வியாபாரமுள்ளவனானாலும் இந்தப் பிரபஞ்சமானது காணப்படாமலிருக்கிற ஆகாசம்போல் எவனுக்குக் காணப்படுகிறதில்லையோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். சுகதுக்கங்களிலே எவனுடைய மனப்பிரகாசமானது உதயத்தையும் அஸ்தமயத்தையும் (சுகத்தில் பொங்குதலும் துக்கத்தில் மங்குதலும்) அடைகிறதில்லையோ, அடையப்பட்டதை * அதிக்கிரமிக்காம லிருக்கிற இருப்பை யுடையதோ, அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். சுஷுப்தியிலிருக்கிற எவன் விழித்துக்கொண்டவனாக விருக்கிறானோ, எவனுக்கு விழித்துக்கொண் டிருப்ப தென்பதில்லையோ, எவனுடைய

---

* சுகதுக்கங்களில் எது தனக்குநேரிட்டதோ அதறு நேரிட்டஸ்திதியிலேயே விட்டுவிடுகிறதேயன்றி சுகத்தை விர்த்திசெய்யவாவது துக்கத்தைப் போக்கவாவது முயற்சிசெய்கிறதில்லையென்பது கருத்து.

ஞானமானது (விஷய) வாசனையற்றதாக விருக்கிறதோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். ஆசை துவேஷம் பயம் முதலியவைகளுக்கு அநுகுணமாக நடந்தாலும் எவனுடைய உள்ளம் ஆகாசத்தைப்போல் சுத்தமாயிருக்கிறதோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். ஒருகாரியத்தைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் எவனுக்குத் தான் கருத்தா என்கிற எண்ணமானது இல்லையோ, எவனுடைய புத்தியானது விஷயங்களில் பற்றுகிறதில்லையோ, அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். எவனிடத்திலிருந்து ஜனம் (ஜனங்கள்) பயமடைகிறதில்லையோ, ஜனங்களிடத்திலிருந்து எவன் பயமடைகிறதில்லையோ, சந்தோஷம் கோபம் பயம் இவைகளைவிட்டிருக்கிறவனெவனோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். சகல்மானவிஷயங்களிலும் வியவகரித்துக்கொண்டிருந்தாலும் பிறருடையவைகளில்போல (பிறருடைய வஸ்துக்களில் தனக்கு பற்றில்லாததுபோல) சீதளனும் (சாந்தனும்) பூர்ணமான ஆத்மாவாயும் (ஒருவித குறைவுமற்றவனாயும்) இருக்கிறவனெவனோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். ஓ முனியே! எப்போது சித்தத்திலுள்ள சகல காமங்களையும் தள்ளிவிட்டு சகலத்திற்கும் ஆத்மாவாயிருக்கிற என்னிடத்தில் திருப்தியுள்ளவனா யிருக்கிறானோ அப்போ தவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். சித்தத்தினுடைய சகல வியாபாரமு மற்ற சின்மாத்திரமே யாகிய பரமபாவனமான (மகாசுத்தமான) பதத்தில் (ஸ்தானத்தில் அல்லது இடத்தில்) எவன் கலங்காத மனதுடையவனாக இளைப்பாறுகிறானோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். எவனுடைய சித்தத்தில் இது ஜகத், நான், அவன், இவன், வாஸ்தவமல்லாத காணப்படுகிற வஸ்துக்கள் (என்றபேதம்) உதையமாகிறதில்லையோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறான். ஸ்திரமாயும் மகத்தாயும் பூர்ணமாயும் விஷயமற்றதாயுமிருக்கிற சத்தாகிய பிர்ம்மத்தினிடத்தில் ஆசாரியன் சாஸ்திரம் இந்தமார்க்கமாக (இவர்கள் உபதேசித்தவழியாய்) சீக்கிரமாகப் பிரவேசித்து அதில் ஸ்திரமாகவிரு. சிவனே குரு, சிவனே தேவன், சிவனே வேதம், சிவனே பிரபு, சிவனே நான், சிவனே சகலமும், சிவனைக்காட்டிலும் வேறொன்றுமில்லை. தீரனாகிய பிராம்மணன் அவனை (அந்தச்சிவனை) அறிந்து ஞானத்தை யடையவேண்டும். வெகு சப்தங்களை உச்சரிக்கவேண்டியதில்லை. அது (அப்படி உச்சரித்தல்) வாக்குக்கு வருத்தமே. சுகர்முக்தர். வாமதேவர்முக்தர். அவர்களைத் தவிர முக்தியடைந்தவர்களில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத் தவிர முக்திக்கு வேறேமார்க்கமில்லை என்பது தாத்பரியம்). இந்த லோகத்தில் சுகமார்க்கத்தை எந்தத் தைரியசாலிகள் அநுசரிக்கிறார்களோ அவர்கள்சத்தியோ (உடனே என்றால், இந்தத்தேகம் போன

உடனே) முக்தர்களாகிறூர்கள். இந்த லோகத்தில் வாமதேவமார்க்கத்தை யெப்போது மனுசரிக்கிறவர்கள் மறுபடி மறுபடி பிறப்பையடைந்து சத்துவத்தோடுகூடின யோகமார்க்கங்களினுலேயும் சாங்கிய (ஞான) ங்களினுலேயும் கருமங்களினுலேயும் கிரம முக்தர்களாகிறூர்கள். சுகமார்க்கம் வாமதேவமார்க்கம்என இரண்டு மார்க்கங்கள் தேவனு லேற்படுத்தப்பட்டன. சுகமார்க்கமானது பக்ஷிமார்க்கம் (குறித்தவிடத்திற்குப் பக்ஷிகள்பறந்து போவதுபோல் இந்தத் தேகம் போனஉடனே முக்தியடைவது) என்றும், வாமதேவ மார்க்கமானது எறும்புமார்க்கம் (குறித்தவிடத்திற்கு எறும்பு போகவேண்டுமானுல் கிரமக்கிரமமாய் ஊர்ந்து போகிறதுபோல் இந்தத் தேகத்தைவிட்டு பிறகு இதைவிட உத்தமமான ஜன்மமடைந்து அதிலிருந்து பின்னும் உத்தமமான ஜன்மமடைந்து இப்படியே பலஜன்மங்களை அடைந்து கடைசியில் பிரும்மலோகம் சென்று பிரும்மாவுடன் முக்தி அடைவது) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. விதிவாக்கியங்களினுலேயாவது நிஷேதவாக்கியங்களினுலேயாவது மகாவாக்கிய விசாரத்தினுலேயாவது சாங்கியயோக சமாதியினுலேயாவது அசம்பிரஞ்ஞாஸமாதியினுலேயாவது தன் ஆத்மசுவரூபத்தை யறிந்து நிர்மலமானவர்கள் சுகமார்க்கத்தினுலே பரமபதத்தை (மோக்ஷத்தை) அடைகிறூர்கள். யமம்முதலிய ஆசனங்களினுலே யுண்டாகிற ஆயாச மாகிய அடாப்பியாசத்தினுலெ (அடயோக அப்பியாசத்தினுலே) அடிக்கடி அநேக தடைகளினு லுண்டான அணிமாதி (சித்தி) களுக் குட்பட்டவனுய் நல்லபலனை யடையாமல் மறுபடி நல்லகுலத்திற் பிறந்து முந்திய (ஜன்மத்தின்) வாசனையினுலேயே மறுபடி யோகாப்பியாசம் செய்து அநேகஜன்ம அப்பியாசத்தினுல் வாமதேவ மார்க்கத்தினுலே அந்த விஷ்ணுவினுடைய பரமபதமாகிய முக்தியை யடைகிறுன். பிர்ம்மப் பிராப்தியைக் கொடுக்கத்தக்கவும் மங்களகரமானவும் இந்த இரண்டுமார்க்கங்களிருக்கின்றன. இவைகளில் ஒன்று சத்தியோ முக்தியையும் மற்றொன்று கிரமமுக்தியையும் கொடுக்கத்தக்கது.

(சகலமும்) பிர்ம்மமென்று பார்க்கிறவனுக்கு மோகமேது? துக்கமேது? எவனுடைய புத்தியானது அநுபவத்தை முடிவாயுடையதாய் (பிர்ம்ம) தத்துவத்தில் பிரவிருத்தித்திருக்கிறதோ அவனுடைய திருஷ்டியிற் பட்டவர்களெல்லோரும் சகல பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறூர்கள். பிர்ம்மவித்தானவனுடைய திருஷ்டியிற்பட்ட, ஆகாசத்திலும் பூமியிலும் சஞ்சரிக்கப்பட்ட சகலமானவர்களும் அநேககோடி ஜன்மங்களில் செய்தபாபங்களிலிருந்து உடனே விடுபடுகிறூர்கள்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

---

## ரு-வது. அத்தியாயம்.

பகவானை ரிபுவை நிதாகர் யோகாப்பியாச விதியைச் சொல்லும்படி கேட்டார், அப்படியே அவர் சொன்னார். தேகமானது பஞ்சபூதாத்ம சுவரூபம். ஐந்து மண்டலங்களால் *நிறைப்பப்பட்டிருக்கிறது. காடின்னியம் (கெட்டியா யிருக்குந்தன்மை) ஒன்றான பூமியைச் சார்ந்தது. திரவாகிருதி (கசிவுள்ள பாகம்) எதுவோ அது ஜலம். பிரகாசிக்கிறது (தான்) தேஜஸ் (அக்கினிபாகம்). சஞ்சரிக்கிறது வாயுலக்ஷணம். சத்துவத்தினா லெங்கும் வியாபித்திருக்கிறது ஆகாசம். இவை யெல்லாம் யோகத்தை யிச்சிக்கிறவனா லறியத்தக்கது. இந்தத் தேகத்திலே வாயுமண்டலத்தினுடைய மோதுதலினாலே இராப்பகல் இருபத்து ஓராயிரத்து அறுநூறு (௨௧௬௦௦) சுவாசம் (உண்டாகிறது). பிரதிவி மண்டலம் குறைந்தால் தேகத்தை யுடையவர்களுடைய தேகத்தில் மடிப்புக ளுண்டாகின்றன. ஜலபாகம் குறைந்தால் கிரமமாய் நரையுண்டாகிறது. தேஜஸ் குறைந்தால் பசியும் காந்தியும் குறைகிறது. வாயுபாகம் குறைந்தால் எப்போதும் நடுக்கலுண்டாகிறது. ஆகாசபாகம் குறைந்தால் ஜீவித்திருக்கிறதேயில்லை. எந்தக் (பூதங்கள் குறைந்த) காரணத்தினாலே பூதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற பிராணனானது, இளைப்பார இடமில்லாமலிருக்கையில் பக்ஷி ஆகாசத்தில் கிளம்புவதுபோல, மேலே கிளம்பிப் போகிறதோ அந்தக்காரணத்தினாலே அதுவே உட்டியாணமாகிறது. அந்தவிஷயத்தில் ஒரு பெந்தம் (கட்டு அல்லது தடை) சொல்லப்படுகிறது. உட்டியாண பெந்தமானது மிருத்துவாகிற யானைக்குச் சிம்மமாகிறது. அதினுடைய அனுபவமானது தேகத்திலிருந்துதான். அந்த பெந்தமும் சரீரத்திலிருந்துதான். சரீரத்தி[illegible] அதைபெந்திப்பது துஷ்கரம். (பிரயாசை). அக்கினிவ[illegible]றி [illegible]ந்தால் மிகவும் வேதனையுண்டாகிறது. பசியுள்ளவனாலேயும் ம[illegible]ஜலபாதை யுள்ளவனாலேயும் (உட்டியாண பெந்தம்) செய்யத் தகுந்ததல்ல. ஹிதமாயும் மிதமாயு மிருக்கிற (ஆகாரத்தை) கொஞ்சங் கொஞ்சமாய் அநேக தடவை உண்ணவேண்டியது. மிருது, மத்தியமம், மந்திரம் இவைகளிலே (இந்தக் கால[illegible]களிலே) முறையே மந்திரயோக லயயோக அடயோகங்கள் செய்யவேண்டியது. லயமந்திர அடயோகங்கள் அஷ்டாங்கத்துடன் கூடியது. யமநியம ஆசன பிராணயாம பிரத்தியாஹார தாரணைத்தியான சமாதியென எட்டுவிதங்கள். (அவைகளில்) யமம் பத்துவிதம். அவையாவன—பிறருக்குத் துன்பம் செய்யாமை, சத்தியம், களவாமை, பிரும்மசரியம், தயை, நேர்மை, பொறுமை, தைரியம், மிதமாயுண்ணல், சுத்தம் (தேகசுத்தம் மனச்சுத்தம்) நியமம் பத்துவிதம். அவையாவன—தபஸ், சந்தோஷம், ஆஸ்திக்[illegible] (சுவாமி

* ஐந்துமண்டலங்களாவன—மூலாதார, சுவாதிஷ்டான, மணிபூரக, அனாகத, விசுத்திகளே.

ஒருவருண்டென்னும் நம்பிக்கை யல்லது, வேதத்தில் நம்பிக்கை), தானம், ஈசுவரபூஜை, சித்தாந்த சிரவணம் (தான்கொண்டிருக்கும் மதவிஷயமாய் தன் குருவினால் செய்யப்பட்டிருக்கிற கிரந்தத்தைக் கேழ்ப்பது), இலச்சை, நற்புத்தி, ஜபம், விருதம். சக்கிரம் முதலான பதினொரு ஆசனங்களிருக்கின்றன. (அவையாவன)—சக்கிரம், பதுமாசனம், கூர்மம், மயூரம், குக்குடம், வீராசனம், சுவஸ்திகம், பத்திரம், சிம்மாசனம், முக்த்தாசனம், கோமுகம், என்று யோகமறிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. இடதுகணுக்காலை வலது துடையின்பேரிலும் வலது கணுக்காலை இடது துடையின்பேரிலும் வைத்துக்கொண்டு நேரான தேகத்தை யுடையவனா யிருப்பது சக்கிராசனமாகிறது. பூரகம், கும்பகம், ரேசகம், அப்படியே மறுபடி பூரகம் (முதலானது) செய்யப்படுகிறது. அந்தந்த நாடி மூலமாய்ச் செய்யப்படுகிற பிராணயாமம் நாடியென்று சொல்லப்படுகிறது. சகல ஜந்துக்களுடைய தேகமானது தொண்ணூற்றாறு அங்குலமுள்ளதாக விருக்கிறது. அதின் மத்தியில் அபானஸ்தானத்திற்கு இரண்டங்குலத்திற்குமேலும், மேட்டிரத்திற்கு இரண்டங்குலத்திற்குக் கீழும், மத்தியப் பிரதேசமென்று * சொல்லப்படுகிறது. மேட்டிரத்திற்கு ஒன்பதங்குலத்திற்குமேல் நாலங்குலம் நீளமும், நாலங்குல அகலமும் உள்ளதாக அண்டம் (முட்டைவடிவு) போல விருத்தமாயிருக்கிறது கந்தமென்று சொல்லப்படுகிறது. அது கொழுப்பு, ஊன், எலும்பு, உதிரம், இவைகளால் சூழப்பட்டிருக்கிறது. அவ்விடத்திலேயே பனிரண்டு ஆரமுள்ளநாடிச் சக்கரம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. எதினாலிந்த சரீரம் தரிக்கப்பட்டிருக்கிறதோ அந்தக் குண்டலீ அவ்விடத்திலிருக்கிறது. அந்தக் குண்டலீயானது சுழும்னையினுடைய பிரம்மரந்திரத்தை முகத்தினால் மறைத்துக்கொண்டிருக்கிறது. சுழும்னையினுடைய (பக்கத்தில்) அலம்புஸாவும் இந்தக்குகூர்நாடியும் வசிக்கின்றன. அதற்கடுத்த விரண்டாரங்களில் வாருணை, யசஸ்விநீ, இவைகளிருக்கின்றன. சுழும்னையின் தெக்ஷிண ஆரத்தில் கிரமமாய் பிங்கலையிருக்கிறது. அதற்குப்பிறகு இரண்டு ஆரங்களில் பூஷா, பயஸ்விநீ, இரண்டிருக்கின்றன. சுழும்னையின் மேற்கு ஆரத்தில் சரஸ்வதி நாடியிருக்கிறது. அதற்குப்பிறகு இரண்டு ஆரங்களில் சங்கிநீ, காந்தாரி யிருக்கின்றன. சுழும்னைக்கு வடக்கே இடா என்கிற திருக்கிறது. அதற்கடுத்து ஹஸ்தி ஜிஹ்வாயிருக்கிறது. அதற்கு அடுத்து விசுவோதராவிருக்கிறது. இந்த ஆரங்களிலே பிரதக்ஷிணக் கிரமமாய் நாடிகள் பனிரண்டு வாயுக்களைச் சுமந்துகொண்டிருக்கின்றன. நாடிகள் வஸ்திரங்கள் † போலிருக்கின்றன. அவைகள்

* இந்தமத்தியப் பிரதேசத்திற்கு மூலாதாரமென்று பெயர்.

† நூல்கள் குருக்கும் நெடுக்குமாயிருக்கிற வஸ்திரம்போல.

பலவருணங்க ளுடையனவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. வஸ்திரத்தின் மத்தியபாகம் நாபீசக்கரமெனப் படுகிறது. ஜ்வலந்தி, நாதரூபிணீ, பரரந்திரா, சுழும்னு, இந்தநான்கும் இரத்தின பூரிதங்களாயிருக்கின்றன. இவைகள் நாதா தாரங்களென்று சொல்லப்படுகின்றன. பிர்ம்மரந்திரத்தினுடைய மத்தியபாகமானது குண்டலீயினால் அடிக்கடி மறைக்கப்படுகிறது. இந்தமாதிரி இந்த நாடிகளில் பத்து வாயுக்கள் சஞ்சரிக்கின்றன. இந்தப்படி நாடிகளின் மார்க்கத்தையும் வாயுக்களின் மார்க்கத்தையும் விவேகியானவன் கழுத்து, தலை, தேகம் இவைகளைச் சமமாய் வைத்துக்கொண்டும் வாயை மூடிக்கொண்டும் அசையாமல் மூக்குநுனியிலும் ஹிருதயமத்தியிலும் பிந்துமத்தியிலும் துரீயகத்தை (ஆத்மாவை),த் தியானம்செய்து அதிலிருந் துண்டாகிற அமிருதத்தைச் சமாதானமான சித்தமுடையவனாகவிருந்து நேத்திரங்களால் பார்க்கவேண்டியது. அபானத்தை மூடிக்கொண்டு வாயுவை மேல்கிளப்பி பிரணவத்தினாலே மேலேயெழுப்பி ஸ்ரீபீஜத்தினால் நிவர்த்திக்கவேண்டியது. தன்னுடைய ஆத்மாவை ஸ்ரீயாக தியானம் செய்யவேண்டியது. பிறகு அமிருதத்தினால் நனைக்கப் பட்டதாகத் தியானிக்கவேண்டியது (என்றால், ஆநந்தானுபவத்தை யடையவேண்டியதென்று கருத்துக்கொள்ளலாம்)இதுகாலவஞ்சனம். எந்தச்சாதனத்தினால் மனதில் சிந்திக்கிறகாரியம் மனதினாலேயே சித்தியாகிறதோ அப்பேர்ப்பட்டது இந்தக்காலவஞ்சனம். சகலத்திலு மிது முக்கியமானது. ஜலத்தில் அக்கினி சுவலிக்கும், அக்கினிசுவாலையில் கிளைகளும் துளிர்களு முண்டாகின்றன. ஜகத்தைக்குறித்துச் சொன்னவார்த்தைகளும் செய்தகாரியங்களும் வீணாகாது. மார்க்கத்தில் பிந்துவைத்தடுத்து அக்கினியை ஜலத்தில் சுவலிக்கச்செய்து, அந்த ஜலத்தை வற்றச் செய்தால் காயம் திருடமாகிறது. ஹடயோனிகளை ஓரேகாலத்தில் சுருக்கிக்கொள்ளுகிறான். அபானனைமேல் நோக்கச்செய்து இத்துடன் சமானனைச் சேர்க்கவேண்டியது. தன் ஆத்மாவைச் சிவனாகத் தியானித்துப் பிறகு அமிருதத்தினால் நனைக்கப்பட்டதாகத் தியானிக்கவேண்டியது. ஒவ்வொரு ஆரபாகத்தினுடைய மத்தியில் பெலத்தை ஆரம்பிக்க வேண்டியது. பிராணபான சேர்க்கையினாலே மேலேபோகப் பார்க்கவேண்டியது. இந்தச் சிரேஷ்டமான யோகமானது தேகத்தில் சித்திமார்க்கத்தைப் பிரகாசப்படுத்துகிறது. ஜலத்திலிருக்கிற அணையானது பிரவாகத்திற்குத் தடையாயிருப்பதுபோல (சரீரத்தையடைந்திருக்கிற பிரதி பிம்பனாகிய ஜீவனுக்குத் தேகத்தை சர்வவியாபகத்திற்குத் தடையாக அறியவேண்டியது). சரீரத்தின் சாயையை அறியவேண்டியது. இந்தப் பெந்தமானது எல்லா நாடிகளுக்கும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பெந்தத்தினுடைய பிரசாதத்தினால் தேவதை பிரத்தியக்ஷமாகிறது. இந்த சதுஷ்பத பெந்தமானது மூன்று

மார்க்கங்களைத் தடுக்கிறது. சித்தர்கள் எதினால் சித்தியைப் பெற்றார்களோ அந்த ஒருமார்க்கத்தைப் பிரகாசிப்பிக்கிறது. பிராணனுடனே கூட உதானனைச் சீக்கிரமாக மேல்நோக்கச்செய்தால் இந்தப் பெந்தமானது சகல நாடிகளையும் தடுத்துக்கொண்டு மேலேபோகிறது. இது சம்புட யோகமென்றும் மூலபெந்தமென்றும் சொல்லப் படுகிறது. இந்த ஒரு அப்பியாச யோகத்தினாலேயே மூன்றுபெந்தமும் சித்திக்கிறது. இடைவிடாமல் இராப்பகலாவது அல்லது எப்போதெப்போது அனுகூலப்படுகிறதோ அந்த ஜாமத்திலாவது, செய்யும் அப்பியாசத்தினால் வாயுசுவாதீனப்பட்டதாக ஆகும். வாயுசுவாதீனமானால் தேகத்தில் அக்கினியானது நாள்தோறும் விருத்தியாகும். அக்கினிவிருத்தியானால் அன்னாதிகள் சுகமாக ஜீரணமாகும். அன்னம் சரியாய் ஜீரணமானால் இரஸவிருத்தியாகிறது. இரஸவிருத்தியானால் தாதுவிருத்தியாகிறது. தாதுவிருத்தியினாலே சரீரத்தில் ஞானவிருத்தி யாகிறது. அநேககோடி ஜன்மங்களில் சேர்க்கப்பட்ட சகல பாபங்களும் எரிக்கப்பட்டுப் போகிறது. குதத்திற்கும் மேட்டிரத்திற்கும் மத்தியில் முக்கோணமான மூலாதார மிருக்கிறது. அதானது குண்டலீஎன்கிறபராசக்தி எவ்விடத்திலிருக்கிறதோ அந்த பிந்துரூபமான சிவனுடைய ஸ்தானத்தை பிரகாசிப்பிவிக்கிறது. அந்த ஸ்தானத்திலிருந்து வாயுவுண்டாகிறது. அந்தஸ்தானத்திலிருந்து அக்கினி விருத்தியடைகிறது. அந்தஸ்தானத்திலிருந்து பிந்து உற்பத்தியாகிறது. நாதம் விருத்தியடைகிறது. அந்தஸ்தானத்திலிருந்து (ஹம்ஸ) அம்சனுற்பத்தியாகிறான். அந்தஸ்தானத் திலிருந்து மனது உற்பத்தியாகிறது. மூலாதாரம் முதலான * ஆறுசக்கரங்கள் சக்திஸ் தானமென்று சொல்லப்படுகின்றன. கழுத்துமுதல் தலையுச்சிவரையில் சம்புவினுடைய ஸ்தானமென்று சொல்லப்படுகிறது. நாடிகளுக்கு ஆசிரயம்தேகம். பிராணனுக்கு நாடிகள்ஆசிரயம். ஜீவனுக்கிருப்பிடம் பிராணன். ஜீவன் ஹம்ஸனுக்கு ஆசிரயன். ஹம்ஸன் சக்திக்கிருப்பிடமாயும் சராசர ஜகத்தாயுமிருக்கிறான். விகற்பமற்றவனாயும் தெளிவான மனதுடையவனாயு மிருந்துகொண்டு பிராணாயாமத்தை அப்பியாசம் செய்யவேண்டியது. செம்மையாய் மூன்று பெந்தங்களையும் அனுஷ்டிக்கிறவனுங்கூட லக்ஷியலக்ஷண காரணமாயிருக்கிற அறியத்தகுந்த வஸ்துவை சத்தியத்தோடு கூடின மனதை யுடையவனாய் எப்போதும் அறிய முயலவேண்டியது: இரேசகம் பூரகமிரண்டையும் கும்பகத்தில் நிறுத்த வேண்டியது. காணப்படுகிறதாகவும் லக்ஷிய வஸ்துவாகவுமிருக்கிற பிரம்மத்தினிடத்தில்தான் ஆசிருதனாக விருக்கவேண்டியது. வெளிவிஷயங்களெல்லாம் ரேசகமென்று சொல்லப்படுகிறது.

* ஆறுசக்கரங்களாவன—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை.

சாஸ்திரவிக்கியானம் பூரகமென்றும் சாஸ்திர விக்கியானத்தை தனக்
குள்ளேயே யடக்குவது கும்பகமென்றும் சொல்லப்படுகிறது. இப்
படி அப்பியாசஞ் செய்கிற சித்தமுடையவனானல் அவன் முக்தனே.
இதில் சந்தேகமில்லை. கும்பகத்தினால் எப்போதும் ஏற்றி கும்பகத்
தினாலேயே நிறப்பவேண்டும். கும்பகத்தி னாலேதான் கும்பகத்தை
ஸ்திரப்படுத்த வேண்டும். அதற்குள் பரமசிவமிருக்கிறது. இப்படிப்
பட்ட அவஸ்தையில் அசையாமலிருக்கிற வாயுவை, கண்ட முத்திரை
யினாலே கலத்துவிடவேண்டும். வாயுவினுடைய கெதியைத் தடுத்து
பூரக கும்பகங்களை அப்பியாசத்திற்குக் கொண்டுவந்து இரண்டு கை
களையும் இரண்டு தா[illegible]களையும் பூமியில் சமமாயூன்றி மூன்று வேதக
சம்பந்தத்தினாலே வாயுவினால் சதுஷ்பீடத்தைத் தட்ட வேண்டும்.
வாயுவின் முகத்[illegible]லிருக்கிற பிறகோடிகளினாலே மகாமேருவை தட்ட
வேண்டும். இ[illegible]ண்டபுடத்தை இழுத்து காற்றானது பிரகாசிக்கிறது.
அமிருதத்தின் பொருட்டு சந்திரசூரிய அக்கினிகளுடைய சேர்க்கை
யை யறியவேண்டியது. மேருஸ்தானம் அசைவதினால் மேருவின்
நடுவிலிருக்கிற தேவதைகள் சஞ்சரிக்கிறார்கள். முதலில் இவனுடைய
பிரும்மகிரந்தியிலிருந்து சீக்கிரமாக ஓருதுவார முண்டாகிறது. பிறகு
இவன் பிரும்மகிரந்தியைப் பிளந்து பிறகு விஷ்ணுகிரந்தியைப் பிளக்
கிறான். பிறகு ருத்திரகிரந்தியைப் பிளந்து பிறகு அப்படியே மோக
மலத்தைப் போக்கடித்தும் அநேக ஜன்ம ஸம்ஸ்காரத்தினாலேயும்
குருதேவதைகளுடைய பிரசாதத்தினாலேயும் யோகாப்பியாசத்தி
னாலேயும் அந்தயோகிக்கு (வெயம்) வேதமுண்டாகிறது. இடைபிங்
களைகளின் மத்தியிலிருக்கிறசுழும் னநா[illegible]மண்டலத்தில் முத்திரா
பெந்த மென்கிற விசேஷத்தினால் வாயுவை மேல்நோக்கச் செய்யவே
ண்டியது. பிரணவத்தைக்குறிக்கி உச்சரிப்பது பாபங்களைப் போக்
கடிக்கிறது. தீர்க்கமாயுச்சரிப்பது மோக்ஷத்தைக்கொடுக்கிறது. ஆப்
பியாயன சுவரத்திலாவது புலுதசுவரத்திலாவது உச்சரிப்பதும் மோ
க்ஷத்தைக் கொடுக்கிறது. இந்த மூன்றுவித உச்சரிப்பினால் இடை
விடாத எண்ணெய் தாரைபோலவும் தீர்க்கமான கண்டாநாதம் போ
லவும் வாக்குக் [illegible]டடாததாயிருக்கிற அந்தப் பிரணவத்தின் நுனியை
எவன் அறிகிறானோ அவன்தான் வேதத்தையறிந்தவன். குறுகலான
சுவரம் பிந்துவிலிருக்கிறது, தீர்க்கசுவரம் பிர்ம்மரொந் திரத்திலிருக்
கிறது. புலுதம் துவாதசா[illegible]த்தி லிருக்கிறது. மந்திரசித்தியின்பொ
ருட்டு மந்திரத்தை ஜபிக்கவேண்டியது. இந்தப் பிரணவமானது சகல
தடைகளையும் நிவருத்திக்கும். சகலபாபங்களையும் போக்கடிக்கும்.
இதற்கு ஆரம்பம், கடம், புரிச்சயம், நிஷ்பத்தி என்று நான்குபூமிகள்
சொல்லப்பட் டிருக்கின்றன. கரணத்திரயங்களினால் (மனோ வாக்கு
[illegible]) செய்யப்பட்ட வெளிக் கருமத்தைவிட்டு எப்போதுமான

சிககருமம் செய்கிருனே அது ஆரம்பமென்று சொல்லப்படுகிறது. வாயுவானது மேற்புறத்தில் துவாரம் செய்துகொண்டு ரொம்பி எங்கே ஸ்திரமாயிருக்கிறதோ அது கடமென்கிற பூமிகையென்று வித்வான்கஎால் சொல்லப்படுகிறது. சரீரம் அசையாமலிருக்கையில் ஜீவனேடு கூடியதுமல்ல ஜீவனேடு கூடாததுமல்லாத எந்த அவஸ்தையில் வாயுவானது உறுதியாய் ஆகாசத்திலிருக்கிறதோ அது (பரிச்சயம்) பிரசயபூமிகை. எந்த அவஸ்தையில் ஆத்மாவினுல் சிருஷ்டி லயங்கஞண்டாகிறதோ, எந்தத்தெசையில் ஜீவன் முக்தியடைந்த யோகியானவன் பிரயாசையன்றி யோகத்தைச் செய்கிருனே அது நிஷ்பத்தி பூமிகை என்று சொல்லப்படுகிறது. *

இந்த உபநிஷத்தை அத்தியயனம் செய்கிறவன் அக்கினியைப் போல் பரிசுத்தனுகிருன். வாயுவைப்போல் பரிசுத்தனுகிருன். சுவர்ணத்தைத் திருடின பாபத்திலிருந்து விடுபடுகிருன். சுராபான பாபத்திலிருந்து விடுபடுகிருன். ஜீவன் முக்தனுகிருன். இது இருக்குனல் சொல்லப்பட்டிருக்கிறது. (அதாவது) 𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌂 𑌸𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍂𑌰𑌯𑌃 । 𑌦𑌿𑌵𑍀𑌵 𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑌾𑌤𑌤𑌮𑍍 । 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌸𑍋 𑌵𑌿𑌪𑌨𑍍𑌯𑌵𑍋 𑌜𑌾𑌗𑍃𑌵𑌾𑌂𑌸𑌃 𑌸𑌮𑌿𑌨𑍍𑌧𑌤𑍇 । 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌯𑌤𑍍𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌪𑌨𑌿𑌷𑌤𑍍.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

வராகோபநிஷத் முற்றிற்று.

𑌓𑌂 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍.

---

* இந்த ஐந்தாவது அத்தியாயம் யோகசம்பந்தமானது. அதிலுள்ள விஷயங்களைக் குருமுகமாயறிந்து யோகாப்பியாசம் செய்தவன்தான் விளக்கிக் காட்டக்கூடும். மற்றவன் சக்தனல்லவாகையால் உள்ளவாக்கியங்களுக்கு மொழிபெயர்ப்பு மட்டும் செய்யப்பட்டிருக்கிறது.

ஹரி: ஓம்.

பரப்பிர்ம்மணே நம:.

யஜுர்வேதத்தில்

# கலி ஸந்தாரணோபநிஷத்.

(ஸஹநாவவது-சாந்தி:)

நாரதரானவர் துவாபரயுகக் கடைசியில் பிரும்மாவிடம் சென்று
ஓ பகவானே! நான் பூமியில் சஞ்சரித்துக் கலியை எவ்விதமாய்த் தாண்
டப்போகிறேனென்று கேட்டார். பிரும்மா (அடியில்கண்ட விதமாய்)
சொன்னார்.

நன்றாய்க்கேட்டாய், எதினால் கலியாகிய சமுசாரத்தைத் தாண்டு
வாயோ அப்படிப்பட்ட ஸர்வச்ருதி ரஹஸியமாயும் கோப்பியமாயும்
(இரஹஸியமாய் வைக்கத்தகுந்தது) இருக்கிறதைக் கேள். ஆதிபுருஷ
னாகிய பகவானான நாராயணனுடைய நாமத்தை உச்சரித்தமாத்திரத்தி
னாலே கலிதோஷத்தை உதரிப்போட்டவனாகிறான். மறுபடி நாரதர்
பிர்ம்மாவை அந்த நாமமெது? என்று கேட்டார். அதற்கு ஹிரண்
௧ ௨ ௩ ௪ ௫
ணியகருப்பர் (பிரும்மா) சொன்னார். ஹரே ராம ஹரே ராம ராம
௬ ௭ ௮ ௯ ௧௦ ௧௧ ௧௨ ௧௩
ராம ஹரே ஹரே, ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண
௧௪ ௧௫ ௧௬
கிருஷ்ண ஹரே ஹரே. இந்தப் பதினாறு நாமங்கள் கலிதோஷத்தை
நாசம் செய்யும். இதைக்காட்டிலும் சிரேஷ்டமான உபாயம் சகல
வேதங்களிலேயும் காணப்படவில்லை. (இந்தப் பதினாறு நாமங்கள்)
பதினாறுகலைகளால் சூழப்பட்டிருக்கிற ஜீவனுடைய ஆவரணத்தை
(ஞானத்திற்கு மறைவாயிருக்கிற அவித்தையை) நாசம் செய்கிறது.
அதற்குப்பிறகு, மேகம் போனபிறகு சூரியமண்டலம் பிரகாசமாவது
போல, பரப் பிர்ம்மம் பிரகாசிக்கிறது.

மறுபடி நாரதர் ஓ பகவானே! இதற்கு (இந்த நாமோச்சாரணத்
திற்கு) என்னவிதி? என்று கேட்டார். இதற்கு விதியில்லை என்று
சொன்னார். சுசியா யிருந்தாலும் அசுசியாயிருந்தாலும் எப்போதும்

ஜபிக்கிறவன் பிரும்மாவினுடைய * சாலோக்கிய † சாமீப்பிய ‡ சாரூப்பிய § சாயுஜ்ஜிய ¶ த்தை யடைகிறான்.

இந்தப் பதினாறு நாமங்களடங்கிய மந்திரத்தை மூன்றரைக் கோடி $ (௩௫,000,000) எப்போது ஜபம் செய்கிறானோ அப்போது பிர்ம்மஹத்தியை (தோஷத்தை) தாண்டுகிறான். சுவர்ணம் திருடின தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். விருஷளீ, (சூத்ரஸ்திரீ அல்லது நீசஸ்திரீ) சம்பந்ததோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். பிதுர்க்கள், தேவதைகள், மனிதர்கள் இவர்களுக்குச்செய்த அபகார தோஷத்திலிருந்து பரிசுத்தனாகிறான். சகல கருமங்களையும்விட்ட பாபத்திலிருந்து உடனே பரிசுத்தத்தை யடைகிறான். உடனே பெந்தத்திலிருந்து விடுபடுகிறான், உடனே பெந்தத்திலிருந்து விடப்படுகிறான் என்று உபநிஷத்.

கலி ஸந்தாரணோபநிஷத் முற்றிற்று.

---

* பிரும்மாவினுடைய என்றதினால், பிரும்ம விஷ்ணு ருத்திரர்களைச் சொன்னதாகக் கொள்ளவேண்டியது.

† அவருடைய லோகத்தி லிருக்கும்படியான ரூபத்தை யடைகிறது.

‡ அவருடைய சமீபத்தி லிருக்கிறது.

§ அவருடைய ரூபத்தைப்போல் ரூபமடைகிறது.

¶ அவருடைய ரூபத்தில் கலந்துபோகிறது, அல்லது அவருடைய கட்புள்ளவனாகசமீபத்திலிருக்கிறது.

$ நாள் ஒன்றுக்கு லக்ஷம் மந்திரம் ஜபமானால் கொஞ்சநாள் குறைவாய் ஒரு வருஷத்திலும், நாள் ஒன்றுக்குப் பதினாயிரமானால் கொஞ்சகாலம் குறைய பத்து வருஷத்திலும், நாள் ஒன்றுக்கு ஆயிரமானால் கொஞ்சகாலம் குறைய நூறுவருஷத்திலும் இக்கணக்காகும்.

96

ஸ்ரீராமாயபரப்பிர்ம்மணேநம:

ஹரி: ஓம்.

சுக்கிலயஜுர்வேதத்தில்

# முக்திகோபநிஷத்.

(பூர்ணமத: சாந்தி:.)

## முதலாவது அத்தியாயம்.

ஓம். இரம்மியமான (இன்பத்தைத் தரத்தக்க) அயோத்தியா நகரத்தில் இரத்தின மண்டபத்தில் ஸீதா, பரத, லக்ஷ்மண, சத்துருக்கினன் முதலியவர்களோடு கூடிக்கொண் டிருக்கிறவராயும், ஸநகர் முதலான முனிக்கூட்டங்களாலேயும், வசிஷ்டர் முதலானவர்க ளாலேயும், சுகர் முதலானவர்களாலேயும், அந்நியர்களான பாகவதர் (பகவத் பக்தியுள்ளவர்) களாலேயும் இரவும் பகலும் ஸ்தோத்திரம் செய்யப்படுகிறவராயும், புத்தியினுடைய அநேக விகாரங்களுக்குச் சாக்ஷியாயும், விகாரமற்றவராயும், சுவரூபத் தியானத்திலேயே யிருக்கிறவராயுமுள்ள, ஹரியாகிய ராமனை, ஸமாதியை நிவர்த்தித்தகாலத்தில், அநுமாரானவர் பக்தியினாலேயும் சுசுரூஷையினாலேயும் ஸ்தோத்திரம்செய்து கேட்டதாவது. ஓ இராமா! நீர், சச்சிதாநந்த சுவரூபியான பரமாத்துமாவாக விருக்கிறீர். ஓ! இரகுகுல சிரேஷ்டா! உம்மை யடிக்கடி நமஸ்காரம் செய்கிறேன். ஓ! இராமா! முக்தியின்பொருட்டு உம்முடைய ரூபத்தை உள்ளபடி யறிய விரும்புகிறேன். எதினால் வருத்தமன்றி சமுசார பெந்தத்திலிருந்து நான் விடுபடுவேனோ, எதினால் நான் மோக்ஷமடைவேனோ, அதைக் கிருபைசெய்து சொல்லும் (என்பதே).

(ஸ்ரீ ராமசந்திரர் சொல்லுகிறார்).

ஓ! தோள்வலி யுடையவனே! நன்றாய்க் கேட்டாய். உண்மையானதைச் சொல்லுகிறேன் கேள்.

வேதாந்தத்தில் நான் செவ்வையாக நிலைபெற் றிருக்கிறேன்.

வேதாந்தத்தை (உபநிஷத்துக்களை) நன்றாய் ஆசிரயம் செய் (என்றார்). (அநுமார் மறுபடி கேட்கிறார்).

ஓ! இரகு சிரேஷ்டா! வேதாந்தங்களாவை? அவைகள் எங்கெயிருக்கின்றன? சொல்லும் (என்றார்).

(ஸ்ரீராமர் சொல்லுகிறார்).

ஓ! அநுமானே! வேதாந்தத்தின் சுவரூபத்தைச் சரியாய்ச் சொல்லுகிறேன் கேள். விஷ்ணுவாகிய என்னுடைய மூச்சுக்காற்றுகளாகிற வேதங்கள் விஸ்தாரமா யுண்டாயின. எள்ளில் எண்ணெய்போல வேதத்தில் வேதாந்தமானது நிலைபெற் றிருக்கிறது.

(அநுமார் மறுபடி கேட்கிறார்).

ஓ! இராமா! வேதங்களும் அவைகளின் சாகைகளும் எத்தினை விதங்கள்?

ஓ! இராகவா! அவைகளில் உபநிஷத்துக்க ளெவ்வையா யிருக்கின்றன வென்பதை கிருபைசெய்து உள்ளபடி சொல்லும் (என்று கேட்டார்).

(ஸ்ரீராமர் சொல்லுகிறார்).

ருக்வேதாதி விபாகங்களினாலே வேதங்கள் நான்கென சொல்லப் பட்டிருக்கின்றன: அவைகளின் சாகைகள் அநேகம். உபநிஷத்துகளும் அநேகம். ருக்வேதத்தில் (உக) இருபத்தியொரு சாகைகள். ஓ வாயு குமாரா! யஜுர்வேதத்திற்கு (க0கூ) நூற்றியொன்பது சாகைகள். ஓ! சத்துருக்களைத் தபிப்பிக்கிறவனே! சாமவேதத்திற்கு (க000) ஆயிரம் சாகைகள். ஓ! வானரோத்தமா! அதர்வணவேதத்தில் (ருo) ஐம்பது சாகைகள். ஒவ்வொரு சாகைக்கு ஒவ்வொரு உபநிஷத்துண்டு. அவைகளில் ஒரு ருக்கை எவன் என்னிடத்தில் பக்தியுடையவனாய்ப் படிக்கிறானோ அவன் முனிகளுக்குக்கூட அரிதான என்னுடைய சாயுஜ்ஜியத்தை (என்னுடைய ரூபத்தில் கலந்து போகிறதை அல்லது மகா நண்பனாக சமீபத்திலிருக்கிறதை) அடைகிறான்.

(அநுமார் கேட்கிறார்).

ஓ! இராமா! சில முனிசிரேஷ்டர்கள் முக்தி யொன்றேயென்று சொன்னார்கள். சிலர் உம்முடைய நாம பஜனத்தினாலேயும், காசியில் தாரகோபதேசத்தினாலேயும், பின்னும் சிலர் சாங்கிய யோகத்தினாலேயும், பக்தி யோகத்தினாலேயும், பின்னும் சில மகரிஷிகள் வேதாந்த வாக்கியார்த்த விசாரத்தினாலேயும் முக்தியென்று சொல்லுகிறார்கள்.

முக்தியானது ஸாலோக்கியாதி (ஸாலொக்கிய, ஸாமீப்பிய, ஸாரூப்பிய, ஸாயுஜ்ஜிய) விபாகத்தினாலே நாலுவிதமென்று சொல்லப் பட்டிருக்கிறது.

ஸ்ரீ இராமர் சொல்லுகிறார்.

பரமார்த்த சுவரூபமாயுள்ளது கைவல்லிய முக்தி யொன்றே.

ஓ! கபியே! துராசார முள்ளவனு யிருந்தாலும் என்னுடைய நாம பஜனத்தினலெ ஸாலோக்கிய முக்தியை யடைகிறுன். மற்ற லோகங்களை அடைகிறதில்லை. காசியிலெ பிர்ம்மநாளமென்கிற இந்த விடத்தில் மரணமடைந்தால் என்னுடைய தாரகத்தை யடைகிருன் (என்னுடைய தாரக மந்திரத்தை உபதேசம் பெற்றவனுகிருன்). அந்த மனிதன் புனர்ஜன்ம மற்றதாகிய முக்தியை யடைகிருன். காசியில் எந்தவிடத்தில் மரணமடைந்தாலும் மகேசுவரரானவர் அவனுடைய வலதுகாதில் என்னுடைய தாரகமந்திரத்தை உபதேசிக்கிருர். அப்படிப்பட்டவன் சகல பாபங்களிலிருந்தும் விடுபட்டவனுய் என்னுடைய சாரூப்பியத்தை யடைகிருன். அதுதான் சாலோக்கிய சாரூப்பிய முக்தி யென்று சொல்லப் படுகிறது. ச்தாசார முள்ளவனுகவே யிருந்து வேறேயிடத்தில் புத்தியை செலுத்தாம லிருக்கிற, துவிஜனனவன் (பிர்ம்மக்ஷத்திரிய வைசியன்) சர்வ சுவரூபியாயிருக்கிற என்னிடத்தில் பாவனை (புத்தியைவைத்தல்) செய்தால் என்னுடைய சாமீப்பியத்தை யடைகிருன். இதுவே ஸாலோக்கிய, சாரூப்பிய, சாமீப்பிய முக்தியென்று சொல்லப் படுகிறது.

துவிஜனனவன் குருவினல் உபதேசிக்கப்பட்ட மார்க்கப்படிக்கு நாசமற்றதாகிய என்னுடைய ரூபத்தை * பிரமர கீடஞாயம்போல் செவ்வையாய்த் தியானம் செய்துகொண்டிருக்கிறவன் என்னுடைய சாயுஜ்ஜியத்தை யடைகிருன். இதுவே பிர்ம்மாநந்தகரமாயும் மங்களகரமாயு மிருக்கிற சாயுஜ்ஜிய முக்தியாகிறது. நாலுவிதமான முக்தி எதுவோ அது என்னுடைய உபாசனையினு லுண்டாகிறது. இந்தக் கைவல்லிய முக்தியானது, எந்த உபாயத்தினல் கிடைக்கிறதென்றுலோ, முமுக்ஷுக்களுக்கு (மோக்ஷமடைய விருப்ப முள்ளவர்களுக்கு) முக்தியின்பொருட்டு மாண்டூக்கிய உபநிஷத் ஒன்றே போதும் (அதில் சொல்லப்பட்டிருக்கிற மார்க்க மொன்றேபோதும்). அப்படியும் ஞானம் சித்திக்காவிட்டால் (௧௦) தசோபநிஷத்தைப் படி. சீக்கிரம் ஞானத்தை அடைந்து என்னுடைய ஸ்தானத்தை யடைவாய். ஓ! அஞ்சனை குமாரா! அதினலும் ஞானம் உறுதிப்படாவிட்டால் (௩௨) முப்பத்திரண் டுபநிஷத்துக்களை நன்றுய் அப்பியாசம்செய். (பெந்தத்திலிருந்து) நிவர்த்தி அடைவாய். விதேகமுக்தியிலிச்சை யுண்டானல் (௧௦அ) நூற்றெட் டுபநிஷத்துக்களைப் பாராயணம் செய்.

(அந்தந்த உபநிஷத்துக்குள்ள) சாந்தியுடன் அவைகளுடைய கிரமத்தைச் சரியாய்ச் சொல்லுகிறேன்கேள்.

* வண்டினல் கொட்டப்படும் புழுவானது எப்போதும் தன்னை ஹிம்சிக்கிற வண்டையே நினைத்துக்கொண் டிருக்கிறதினல் அந்தப் புழு வண்டுருபத்தை யடைவதுபோல்.

* ஈசகேன கடப்பிரசன முண்டமாண்டூக்கிய தித்திரி: ஐதரேயஞ்சசாந்தோக்கியம் பிரஹதாரண்ணியகம் (தயா) ததா, பிரும்ம கைவல்லிய ஜாபால சுவேதாசு வோஹம்ஸ ஆருணி:, கருப்போ நாராயணோஹம்ஸோ பிந்துநாத சிரச்சிகா, மைத்திராயணீ கௌஷிதகீபிரகஜ்ஜாபாலதாபநீ, காலாக்கினி ருத்திரமைத்திரேயீ ஸுபால க்ஷுரி மந்திரிகா, சர்வசாரம் நிராலம்பம் ரஹசியம் வச்சிர சூசிகம், தேஜோநாதத்தியான வித்தியா யோக தத்துவாத்ம போதகம், பரிவிராட் திருசிகீஸீதா சூடா நிர்வாண மண்டலம், தெக்ஷிணாசரபம் ஸ்கந்தம் மகா நாராயணாத்துவயம், ரஹஸியம் ராமதபநம் வாஸுதேவஞ்சமுத்கலம், சாண்டில்லியம் பைங்களம் பிக்ஷுமகச் சாரீரகம்சிகா, துரீயாதீத ஸந்நியாச பரிவிராஜாக்ஷமாலிகா, அவ்வியக்தைகாக்ஷரம் பூர்ண சூரியாக்ஷியத்தியாத்தும குண்டிகா, ஸாவித்திரியாத்துமா பாசுபதம் பரம்பிர்ம்மாவ தூதகம், திருபுராதப்னம் தேவீ திருபுராகடபாவனா, ஹிருதயம் குண்டலீபஸ்ம ருத்திராக்ஷ கெணதரிசனம், தாரஸாரமகாவாக்கிய பஞ்சப்பிரும்மாக்கினி ஹோத்திரகம், கோபால தாபநம் கிருஷ்ணம் யாக்கிய வல்க்கியம் வராககம், சாட்டியாயநீ ஹயக்கிரீவம் தெத்தாத்திரேயஞ்ச காருடம், கலிஜாபாலி ஸௌபாக்கியம் ரஹஸிய ருசமுக்திகா, இப்படி (உள்ள உபநிஷத்) நூற்றெட்டும் பாவனாத்திரயத்தை (சமுசயம், அஸம்பாவனா=வீண் எண்ணம், விபரீத பாவனா=ஒன்றை மற்றொன்றாய் கிரகிப்பது) நாசம் செய்யத்தக்கதாயும் புருஷர்களுக்கு ஞான வைராக்கியத்தைக் கொடுக்கத்தக்கதாயும் மூன்று வாசனைகளை (சாஸ்திரவாசனை லோகவாசனை தேகவாசனை) நாசம் செய்யத்தக்கதாயு மிருக்கிறது. இந்த நூற்றெட்டு உபநிஷத்துக்களை விதிக்கப்பட்டிருக்கிற படிக்கு முன்னும் பின்னும் சாந்தியுடன் கூடி வேதவித்தியா விருதங்களில் பரிசிரமப் பட்டிருக்கிற குருவினுடைய வாக்கினாலே தாங்கள் கிரகித்துக்கொண்டு, எந்த துவிஜோத்தமர்கள் படிக்கிறார்களோ, அவர்கள் பிராரப்பதம் (இந்ததேகம்) நாசமாகிற வரையில் ஜீவன் முக்தர்களாயிருக்கிறார்கள். பின்பு காலவசத்தினால் பிராரப்தம் நாசமானால் என்னுடைய விதேக முக்தியை யடைகிறார்கள் (பிர்ம்மமாகிறார்கள்). இதில் சமுசயமில்லை. ஓ வாயுபுத்திரா! சகலமான உபநிஷத்துக்களுக் குள்ளே சாரமானதாயும், ஒருதடவை கேட்கிறதினாலே, சகலபாபக் கூட்டங்களையும் நாசம்செய்கிறதாயு மிருக்கிற, இந்தநூற்றெட் டுபநிஷத்துக்கள் சிஷியனாகிய உன் பொருட்டு என்னா லுபதேசிக்கப் பட்டன. என்னா லுபதேசிக்கப்பட்டதும் இரஹஸிய மானதுமாகிய நூற்றெட் டுபநிஷத்தாகிற சாஸ்திரமானது, ஞானத்தோடாவது, அக்ஞானத்தோடாவது, படிக்கிறவர்களுக்குப் பெந்தத்தை நிவிருத்திசெய்யும். யாசிக்கிறவனுடைய இஷ்ட பூர்த்

* இந்த உபநிஷத்துக்களுடைய பெயர்முதலிய விவரம் இத்துடன் சேர்க்கப் பட்டிருக்கிற அட்டவணையில் பார்க்க.

திக்காக இராஜியத்தைக் கொடுக்கலாம் திரவியத்தை கொடுக்கலாம் இந்த நூற்றெட் டுபநிஷத்துகளை (மாத்திரம்) நாஸ்திகன் நன்றியற்றவன் துராசாரத்தில் முழுகி யிருப்பவன் என்னுடைய பக்தி யில்லாதவன் அசத் சாஸ்திரமாகிய குகையில் விழுந்து மோகிக்கிறவன் இவர்களில் ஒருவனுக்கும் கொடுக்கக்கூடாது. குருபக்தி யில்லாதவனுக்கு ஒருபோதும் கொடுக்கக்கூடாது. ஓ மாருதே! கைங்கரியம் செய்கிற சிஷியனுக்கும் ஹிதனான புத்திரனுக்கும் என்னிடத்தில் பக்தி யுள்ளவனுக்கும் நல்ல ஆசாரமுள்ளவனுக்கும் நல்ல குலத்தில் பிறந்தவனுக்கும் நல்ல புத்தியுடையவனுக்கும் செவ்வையாய்ப் பரிக்ஷைசெய்து கொடுக்கவேண்டியது. இந்த நூற்றெட் டுபநிஷத்துக்களை எவன் (சிரத்தையோடு) படித்தாலும், கேட்டாலும், அவன் என்னை அடைகிறான், சந்தேகமில்லை. இது ருக்கிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

"வித்தையானவள் (சரசுவதி) பிராம்மணனிடம் சென்று என்னை "சம்ரக்ஷணைசெய், உனக்கு நிதியாயிருக்கிறேன். பொறுமை யுள்ளவ "னுக்கும், நேர்மார்க்கத்தி லில்லாதவனுக்கும், துன்மார்க்கனுக்கும், "என்னைச் சொல்லாதே. (சொல்லாமலிருந்தால்) வீரியமுள்ளவளா "யிருப்பேன். விஷ்ணு சம்மந்தமான இந்த ஆத்ம நிஷ்டாவித்தை "யை அதிகமாய்க் கேட்டவனையும், ஜாக்கிருதை யுள்ளவனையும், புத்தி "சாலியாயும், பிரும்மசாரி விருதத்தில் பூர்ண மடைந்தவனையும், விரு "ப்பமுள்ளவனையு மிருக்கிறவன் பொருட்டு செவ்வையாய் அவனைப் "பரீக்ஷித்துக் கொடுக்கவேண்டியது."

ஸ்ரீ ராமசந்திரரை அநுமார் ருக்குவேதம் முதலான விபாகத்தினாலே தனித் தனியாய் சாந்தியைச் சொல்லுமென்று கேட்டார். அந்த ஸ்ரீராமர் சொல்லுகிறார். ஐத்திரேய கௌஷீதகி நாதபிந்து ஆத்மபோத நிர்வாண முத்கல அக்ஷமாலிகா திருபுரா ஸௌபாக்கிய பெகுவிருச ஆகிய ருக்குவேதத்திலுள்ள இந்த பத் துபநிஷத்துக்களுக்கும் "வாங்மேமனஸி" * என்ற சாந்தி.

ஈசாவாஸிய பிரகதாரண்ணியகஜாபாலஹம்ஸ பரமஹம்ஸஸுபாலமந்திரிகா நிராலம்ப திருசிகி பிராம்மணமண்டல பிராம்மணாத்துவயதாரக பைங்கள்பிக்ஷு துரீயாதீதாத்தி யாத்தும தாரஸாரயாக்கிய வல்க்கிய சாட்டியாயநீ முக்திகா ஆகிய சுக்கில யஜுர்வேதத்திலுள்ள இந்தப் பத்தொன்பது உபநிஷத்துக்களுக்கும் "பூர்ணமத" என்றசாந்தி.

கடவல்லி தைத்திரீயக பிர்ம்ம கைவல்லிய சுவெதாசுவதர கருப்பநாராயண அமிருதபிந்து அமிருதநாத காலாக்கினி ருத்திர க்ஷுரிகா சர்வஸார சுகரஹஸியதேஜோபிந்துத் தியானபிந்து பிரும்ம வித்தி

* இந்த சாந்தியையும் பின்னால் வரப்போகிற மற்ற நான்கு சாந்திகளையும் இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிற அட்டவணையில் காண்க.

யாயோகதத்துவ தக்ஷிணமூர்த்தி ஸ்கந்தசாரீரக யோகசிகா ஏகாக்ஷர அக்ஷி அவதூத கடருத்திரஹிருதயயோக குண்டலினீ பஞ்சபிர்ம்ம பிராணுக்கினிஹோத்திர வராககலி ஸந்தாரண ஸரஸ்வதீ ரஹஸிய ஆகிய கிருஷ்ண யஜுர்வேதத்திலுள்ள இந்த முப்பத்திரண்டு உப நிஷத்களுக்கும் "ஸஹநாவவது" என்ற சாந்தி.

கேநசாந்தோக்கிய ஆருணி மைத்திராயணி மைத்திரேயீ வச்சிர சூசிகயோக சூடாமணிவாஸு தேவமகத்ஸந்நியாஸ அவ்வியக்தகுண் டிகா ஸாவித்திரீருத்தி ராக்ஷஜாபாலதரிசன ஜாபாலி ஆகிய ஸாமவே தத்திலுள்ள பதினாறு உபநிஷத்துக்களுக்கும் "ஆப்பியாயந்து" என்ற சாந்தி.

பிரசினமுண்டக மாண்டூக்கிய அதர்வசிர அதர்வசிகா பிரஹத் ஜாபல நரசிம்மதாபநீ நாரதபரிவிராஜக ஸீதாசரபமஹா நாராயண ராமரஹஸிய ராமதாபநீ, சாண்டில்லிய பரமஹம்ஸ பரிவிராஜக அன் னபூரண சூரிய ஆத்ம பாசுபத பரபிர்ம்ம திருபுராதாபன தேவீபாவ னுபஸ்ம ஜாபால கெணபதி மகாவாக்கிய கோபாலதபன கிருஷ்ண ஹயக்கிரீவ தத்தாத்திரேய காருட ஆகிய அதர்வண வேதத்திலுள்ள முப்பத்தோருபநிஷத்துக்களுக்கும் "பத்திரம் கர்ணேபி:" என்ற சாந்தி.

முமுக்ஷுக்களான புருஷர்கள் சாதன சதுஷ்டய சம்பன்னர்களா ய்க் காணிக்கை வஸ்துக்களைக் கையிலுடையவர்களாய், சிரத்தை யுள் ளவனும் நல்லகுலத்தில் பிறந்தவனும் வேதாத்தியயனம் செய் தவனும் சாஸ்திரவிசுவாச முள்ளவனும் நல்ல குணமுடையவனு யும் கபடமிடல்லாதவனும் சகல பூதங்களிடத்திலும் ஹிதமுள்ளவ னும் தயாசமுத்திரமாயிருக்கிற சத்குருவை அடைந்து நூற்றி யெட்டுபநிஷத்துக்களை விதிப்படிக்கு அப்பியாசம்செய்து சிரவண மனன நிதித்தியாசங்களை எப்போதும் செய்து பிராரப்த க்ஷயத்தி னால் மூன்றுதேகத்திலுடைய நாசத்தையடைந்து, உபாதிநீங்கிய கடாகாசம்போல பரிபூர்ணத்துவத்தை யடைகிறார்கள். அதே விதே கமுக்தி. அதே கைவல்லியமுக்தி: ஆகையினாலே பிரும்மலோகத்தி லிருக்கிறவர்களும்கூட பிரும்மாவின் வாக்கினால் வேதாந்தம் கேட் பது முதலியவைகளினால், அவருடன் கைவல்லியத்தை யடைகிறார் கள். ஆகையால் எல்லாருக்கும் ஞானமார்க்கத்தினாலே * கைவல்லிய முக்தி. கருமம், சாங்கியம், யோகம், இந்த உபாஸநாதிகளாலல்ல என்று உபநிஷத்.

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

---

* "ஞானமாத்திரத்தினாலே" என்று கல்கத்தா பாடம்.

## உ - வது. அத்தியாயம்.

பின்பு அநுமார் ஸ்ரீராமசந்திரனை நோக்கி இந்த (க) ஜீவன் முக்தி யாவதென்ன? (உ) விதேக முக்தியாவதென்ன? இந்த விஷயத்தில் (ங) பிரமாணமெது? (ச) அந்தச்சித்தி (முடிவு அல்லது நிறைவேறு தல்) எப்படி? (ரு) அந்தச் சித்தியினுல் என்னப் பிரயோஜனம்? என்று கேட்டார்.

அந்த ஸ்ரீராமர் சொல்லுகிறார்.

(க) கருத்திருத்துவ போக்த்திருத்துவ (நான் செய்கிறேன் நான் அனுபவிக்கிறேன் என்கிற அபிமானம்) சுகதுக்கம் முதலிய இலக்ஷண முள்ள சித்தத்தினுடைய தருமமானது துக்கரூபமாயிருக்கிறபடியினு லே (அது) மனுஷியனுக்கு பெந்தமாகிறது. அதினுடைய அடக்குதல் தான் ஜீவன்முக்தி.

(உ) உபாதி நிவிருத்தியான (மறைவுபோய்விட்ட) கடாகாசம் போல பிராரப்தம் நசிக்கிறதினுலே விதேகமுக்தி.

(ங) ஜீவன்முக்தி விதேகமுக்தி இவ்வகளுக்கு நூற்றெட் டுப நிஷத்துக்கள்தான் பிரமாணம்.

(ச-ரு.) கருத்திருத்துவாதி துக்கநிவிருத்தி மூலமாய் நித்தியான ந்தப் பிராப்திதான் பிரயோஜனம். அதானது புருஷனுடைய பிரயத் தினத்தினுலே சாதிக்கப்படவேண்டியது. புத்திரகாமேஷ்டி (புத்திர னுண்டாக வேண்டுமென்று செய்யும்யாகம்) யினுல் புத்திரனையும், வியாபாரம் முதலியவைகளினுல் திரவியத்தையும், ஜோதிஷ்டோ மத்தினுல் சுவர்க்கத்தையு மடைவது எப்படியோ அப்படி புருஷப் பிரயத்தினத்தினுல் சாத்தியமானதா[illegible] வேதாந்த சிரவணுதிகளா லுண்டான சமாதியினுலே ஜீவன்முக்தி [illegible]லிய லாபமுண்டாகிறது. அந்த லாபமான[illegible] [illegible]கலமான * வாசனை [illegible]சமடைவதினுலுண்டாக வேண்டும். இந்தவிஷயத்தில் சுலோகங்[illegible] [illegible]ருக்கின்றன. "புருஷப் பிரயத்தினமானது சாஸ்திரத்தை அதிக்கிர[illegible]த்த (மீறின)து, சாஸ் திரானு சாரமானது, என இரண்டு வகைப்[illegible]ம். சாஸ்திரத்தை மீறி னது அநர்த்தத்தின் பொருட்டும் சாஸ்திரத்தை யனுசரித்தது பர மார்த்த (உத்தமமான பிரயோஜன)த்தின்பொருட்டு மாகிறது". இந்த ஜந்துக்களுக்கு லோகவாசனை சாஸ்திரவாசனை தேகவாசனை இவை களால் உண்மையான ஞானமுண்டாகிறதில்லை. வாசனையானது சுப வாசனை, அசுபவாசனை, என இரண்டுவகை. நீ (சுப) சுத்தவாசனையி னுல் நடத்தப்பட்டால் நீ அதினுலேயே கிரமமாய் சீக்கிரத்தில் என் னுடைய பதத்தை யடைவாய். அப்படியில்லாமல் பழமையான அசு

---

* வாசனை என்றுல் அபிமானம் அல்லது பற்றுதல்.

ால் தீபத்தைப்போல (எண்ணெய் அல்லது வர்த்தியில்லாத தீபம்
அணைந்து போவதுபோல) மனது அடங்கிப்போகிறது. வாசனையைத்
தள்ளி சின்மாத்திர சுவரூபியான என்னிடத்தில் வியாகுலமில்லாத
மனத்தை யுடையவனாகி யிருக்கிறவனெவனோ, அவன் சச்சிதானந்த சுவ
ரூபியான நானே. ஹிருதயத்தில் ஆசையற்றிருக்கிறவன் சமாதியை
யும் கருமத்தையும் செய்தாலும் செய்யாவிட்டாலும், உத்தமமான
சித்தத்தையுடைய அவன் முக்தனே. எவனுடைய மனதானது வா
சனையற்றதாக வாகிறதோ அவனுக்குத் தியானத்தினாலாவது ஜபத்
தினாலாவது கருமத்தை விட்டதினாலாவது கருமத்தைச் செய்வதினா
லாவது பிரயோஜனமில்லை. செவ்வையாய் வாசனையை விடுவதினா
லேயும் மௌனத்தினாலேயும் அன்றியில் உத்தமபதம் கிடைக்கமாட்
டாது. (மனது) வாசனையற்றிருந்தாலும் கண்முதலிய இந்திரியம் தன்
னுடைய விஷயத்தில் அப்பியாச காரணத்தினாலேயே வெளியில் பிர
விருத்திக்கிறது. பிரயத்தினமன்றியில் அடையப்பட்டிருக்கிற வஸ்துக்
களிலே கண்ணானது ஆசையன்றி எப்படி பிரவேசிக்கிறதோ, அப்படிப்
போல தைரியமுள்ள புத்தியுடையவன் காரியங்களில் ஆசையன்றி பிர
வேசிக்கிறான். ஓ! மாருதே. பதார்த்த (வஸ்து) ஞானத்தினாலே வெளி
ப்படுத்தப் பட்டதாயும் அதை (அந்தப் பதார்த்தத்தை) அநுசரித்ததாயு
ம் சித்தத்தினுடைய உற்பத்திக்குக் காரணமாயிருக்கிறதெதுவோ,
அது வாசனையென்று முனிகள் அறிகிறார்கள். மிகவும் சஞ்சலமான
சித்தமானது திடமாய் அப்பியாசம் செய்யப்பட்ட பதார்த்தங்க
ளுடைய பாவனையினாலே பிறப்பு, மூப்பு, மரணம், இவைகளுக்குக்
காரணமாகிறது. பீஜாங்குர நியாயத்தைப்போல (விதை முந்தியுண்
டாச்சுதா? செடி முந்தியுண்டாச்சுதா? என்று கேட்டால் விதையன்றி
செடியுமில்லை செடியன்றி விதையுமில்லையாகையால் இது முந்தினதெ
ன்று நிச்சயிக்கக் கூடாதது போல) வாசனையினுடைய அதீனத்தினால்
பிராண ஸ்பந்தமும் (பிராணனுடைய அசைவும்) அதினால் வாசனையும்
சித்தத்திற்கு விதையாயிருக்கிறது. சித்தமாகிற விருக்ஷத்திற்குப் பிரா
ணஸ்பந்தம், வாசனை, இவ்விரண்டு விதைகள். இவ்விரண்டிலொன்று
நசித்தால் இந்த இரண்டும் நசித்துப் போகிறது. (விஷயங்களில்) பற்
றுதலன்றி பிரவிருத்திக்கிறதினாலேயும் பிரபஞ்ச தோற்றமற்றுப் போ
வதினாலேயும் சரீரம் நசிக்கத்தக்கதென்று அறிகிறதினாலேயும் வாசனை
பிரவிருத்திக்கிறதில்லை. வாசனையைச் செவ்வையாய்த் தள்ளிவிடுவதி
னாலே சித்தமானது அசித்தமாகிறது. வாசனையற்றிருப்பதினாலே மன
மானது எப்போது நினைக்கிறதில்லையோ, அப்போது மனோபசமத்
தைக் (மிகவும் அடங்குதலை) கொடுக்கிற மனதில்லாமை யுண்டாகிறது.
எதுவரையில் விவேகமில்லாத மனத்தை யுடையவனாயும் பரமாத்
மாவை அறியாதவனாயு மிருக்கிறாயோ, அதுவரையில் குருவினாலே

யும் சாஸ்திரப் பிரமாணங்களினாலேயும் நிச்சயிக்கப்பட்டிருக்கிற விதியை யனுசரி. பிறகு எரிக்கப்பட்ட பாபமுடையவனாயும் வஸ்து தத்துவத்தை யறிந்தவனாயும் பெந்தமற்றவனாயு மிருக்கிற உன்னாலே இந்தச் சுபமான வாசனைக்கூட்டமுங்கூட தள்ளிவிடத்தக்கது. சித்த நாசமானது ஸ்வரூப அரூபமென இருவகை. ஸ்வரூபநாசமென்பது * ஜீவன் முக்தனிடத்திலிருக்கிறது. அரூபநாச மென்பது † விதேக முக்தனிடத்திலிருக்கிறது. ஓ! வாயுபுத்திரா! அந்தச்சித்தத்தினுடைய நாசத்தை ஆதரவோடு இப்போது கேள். மைத்திரீ (சிநேகம்) முதலிய குணத்தோடுகூடியச் சித்தமானது எப்போது சாந்தியை யடைகிறதோ (பிரவிருத்தியற்றிருக்கிற நிலைமை), அப்போது சித்தநாசமென்று சொல்லப்படுகிறது. சந்தேகமில்லை. ஜீவன் முக்தனுடைய அந்த மனதானது மறுபடி ஜன்மத்திற்கு ஏதுவாகிறதில்லை. இந்த மனதினுடைய ஸ்வரூப நாசமானது ஜீவன் முக்தனுக்கிருக்கிறது. மனதினுடைய அரூப நாசமானது விதேகமுக்தியை யடைந்ததாக விருக்கிறது. ஆயிரம் முளைகள் கிளைகள் துளிர்கள் காய்கனிகள் இவைகளையுடைய இந்தச் சமுசார விருக்ஷத்திற்கு இந்தமனதே மூலமாயிருக்கிறது (ஆணிவேராயிருக்கிறது). அதை சங்கற்பம் (எண்ணம் அல்லது விருப்பம்) என்றே எண்ணுகிறேன். சீக்கிரமாக சமுசார விருக்ஷம் வறண்டுபோகும்படியாய் சங்கற்பத்தின் உபசம (அடங்குதல்) த்தினால் மூலத்தை (ஆணிவேரை) வறளச்செய். தன்னுடைய மனதை அடக்கிறதில் உபாயமொன்றே யுள்ளது. மனதுண்டாகிற போதே (மனது விருப்பமடைய துவங்கும்போதே) மனதை நாசம்செய்கிறது (தான்). (அதுதான்) மகா சிரேய ஸாகிறது. ஞானிக்கு மனது நாசமடைகிறது. அக்ஞானிக்குமனது விலங்காக விருக்கிறதல்லவா? ஓரேதத்துவமென்கிற உறுதியான அப்பியாசத்தினால் மனதானது எதுவரையில் ஜயிக்கப்படவில்லையோ, அதுவரையில் இராக்காலத்தில் வேதாளம்போல் ஹிருதயத்தில் வாசனை சுத்திக்கொண்டிருக்கிறது. சித்தத்தினுடைய கொடுமை க்ஷீணித்த (குறைந்த) வனாயும் இந்திரியங்களாகிற சத்துருக்களை ஜயித்தவனாயு மிருக்கிறவனுடைய பேர்களாசனைகளானவை, பனிகாலத்திய தாமரைப்புஷ்பம்போல க்ஷீணித்துப்போகின்றன. கையைக் கையோடு பிசைந்தும் பல்லோடு பல்லைக்கடித்துத் தூள்செய்தும் அவயவங்களை அவயவங்களாலே துவையம் செய்தும் முதலில் தன்மனதை ஜயிக்கவேண்

---

* இராஜோகுணம், தமோகுண மிரண்டுநசித்து சத்துவகுணம் மட்டும் மிஞ்சியிருக்கும் ஜீவன்முக்தி தெசை ஸ்வரூபநாசம்.

† விதேக முக்தனுக்கு லிங்கசரீரம் நாசமடையும்போது மிஞ்சியிருந்த சத்துவகுணமும் நசித்துப்போகிற படியால் அந்த விதேக கைவல்லிய தெசை அரூப நாசம்.

டியது. உட்கார்ந்து உட்கார்ந்து அடிக்கடி ஒன்றை சிந்திக்கிறவ
னாலே, சிந்திக்கப்படாதயுக்தி அன்றியில், மனதை ஜயிப்பது அசாத்
தியம். (எப்படிஎன்றால்) மதித்தயானை யானது அங்குசமன்றியில்
சுவாதீனமாகாததுபோல, (ஆத்மசுவரூபத்தை அறிகிறதாகிய) அத்தி
யாத்தும வித்தையினுடைய ஞானம், சத்துக்களுடைய சகவாசம்,
வாசனையைச் செவ்வையாய் விட்டுவிடுவது, சுவாஸத்தை யடக்குவது
(யோகம்), இவைகள் சித்தத்தை ஜயிக்கும் விஷயத்தில் பலமான
யுக்தி. இந்த யுக்திகளிருக்கையில் (இவைகளை விட்டுவிட்டு) பலாத்
கா்ரமாய் மனதை எவர்கள் அடக்கிறார்களோ, அவர்கள் தீபத்தை
எறிந்துவிட்டு இருட்டுவீட்டில் தேடுகிறார்கள் (அப்படித்தேடுகிறவர்
களுக் கொப்பாவா்ர்கள்). மனதினுடைய ஜயத்தைப் பலவந்தமாய்ச்
செய்கிறதற்கு எந்தமூடர்கள் எத்தனிக்கிறார்களோ, அவர்கள் தாம
ரைத்தண்டு(க்குள்ளிருக்கிற) நூல்களினால் மதயானையைக் கட்டுகிறார்
கள் (கட்டுகிறவர்களுக் கொப்பாவார்கள்). வளர்ச்சியான கொடிகளை
யுடைத்தாயிருக்கிற சித்தமாகிய விருக்ஷத்திற்கு இரண்டுவிதைகளிரு
க்கின்றன. ஒன்று பிராணனுடைய அசைவு. மற்றொன்று திருடமா
ன வாசனை (விஷயப்பற்றுதல்). எங்கும் நிறைந்த அந்த ஞானமோ
வென்றால், பிராணனுடைய அசைவினாலே அசைக்கப்படுகிறது (ஞா
னம் சிதறிப்போகிறது). எந்தச் சித்தத்தினுடைய ஒரேநிலையினாலே
சொல்லப்பட்டிருக்கிற ஞானமுண்டாகிறதோ அதற்குச் சாதனமான
த் தியானம் உபதேசிக்கப்படுகிறது (நான் இப்போது உனக்கு உபதே
சிக்கிறேன்). சகலமான விகாரத்தையும் (பிரபஞ்சத்தையும்) உற்பத்
திக்கெதிரடிக் கிரமமாய் * ஒடுக்கி மிஞ்சினதெதுவோ, அந்த சின்மாத்
திரமா யிருக்கிற சதாநந்தத்தை சிந்தி. சுவாமிநலம்மதெ = † பூரகம்
செய்யப்பட்டு ‡ ரேசகம்செய்யாம லிருக்கிறவனாயில் யோகிகளினால்

* பிரபஞ்ச வுற்பத்திக் கிரமத்தில் கடைசியில் உற்பத்தியானவைகளாகிய பஞ்சீ
கிருதஸ்தூல பூதங்களாகிய தேஹேந்திரிய அந்தக் காரணங்களை அபஞ்சீகிருத காரண
பூதங்களாகிய தன்மாத்திரைகளில் லயிக்கச்செய்து அந்த பஞ்சபூதங்களில் பூமியை
ஜலத்திலும் ஜலத்தை அக்கினியிலும் அக்கினியை வாயுவிலும் வாயுவை ஆகாசத்தி
லும் ஆகாசத்தை அகங்கார தத்துவத்திலும் அகங்கார தத்துவத்தை மகத்தத்து
வத்திலும் மகத்தத்துவத்தை மூல பிரகிருதியாகிய அவ்வியக்தத்திலும் அவ்விய
க்தத்தைப் புருஷனிலும் லயிக்கச் செய்கிறது. பைங்களோபநிஷத் ௩-வது அத்தி
யாயம்பார்க்க. உற்பத்திக் கிரமமானது மேற்சொல்லியபடி புருஷனிடத்திலிருந்து
அவ்வியக்தமும், அவ்வியக்தத்திலிருந்து மகத்தத்துவமும், மற்றவைகளும் இந்தக்
கிரமப்படியே யென்றறியத்தக்கது.

† ஒரு மூக்கினால் சுவாசத்தை உள்ளுக்கிழுப்பது பூரகம்.

‡ ஒரு மூக்கினால் இழுத்த சுவாசத்தை மற்றொரு மூக்கினால் வெளியில் விடுவது
ரேசகம்.

அனுபவிக்கப் படுகிறஸ்திதி * கும்பக அவஸ்தையென்றும் ரேசகம் செய்யப்பட்டபிறகு மறுபடி பூரகம் செய்கிறவனாயி லிருக்கும் ஸ்திதி வெளிகும்பகமென் றும் வித்வான்க ளறிகிறார்கள்.

அஹங்காரமற்று பிர்ம்மாகாரப் பிரவாஹமாயிருக்கிற மனோவிருத்தியானது தியானப் பியாசத்தினுடைய மேன்மையினால் ஸம்பிரக்ஞாத சமாதியாகவாகிறது. அடங்கியிருக்கிற விருத்தியையுடைய சித்தமானது பரமாநந்தத்தைப் பிரகாசிப்பிக்கிறபோது அஸம்பிரக்ஞாதசமாதியென்று பெயர். அது யோகிகளுக்குப் பிரியமானது. பிரகாசமில்லாமலும் மனதில்லாமலும் புத்தியில்லாமலும் சித்சுவரூபமாத்திரம் மிஞ்சியிருக்கிற (நிலை) தெதுவோ, அது அதத் வியாவிருத்தி சமாதியென்று முனிகளினால் பாவிக்கப்படுகிறது. மேலும் பூர்ணமாயும் கீழும் பூர்ணமாயும் மத்தியிலும் பூர்ணமாயும் மங்கள சுவரூபமாயு மிருக்கிறது. பரமார்த்தமான இந்தச் சமாதியானது சாக்ஷாத் விதிமுகமாயிருக்கிறது (சாஸ்திரோக்தமா யிருக்கிறது அல்லது, பிர்ம்மாவினுடைய வாக்கி லிருந்துவந்த உபதேசமாயிருக்கிறது). உறுதியான பாவனையினாலே முன்பின் விசாரணையன்றி வஸ்துக்களுடைய கிரகணம் (வஸ்துக்களில் விருப்பம்வைப்பது) எதுவோ அதுதான் வாசனை என்று சொல்லப்படுகிறது. ஓ! கபிசிரேஷ்டா! இதப்வாசனையன்றி தீவரமான வேகமாய்த் தன்னாலே எது பாவிக்கப்பட்டதோ, சீக்கிரமாய் அதாகவே யாகிறான். வாசனைக்குச் சுவாதீனமான புருஷனவன் அதற்குத்தகுந்த ரூபத்தையே யடைகிறான். எப்போது இந்தப் பிரபஞ்சத்தை சத்தாக பாவிக்கிறானோ, அப்போது மோகத்தை யடைகிறான். வாசனாவேக விசித்திரத்தினால் அந்த (வாசனை சம்பந்தமான) சுவரூபத்தை விடுகிறதில்லை. துர்திருஷ்டி யுள்ளவன் (தப்பான பார்வையுள்ளவனாகிய அக்ஞானி) மதம் கொண்டதினால் பிராந்தனா யிருக்கிறவனைப்போல சகலத்தையும் பார்க்கிறான். வாசனையானது சுத்தம், மலினம் என இருவகையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. மலினமானது பிறப்புக்குக் காரணமாயும், சுத்தமானது பிறப்பையொழிக்கிறதாகவு மாகிறது. மலின வாசனையானது அக்ஞானகட்டி சுவரூபமுடையதென்றும் மகா அகங்காரத்தை யுடையதென்றும் மறுபடி பிறப்பை யுண்டாக்கிறதென்றும் வித்வான்களாலே சொல்லப்பட்டிருக்கிறது. புனர்ஜன்ம முளையைத் தள்ளியிருக்கும் இருப்பானது வெகு வறுபட்ட விதைபோல் (முளைக்க கூடியதல்லாததுபோல்) வெகு சாஸ்திரகதையாகிய கந்தை (கந்தல்துணி) யை பின்னும் பின்னும் மெல்லுவதினால் (அநேக சாஸ்திரங்களைத் திருப்பித் திருப்பிப் படிப்பதினால்)என்ன பிரயோசனம்? ஓ! மாருதியே! உள்ளேயிருக்கிற ஜோதி

* ஒரு மூக்கினால் இழுத்த சுவாசத்தை உள்ளே சில யாமம் நிறுத்துவது கும்பகம்.

(ஜோதி சுவரூபமான ஆத்மா) யைப் பிரயத்தினத்தினல் தேடவேண்
டியது.

ஓ: கபிசார்தூலா! ஞானக் ஞானங்களைவிட்டு எவன் தானே பிர்ம்
மமென் றிருக்கிருனே, அவன் பிர்ம்மத்தை யறிந்தவனல்ல அவன்
பிர்ம்மமே. நாலு வேதங்களையும் அநேக சாஸ்திரங்களையும் அத்தி
யயநம்செய்தும் பிர்ம்மதத்துவத்தை யறியாதவன் கறிச்சுவையை யறி
யாத அகப்பை அல்லது கரண்டிக் கொப்பாவான். ஆகையினலே
மோகமாகிற * அசுசிவாசனையிலிருந்து எந்த மனிதன் விரக்தி யடை
யமாட்டானே அவனுக்கு விரக்தியுண்டாக வேறென்ன உபதேசிக்
கக் கூடும்? தேகமானது மிகவும் அசுத்தமுள்ளது. தேகத்தை யுடை
யவனே (ஆத்மா) மிகவும் பரிசுத்தமுள்ளவன். இவ்விரண்டினுடைய
பேதத்தை யறிந்து எதற்குச் சுத்தியை விதிக்கலாம்? வாசனபெந்தமே
பெந்தம். வாசனக்ஷயமே (நசித்தலே)மோக்ஷம். வாசனையைச் செவ்
வையாய்த்தள்ளி மோக்ஷம் வேண்டுமென்கிற இச்சையையும் விட்டுவி
டு. மனச்சம்பந்தமான வாசனையாகிய விஷயவாசனையை முந்தித் தள்
ளிவிட்டு மைத்திரீ—சிநேகம் முதலான பெயர்களையுடைய சுத்தமான
வாசனைகளைக் கிரகித்துக்கொள். அந்த வாசனைகளோடு வியவகரித்துக்
கொண் டிருந்தாலும் பிறகு அதுகளையும் தள்ளி உள்ளுக்குள்ளாகவே
சாந்தமாய்ப்போன ஆசை யுடையவனுய் சின்மாத்திர வாசனை யுள்ளவ
னுய் ஆகக்கடவாய். மனது புத்தி இவைகளுடன் கூடியிருப்பதையும்
(சின்மாத்திர வாசனையும்) விட்டு ஓ! மாருதே! மீந்திருக்கிற நீ என்
னிடத்தில் ஸ்திரமான சமாதி யுடையவனுக ஆவாய். சத்தமற்றதும்,
உணர்வற்றதும், உருவமற்றதும், இரஸமற்றதும், வாசனையற்றதும்,
நாசமற்றதும், எப்போது முள்ளதும், பெய[illegible]றதும், கோத்திரமற்ற
தும் எதுவோ அப்படிப்பட்ட, துக்கத்தை நாசம் செய்கிறதாகிய என்
னுடைய ரூபத்தை, ஓ! வாயுகுமாரா! எப்போதும் நீபஜீ.

ஞான சுவரூபமானதாயும் ஆகாசத்தை உவமையா யுடையதாயும்,
சிரேஷ்ட மானதாயும், எப்போதும் விளங்குகிறதாயும், பிறப்பற்ற
தாயும், ஒன்றானதாயும், நாசமற்றதாயும், பற்றற்றதாயும், எங்கு முள்
ளதாயு மிருக்கிற அத்துவய (பிர்ம்மம்) மெதுவோ அது நானே. சகல
மாயும் மோக்ஷ சுவரூபியாயு மிருக்கிறேன் ஓம். "நான் ஞான சுவரூபி
சுத்தன் விகாரமற்ற சுவரூபி சுவபாவமாய் யாதொரு விஷயமும்
எனக்கில்லை எதிரிலும் குருக்கிலும் மேலும் கீழும் எங்கும் பூர்ணமா
யிருக்கிற பிர்ம்மமே நான்" என்று எப்போதும் பாவனைசெய். "நான்
பிறப்பற்றவன். மரணமற்றவன் ஜரையற்றவன் மோக்ஷ சுவரூபி சுவயம்
பிரகாசன் எங்கும் வியாபித்தவன் நாசமற்றவன் காரண மில்லாதவன்

* தன் தேகமாகிற அசுசி வாசனையினலே என்று கல்க்த்தாபாடம்.

பிரபஞ்சத்தைக்கடந்த நிர்மலன் எப்பவும் திருப்தியுள்ளவன்'' என்று பாவனைசெய்.

தன்தேகம் காலத்திற்கு இரையானபோது ஜீவன் முக்தி தெசையைவிட்டு அசைவற்றிருக்கிற காற்றைப்போல விதேகமுக்தித்துவத்தை யடைகிறான். இது ருக்கினாலேயும் சொல்லப்பட் டிருக்கிறது. (அதாவது) ஆகாசத்தில் வியாபித்திருக்கிற கண்ணைப்போல (ஆகாசத்தில் காணப்படுகிற வஸ்துக்களைக் கண்ணானது தடையின்றி பார்க்கிறதுபோல) அந்த விஷ்ணுவினுடைய பரமபதத்தை ஞானிகளெப்போதும் பார்க்கிறார்கள். எப்போதும் ஞானக்கண்களையுடைய பிராம்மணர்கள் விஷ்ணுவினுடைய பரமபதமெதுவோ அதை யநேகவிதமாய் ஸ்தோத்திரம் செய்துக்கொண்டு பிரகாசப்படுத்துகிறார்கள். ஓம் சத்தியமென் றுபநிஷத். சத்தியமென் றுபநிஷத்.

உ-வது அத்தியாயம் முற்றிற்று.

---

முக்திகோபநிஷத் முற்றிற்று.

---

# அட்டவணை.

இதின் முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டப்பட்டிருக்கிற உபநிஷத்துக்களின் பெயரும் சாந்திகளும் அவைகள் இன்னின்ன வேதத்திற்குச் சேர்ந்தவை என்பதும் அடியில் காண்க.

உபநிஷத்துக்கள்.

க. வாஜஸநேய ஸம்ஹிதோபநிஷத் (ஈசாவாஸ்யோபநிஷத்).
உ. (ஸா) தலவகாரோபநிஷத் (கேநோபநிஷத்).
ங. (ய) கடோபநிஷத்.
ச. (அ) பிரசிநோபநிஷத்.
ரு. (அ) முண்டகோபநிஷத.
சு. (அ) மாண்டூக்கியோபநிஷத்.
எ. (ய) தைத்திரீயோபநிஷத்.
அ. (ரு) ஐதரேயோபநிஷத்.
கூ. (ஸா) சாந்தோக்கியோபநிஷத்.
கO. (சு, ய, கா) பிரஹதாரண்ணியகோபநிஷத்.
கக. (ய) பிர்ம்மோபநிஷத்.
கஉ. (ய) கைவல்லியோபநிஷத்
கங. (வா) ஜாபாலோபநிஷத்
கச. (ய) சுவேதாசுவதரோபநிஷத்.

கரு. (வா) ஹம்ஸோபநிஷத்.
கசு. (ஸா) ஆருணிகோபநிஷத்.
கஎ. (ய) கெருப்போபநிஷத்.
கஅ. (ய) நாராயணோபநிஷத்,
ககூ. (வா) பரமஹம்ஸோபநிஷத்.
உ0. (ய) அமிருதபிந்தூபநிஷத்.
உக. (ய) அமிருதநாதோபநிஷத்.
உஉ. (அ) அதர்வசிரோபநிஷத்.
உங. (அ) அதர்வசிகோபநிஷத்.
உச. (ஸா) மைத்திராயண்ணியுபநிஷத்.
உரு. (ரு) கௌஷீதப்பிராம்மணோபநிஷத்.
உசு. (அ) பிரகஜ்ஜாபாலோபநிஷத்.
உஎ. (அ) நரசிம்மதாபின்னியுபநிஷத்.
உஅ. (ய) காலாக்கினிருத்திரோபநிஷத்.
உகூ. (ஸா) மைத்திரேயோபநிஷத்.
ங0. (வா) ஸுபாலோபநிஷத்.
ஙக. (ய) க்ஷுரிகோபநிஷத்.
ஙஉ. (வா) மந்திரிகோபநிஷத்
ஙங. (ய) ஸர்வஸாரோபநிஷத்.
ஙச. (வா) நிராலம்போபநிஷத்.
ஙரு. (ய) சுகரஹஸியோபநிஷத்.
ஙசு. (ஸா) வஜ்ஜிரசூச்சியுபநிஷத்.
ஙஎ. (ய) தேஜோபிந்தூபநிஷத்.
ஙஅ. (ரு) நாதபிந்தூபநிஷத்.
ஙகூ. (ய) தியானபிந்தூபநிஷத்.
ச0. (ய) பிர்ம்மவித்தியோபநிஷத்.
சக. (ய) யோகதத்துவோபநிஷத்.
சஉ. (ரு) ஆத்மபோதோபநிஷத்.
சங. (அ) நாரதபரிவிராஜகோபநிஷத்.
சச. (வா) திருசிகிப்பிராம்மணோபநிஷத்.
சரு. (அ) ஸீதோபநிஷத்.
சசு. (ஸா) யோகசூடாமணியுபநிஷத்.
சஎ. (ரு) நிர்வாணோபநிஷத்.
சஅ. (சு,ய) மண்டலபிராம்மணோபநிஷத்.
சகூ. (ய) தெக்ஷிணாமூர்த்தியுபநிஷத்.
ரு0. (அ) சரபோபநிஷத்.
ருக. (ய) ஸ்கந்தோபநிஷத்.
ருஉ. (அ) திருபாத்விபூதிமஹாநாராயணோபநிஷத்.
ருங. (சு,ய) அத்துவயதாரகோபநிஷத்.

ருச. (அ) இராமரஹஸியோபநிஷத்.
ருரு. (அ) இராமதாபிநீயுபநிஷத்.
ருசு. (ஸா) வாசுதேவோபநிஷத்.
ருஎ. (ரு) முத்கலோபநிஷத்.
ருஅ. (அ) சாண்டில்லியோபநிஷத்.
ருகூ. (சு,ய) பைங்கலோபநிஷத்.
சுO. (சு,ய) பிக்ஷுகோபநிஷத்.
சுக. (ஸா) மஹோபநிஷத்.
சுஉ. (ய) சாரீரகோபநிஷத்.
சுங. (ய) யோகசிகோபநிஷத்.
சுச. (சு,ய) துரியாதீதஅவதூதஉபநிஷத்.
சுரு. (ஸா) ஸந்நியாஸோபநிஷத்.
சுசு. (அ) பரமஹம்ஸபரிவிராஜகோபநிஷத்.
சுஎ. (ரு) அக்ஷமாலிகோபநிஷத்.
சுஅ. (ஸா) அவ்வியக்தோபநிஷத்.
சுகூ. (ய) ஏகாக்ஷரோபநிஷத்.
எO. (அ) அந்நபூர்ணோபநிஷத்.
எக. (அ) சூரியோபநிஷத்.
எஉ. (ய) அக்ஷியுபநிஷத்.
எங. (வா) அத்தியாத்மோபநிஷத்.
எச. (ஸா) குண்டிகோபநிஷத்.
எரு. (ஸா) ஸாவித்திரியுபநிஷத்.
எசு. (அ) ஆத்மோபநிஷத்.
எஎ. (அ) பாசுபதபிர்ம்மோபநிஷத்.
எஅ. (அ) பரபிர்ம்மோபநிஷத்.
எகூ. (ய) அவதூதோபநிஷத்.
அO. (அ) திருபுராதாபிநியுபநிஷத்.
அக. (அ) தேவியுபநிஷத்.
அஉ. (ரு) திருபுரோபநிஷத்.
அங. (ய) கடோபநிஷத்.
அச. (அ) ஹா(பா)வநோபநிஷத்.
அரு. (ய) ருத்திரஹிருதயோபநிஷத்.
அசு. (ய) யோககுண்டலியுபநிஷத்.
அஎ. (அ) பஸ்மஜாபாலோபநிஷத்.
அஅ. (ஸா) ருத்திராக்ஷஜாபாலோபநிஷத்.
அகூ. (அ) கெணபத்தியுபநிஷத்.
கூO. (ஸா) தெரிசநோபநிஷத்.
கூக. (சு,ய) தாரஸாரோபநிஷத்.

(அ) மகாவாக்கியோபநிஷத்.
(ய) பஞ்சப்பிர்ம்மோபநிஷத்.
(ய) பிராணக்கினிஹோத்திரோபநிஷத்.
(அ) கோபாலதாபனோபநிஷத்.
(அ) கிருஷ்ணோபநிஷத்.
(சு,ய) யாக்கியவல்க்கியோபநிஷத்
(ய) வராஹோபநிஷத்.
(சு,ய) சாட்டியாயநீயோபநிஷத்.
(அ) ஹயக்கிரிவோபநிஷத்.
(அ) தெத்தாத்திரேயோபநிஷத்.
(அ) காருடோபநிஷத்.
(ய) கலிசந்தாரணோபநிஷத்.
(ஸா) ஜாபால்லியுபநிஷத்.
(ரு) ஸௌபாக்கியலக்ஷ்மியுபநிஷத்.
(ய) ஸரஸ்வதிரஹஸியோபநிஷத்.
(ரு) பஹ்விருசோபநிஷத்.
(சு,ய) முக்திகோபநிஷத்.

---

...ந்த உபநிஷத்துக்களின் பெயருக்கு முந்தியும் லக்கங்களுக்குப் ...ம் ( ) இந்த அடையாளமிட்டதற்குள் குறித்திருக்கும் ...ங்களின் அர்த்தம் அடியில்காண்க.

... (வா) (சுக்கில யஜுஸ்) வாஜஸநேய ஸம்ஹிதைக்குச் சேர்ந்த ...ஷத்.

... (ஸா) ஸாமவேதத்திற்குச் சேர்ந்த உபநிஷத்.

... (ய) யஜுர்வேதத்திற்குச் சேர்ந்த உபநிஷத்.

... (அ) அதர்வணவேதத்திற்குச் சேர்ந்த உபநிஷத்.

... (ரு) ருக்குவேதத்திற்குச் சேர்ந்த உபநிஷத்.

... (சு,ய,கா) சுக்கில யஜுர்வேதத்திற் காண்வ சாகையைச் ...ந்தது.

... (சு,ய) சுக்கில யஜுர்வேதத்திற்குச் சேர்ந்தது.

...மல்கண்ட வேதங்களில் வாஜஸநேயஸம்ஹிதையைச்சேர்ந்த ...ஷத்துக்கள் ஒன்பது. மேற்படி வேதத்திற்குச்சேர்ந்த சுக்கில ... இதின் ஒருபாகமான காண்வசாகையுள்பட உபநிஷத்துக்கள் ... ஆக பத்தொன்பதுபநிஷத்துக்களைத் தொடங்குகையிலும் முடி...லும் அடியில்கண்ட சாந்தியைச் சொல்லவேண்டும்.

...பூர்ணமத: பூர்ணமிதம் । பூர்ணாத் பூர்ணமுதச்யதே ।
...பூர்ணஸ்ய பூர்ணமாதாய । பூர்ணமேவாவஶிஷ்யதே ॥
...ஓம். ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: । ஹரி: ஓம்.

ஸாமவேதத்தைச் சேர்ந்த பதினாறு உபநிஷத்துக்களைத் துடங்குகையிலும் முடிக்கையிலும் அடியில்கண்ட சாந்தியைச் சொல்லவேண்டும்.

𑍐 𑌆𑌪𑍍𑌯𑌾𑌯𑌨𑍍𑌤𑍁 𑌮𑌮𑌾𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 । 𑌵𑌾𑌕𑍍𑌪𑍍𑌰𑌾𑌣𑌶𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌃𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌮𑌥𑍋
𑌬𑌲𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌿 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍌𑌪𑌨𑌿𑌷𑌦𑌂 ।
𑌮𑌾𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌰𑌾𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌂 । 𑌮𑌾 𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑍋𑌤𑍍
𑌅𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌂 𑌮𑍇𑌽𑌸𑍍𑌤𑍁 । 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌨𑌿𑌰𑌤𑍇 ।
𑌯 𑌉𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑍁 𑌧𑌰𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌮𑌯𑌿 𑌸𑌨𑍍𑌤𑍁 ॥
𑍐 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌹𑌰𑌿𑌃 𑍐.

யஜுர்வேதத்தைச்சேர்ந்த முப்பத்திரண் டுபநிஷத்துக்களைத் துடங்குகையிலும் முடிக்கையிலும் அடியில்கண்ட சாந்தியைச் சொல்லவேண்டியது.

𑍐 𑌸𑌹 𑌨𑌾𑌵𑌵𑌤𑍁 । 𑌸𑌹 𑌨𑍌 𑌭𑍁𑌨𑌕𑍍𑌤𑍁 । 𑌸𑌹 𑌵𑍀𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑌵𑌾𑌵𑌹𑍈 । 𑌤𑍇𑌜𑌸𑍍𑌵𑌿 𑌨𑌾𑌵𑌧𑍀𑌤𑌮𑌸𑍍𑌤𑍁 । 𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑌾𑌵𑌹𑍈 ॥ 𑍐 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌹𑌰𑌿𑌃 𑍐.

அதர்வண வேதத்திற்குச்சேர்ந்த முப்பத்தோ ருபநிஷத்துக்களைத்துடங்குகையிலும் முடிக்கையிலும் அடியில்கண்ட சாந்தியைச் சொல்லவேண்டியது.

𑍐 𑌭𑌦𑍍𑌰𑌂 𑌕𑌰𑍍𑌣𑍇𑌭𑌿𑌃 𑌶𑍃𑌣𑍁𑌯𑌾𑌮 𑌦𑍇𑌵𑌾𑌃 । 𑌭𑌦𑍍𑌰𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌮𑌾𑌕𑍍𑌷𑌭𑌿𑌰𑍍𑌯𑌜𑌤𑍍𑌰𑌾𑌃 । 𑌸𑍍𑌥𑌿𑌰𑍈𑌰𑌙𑍍𑌗𑍈𑌸𑍍𑌤𑍁𑌷𑍍𑌟𑍁𑌵𑌾𑌂𑌸𑌸𑍍𑌤𑌨𑍂𑌭𑌿𑌃 𑌵𑍍𑌯𑌶𑍇𑌮 𑌦𑍇𑌵𑌹𑌿𑌤𑌂 𑌯𑌦𑌾𑌯𑍁𑌃 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌵𑍃𑌦𑍍𑌧𑌶𑍍𑌰𑌵𑌾𑌃 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌨𑌃 𑌪𑍂𑌷𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌃 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌨𑌸𑍍𑌤𑌾𑌰𑍍𑌕𑍍𑌷𑍍𑌯𑍋 𑌅𑌰𑌿𑌷𑍍𑌟𑌨𑍇𑌮𑌿𑌃 । 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌨𑍋 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌰𑍍𑌦𑌧𑌾𑌤𑍁 ॥ 𑍐 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌹𑌰𑌿𑌃 𑍐.

ருக்குவேதத்தைச் சேர்ந்த பத்துபநிஷத்துக்களைத் துடங்குகையிலும் முடிக்கையிலும் அடியில்கண்ட சாந்தியைச் சொல்லவேண்டியது.

𑍐 𑌵𑌾𑌙𑍍𑌮𑍇 𑌮𑌨𑌸𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌾 । 𑌮𑌨𑍋 𑌮𑍇 𑌵𑌾𑌚𑌿 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 । 𑌆𑌵𑌿𑌰𑌾𑌵𑍀𑌰𑍍𑌮 𑌏𑌧𑌿 । 𑌵𑍇𑌦𑌸𑍍𑌯 𑌮 𑌆𑌣𑍀𑌸𑍍𑌥𑌃 । 𑌶𑍍𑌰𑍁𑌤𑌂 𑌮𑍇 𑌮𑌾 𑌪𑍍𑌰𑌹𑌾𑌸𑍀𑌃 । 𑌅𑌨𑍇𑌨𑌾𑌧𑍀𑌤𑍇𑌨𑌾𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌸𑌨𑍍𑌦𑌧𑌾𑌮𑌿 । 𑌋𑌤𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 । 𑌤𑌨𑍍𑌮𑌾𑌮𑌵𑌤𑍁 । 𑌤𑌦𑍍𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑌤𑍁 । 𑌅𑌵𑌤𑍁 𑌮𑌾𑌂 । 𑌅𑌵𑌤𑍁 𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 𑌅𑌵𑌤𑍁 𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑌂 ॥ 𑍐 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 । 𑌹𑌰𑌿𑌃 𑍐.

𑍐 𑌤𑌤𑍍𑌸𑌤𑍍.

முக்திகோபநிஷத் அட்டவணை முற்றிற்று.

---

# பிழை திருத்தம்.

| உபநிஷத்துகளின் பெயர். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| மைத்திராயண்ணியுபநிஷத் | உ | உக | மருத்தன் ப்ரதன் ‖ தலான | மருத்தன் பரதன் ‖ முதலான |
| ,, | கக | ரு | கிரித்திக்காக | கிர்த்திக்காக |
| ,, | உச | தலைவரி | மைத்திராயண்ணியுயநிஷத் | மைத்திராயண்ணியுபநிஷத் |
| ,, | ,, | உசு | ஒருவிதகொடி | ஒருவிதக்கோடி |
| ,, | சஅ | உசு | வஸ்ந்தா | வஸந்தா |
| ,, | ருO | உO | சுவருடம்· விஸ்தார | சுவரூபம் விஸ்தார |
| ,, | ருக | க[illegible] | (அதைஅலக்ஷியம் செய்து | (அதை அலக்ஷியம்செய்து) |
| மைத்திரேயோபநிஷத் | ச | ருஅ | செய்ப்வேண்டிசந்தி | செய்யவேண்டியசந்தி |
| ,, | ரு | உ | சித்தாகிற் | சித்தாகிற |
| ,, | சு | உஉ | பஜீ | பஜி |
| ,, | அ | கச | விடுபட்டனுயு | விடுபட்டவனுயு |
| ஸர்வஸாரோபநிஷத் | உ | உள | அலமரம் | ஆலமரம் |
| ,, | ரு | கச | ப்படுகிறுன் | ப்படுகின்றது |
| நாரதபரிவிராஜகோபநிஷத் | கக | எ | [illegible] | [illegible] |
| ,, | கஉ | கள | மொட்டத்தலை | மொட்டைத்தலை |
| ,, | ,, | உரு | தூக்கமில்லாதனுய் | தூக்கமில்லாதவனுய் |
| ,, | ,, | ,, | மானவமானமில்லாதனுய் | மானவமானமில்லாதவனுய் |
| ,, | கரு | கஉ | மனதையடைக்கின | மனதையடக்கின |
| ,, | கஅ | உக | கிருஷ்ணுஜன | கிருஷ்ணுஜின |
| ,, | ,, | ருஉ | [illegible] | [illegible] |
| ,, | உள | க[illegible] | ஒருப்போதும் | ஒருபோதும் |
| ,, | சச | உஉ | சமமந்த | யம்பந்த |
| பைங்களோபநிஷத் | ரு | சரு | பரமார்த்திக | பாரமார்த்திக |
| ,, | சு | ருச | சிரார்த்தமுமில்லை | சிராத்தமுமில்லை |
| வராகோபநிஷத் | ச, ,, சு | கஉ, கச, ருக | பிரமத்தை | பிர்ம்மத்தை |
| ,, | அ | அ | காரியமுமில்லாளன் | காரியமுமில்லாதவன் |
| ,, | ,, | ருஉ | உயர்தாழ்வு | உயர்வுதாழ்வு |
| ,, | சு | க | குறன்) இந்த | றுன்). இந்த |
| ,, | கஉ | கஉ | நாசம்மடைகிறது | நாசமடைகிறது |
| ,, | ,, | ருஉ | விவர்த்தோபாதனம் | விவர்த்தோபாதானம் |
| ,, | கரு | ரு | பிர்மவித் | பிர்ம்மவித் |
| ,, | கசு | கசு | பிரஞ்ஞாஸ | பிரஞ்ஞாநஸ |
| ,, | ச | உள | பிராரப்பதம் | பிராரப்தம் |
| …க்ஷிகோபநிஷத் | கரு | உசு | பஜீ | பஜி |